# இரட்டை மூடி உடைய புதிய டின் வருகிறது!

## உங்கள் டால்டா அதனுள் தூய்மையோடும் புதுமையோடும் இருக்கும்

மேற்புற மூடி

ஸீலிட்ட உட்புற மூடி

- தூய்மையோடும், புதுமையோடும் இருக்கும் — நீங்கள் வாங்கும் போது. ஏனென்றால், காற்றுப்புகாத ஸீலிட்ட உட்புற மூடி, தயாரித்த வண்ணமாக உங்கள் டால்டாவைப் பூரண பாதுகாப்புடன் வைத்திருக்கிறது.
- தூய்மையோடும், புதுமையோடும் இருக்கும் — நீங்கள் சமையலுக்கு உபயோகிக்கும்போதுகூட. ஏனென்றால் மேற்புற மூடியானது நன்றாக அடக்கம் செய்யப்படும். உள்ளேயிருக்கும் டால்டாவை தூசியினின்றும், ஈ முதலிய ஜந்துக்களினின்றும் பாதுகாக்கிறது.
- மேலும் திறப்பதற்கு மிக எளிது — உபயோகிப்பதற்கும் மிக சௌகரியமானது.
- மிகவும் பயன்படக் கூடியது! காலியாகும் டால்டா டின்கள் சாமான்கள் வைப்பதற்கு வசதியாகப் பயன்படும்.

½ பவுண்டு, 1 பவுண்டு, 2 பவுண்டு*, 5 பவுண்டு*, 10 பவுண்டு* டின்களில் டால்டா விற்கப்படுகிறது.
*இரட்டை மூடி உடைய டின்கள்.




**டால்டா ப்ராண்ட் வனஸ்பதி**

HVM. 282-50 TM

மலர் 16
இதழ் 20

# கல்கி

துன்முகி ஹூ
மார்கழி 2

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



# ரஸ்தாக்கள் அநேகம் தேவை

நம் நாட்டிலுள்ள நகரங்களும், கிராமங்களும் ஒன்றுக்கொன்று வெகு தூரத்தில் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு சதுர மைல் விஸ்தீரணத்திற்கு 0.2 மைல் ரஸ்தாக்கள் உள்ளன. ஒவ்வொரு லக்ஷம் ஜனத்தொகைக்கு சராசரி 68 மைல் நீளம் ரஸ்தாக்கள்தான் இருப்பதாக கணக்கிடப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கிராமமும் முக்கிய ராஜ ரஸ்தாக்களிலிருந்து 5 மைல் தூரத்திலுள்ளதாகவே இருக்கும்பொருட்டு இரண்டாவது ஐந்து வருஷ திட்டத்தில் சுமார் 271 கோடி ரூபாய்கள் செலவிடப்பட்டு வருகிறது. முக்கிய ரஸ்தாக்களுக்கு கருப்பு நிறமான மேல் பரப்பை ஏற்படுத்தவேண்டுமென்பதுதான் நோக்கம்.

பர்மா-ஷெல் ரிபைனரியில் பிரதி தினமும் 600 டன் எடையுள்ள பிடுமென் உற்பத்தி செய்வதோடுமட்டுமல்லாமல் குளிர்ந்த நிலையிலேயே உபயோகிக்கக்கூடிய விசேஷமான பலரகப்பட்ட பிடுமென்களையும் தயாரித்து வருகிறார்கள். பிடுமென் உஷ்ணப்படுத்த முடியாத சந்தர்ப்பங்களில் இந்த விசேஷமான ரகங்கள் ரஸ்தாக்களுக்கு பயன்படுகின்றன.

பர்மா-ஷெல் கம்பெனியாரால் பிடுமென் பீப்பாய்களில் விநியோகிக்கப்படுகிறது. பம்பாயில் பிடுமென் தேவையுள்ளவர்களுக்கு ரிபைனரியிலிருந்தே நேரடியாக லாரிகளின் மூலம் அனுப்பப்படுகிறது.

பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பதால் பெற்றுத்தந்தவைகளெல்லாம் நாங்கள் ரஸ்தாக்கள் சம்பந்தமான அனுபவங்களை அறிந்துகொண்டதே.



மலர் 16 | தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற | துன்முகிஆ
இதழ் 20 | தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | மார்கழி 2உ

# காமன் வெல்த் உறவு

ஒருவருடன் நமக்கு நீண்ட நாட்களாகத் தொடர்பு ஏற்பட்டு விட்டால், ஒவ்வொரு சமயத்தில் அந்த நபரின் குறைகளைக் கூடக் காண முடிவதில்லை. கண்டாலும், 'குறைகள் இருந்தால் இருந்து விட்டுப் போகட்டுமே' என்று சமாதானம் கூடச் சொல்லிக் கொள்ளச் செய்கிறது.

இத்தகைய மனோபாவத்தின் காரணமாகவே, பிரிட்டிஷார் நம்மை ஆட்சி நடத்திய காலத்தில், சுதந்திரக் கிளர்ச்சிக்கு எதிராகச் சிலர் பேசினர். 'வெள்ளைக்காரன்தான் ஆண்டு விட்டுப் போகட்டுமே, நமக்கு என்ன குறைந்து விட்டது?' என்று நம்மில் சிலர் கூறினார்கள். பழக்கமே இதற்கெல்லாம் காரணம்.

* * * *

சர்க்கார் நிர்வாகத்தில், ராஜதந்திர உறவுகளில் இத்தகைய மனோபாவத்துக்கு இடமில்லை.

பிரிட்டிஷ் மக்கள் நல்லவர்கள்தான். ஆனால் நாம் சுதந்திரப் போராட்ட காலத்தில் பிரிட்டிஷ் சர்க்காருடன்தான் சண்டை யிட்டோம். பிரிட்டிஷ் மக்கள் நல்லவர்களாயிற்றே என்று சும்மாயிருந்து விடவில்லை.

மக்கள் எப்படி யிருப்பினும், ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் உறவும் காரியங்களும் வைத்துக் கொள்வது சர்க்கார்களுடன்தான்.

அந்தந்த நாட்டுச் சர்க்கார்களின் போக்கைப் பொறுத்தே உறவும் நட்பும் வைத்துக் கொள்வது உலக நாடுகளின் நடவடிக்கையாக இருந்து வருகிறது.

சூடன், எகிப்தின்மீது தொடுத்த போரை பிரிட்டிஷ் மக்கள் ஆதரிக்கவில்லை. வாஸ்தவம்தான். ஆனாலும் பிரிட்டிஷ் சர்க்கார் அநியாயப் போர் நடத்தி வந்தது. அந்தச் சர்க்காருக்குப் பாராளுமன்றத்தில் பெரும்பான்மையோரின் கட்சிச் செல்வாக்கு இருக்கிறது. ஆகவே அந்தச் சர்க்காருடன் இந்திய சர்க்கார் ஒத்துழைப்பது தவறு. நம்முடைய பிரதமர் நேரு அவர்கள் மக்கள் சபையில் பேசியது ஆங்கில சர்க்காருக்குப் புது பலம் தந்து விட்டது. எதிர்க்கட்சியினுடைய எதிர்ப்பின் பலத்தைக் குறைத்து விட்டது.

இந்தியா காமன்வெல்த்தை விட்டு விலகி யிருந்தாலும் அல்லது விலகுவோம் என்று எச்சரிக்கை செய்திருந்தாலும் இதற்குள் இந்தியாவின் செல்வாக்கு மத்திய ஆசியாவில் மிகவும் அதிகரித்திருக்கும்.

மத்திய கேந்திரத்தில் பாக்தாத் ஒப்பந்தம், ஸீட்டோ ஒப்பந்தம் முதலியவை கலகலத்து விட்டிருக்கும்.

எகிப்தின்மீது பிரிட்டன் போர் தொடுத்ததைக் கண்டித்து, இந்தியா காமன்வெல்த்தை விட்டிருந்தால், இஸ்லாம் மதத்தைச் சேராத இந்தியாவே இவ்வளவு பெரிய தியாகம் செய்திருக்கிறதே என்று பாக்தாத் ஒப்பந்த நாடுகளிலுள்ள மக்கள் புது விழிப்படைந்திருப்பார்கள். தங்கள் அரசாங்கங்களையும் பாக்தாத் ஒப்பந்தத்தைக் கிழித்துக் குப்பைக் கூடையில் போடச் செய்திருப்பார்கள். ஆசிய ஐக்கியம் மகோன்னத சக்தி அடைந்திருக்கும். பாகிஸ்தான் மக்களும், தங்களுக்காகத் தெரியாமலும் சொன்னாலும் தெரிந்து கொள்ள முடியாமலும் இருக்கும் தங்கள் தலைவர்களை ஒதுக்கி வைத்து விட்டு, இந்தியாவுடன் நேச மனப்பான்மை வளர்த்துக் கொள்ளக்கூடிய தலைவர்களைத் தேர்ந்தெடுத்திருப்பார்கள். பாகிஸ்தானில் சுஹரவர்தி சர்க்கார் கவிழ்ந்து புதிய சர்க்கார் ஏற்பட்டிருக்கும். இவையெல்லாம் இப்பொழுது சொல்லிப்

பயனில்லை. காலம் கடந்து விட்டது என்று நினைக்கலாம். உண்மை. ஆயினும் காலம் முற்றிலும் கடந்து விடவில்லை என்பதே நம்முடைய கருத்து.

*  *  *

'காமன்வெல்த் நாடுகள்' என்று சொல்லிக் கொண்டு அதில் முக்கிய அங்கத்தினரான பிரிட்டன், அந்தக் கூட்டுறவிலுள்ள இந்தியாவுடன் கலந்தாலோசிக்காமல் எகிப்தின்மீது போர் தொடுத்தது. இது எந்த நியாயத்தில் சேர்ந்தது?

இது என்ன மரியாதை? அலட்சியம் செய்யப்பட்டது சிறு விஷயமல்ல. உள்நாட்டு விவகாரம் அல்ல. மிகப் பெரிய விஷயம், யுத்தமும் இந்திய வியாபாரமும் எல்லாம் சம்பந்தப்பட்ட விஷயம். நம்மை ஒரு பொருட்டாக மதியாத கூட்டத்தில் நாம் ஒட்டிக் கொண்டிருப்பது கௌரவம் அல்ல.

ஒருபுறம் எகிப்துடன் நமது நட்பைச் சொல்லிக் கொண்டு அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டு விட்டு, மற்றொருபுறம் அதன் எதிரியான பிரிட்டனுடன் காமன்வெல்த்தில் இருப்பது என்றால் நமது நிலைமை விந்தையாக இருக்கிறதல்லவா?

எல்லாவற்றையும் விட, இப்பொழுது பிரிட்டன் எகிப்திலிருந்து வெளியேறி விட்டாலும், சூயெஸை நாஸருக்குத் திருப்பிக் கொடுக்காமல் இருக்கவும் ஐ. நா. துருப்புக்களைச் சூயஸ்நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளும்படி செய்யவும் முயன்று வருகிறது.

இந்த அநீதிச் சூழ்ச்சிக்கார பிரிட்டிஷ் சர்க்காருடன் இந்தியா இன்னும் தொடர்பு வைத்துக் கொள்வானேன்? அந்தத் தொடர்பு அக்கிரம சூழ்ச்சிக்குச் சாதனமாகும்.

இப்பொழுது காமன்வெல்த் உறவை வெட்டிக் கொள்வது ராஜ தந்திரமான காரியமாகும். காமன்வெல்த் உறவு வெட்டுப் பட்டால் எல்லாத் தொடர்புகளும் போய் விடாது. பர்மாவைப்போல், அமெரிக்காவைப்போல் எல்லாத் தொடர்புகளும் இந்தியாவும் வைத்துக் கொள்ளலாம்.

ஜவாஹர்லால்ஜி சொல்லி விட்டாரே என்று மக்கள் தங்களுடைய புத்தியை மரத்துப் போக விடலாகாது. நம்முடைய பிரதமரிடம் நமக்குள்ள அன்பும் மதிப்பும் குறையவில்லை. இந்த விஷயத்தில் நம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பது நம்முடைய கடமை என்று எண்ணியே இதை எழுதினோம்.

# மாயமாய் மறைந்த குண்டு!

சந்தேகம் ஊர்ஜிதமாகி விட்டது.

அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டுகள் சம்பந்தமாக ராஜாஜி அவர்கள் பலமுறை எழுப்பிவந்த சந்தேகம் ஊர்ஜிதமாகிவிட்டது.

இன்று இரண்டு பெரு வல்லரசுகளிடம் தான் அணுகுண்டும், ஜலஜ குண்டும் இருக்கின்றன. இந்த நாடுகள் பரஸ்பரம் பகைமை கொண்டிருக்கின்றன. இந்நிலையில் உலகிலுள்ள மற்ற நாடுகள் எல்லாம் எப்போது அணுகுண்டு யுத்தம் மூண்டு விடுமோ என்ற தீராத பயத்தில் வாழ்ந்து வருகின்றன.

ஆனால் இந்நாடுகள் என்ன சொல்கின்றன? ''உலகை அழிக்கவல்ல இந்த நாசகரமான அணுகுண்டுகளையும் ஜலஜ குண்டுகளையும் எங்கள் பகைவர்கள் எங்களை எதிர்த்தால் தான் நாங்கள், எங்கள் தற்காப்புக்காகப் போடுவோம்'' என்று கூறுகின்றன.

''உங்கள் நாட்டிலிருந்து குறி பார்த்து அனுப்பும், பயங்கர குண்டுகள், நீங்கள் நினைக்கும் தேசத்தில்தான் போய் விழும் என்பது என்ன நிச்சயம்? குறி தவறி இடையிலுள்ள நிரபராதியான நாடுகளின் மீது விழுந்து நாசம் உண்டாக்கினால் என்ன செய்வது?'' என்பது ராஜாஜியின் கேள்வி. ராஜாஜியின் இந்தச் சந்தேகத்தைச் சமீப நிகழ்ச்சி ஒன்று ஊர்ஜிதமாக்கி விட்டது.

சில தினங்களுக்கு முன் அமெரிக்கா, தனது பிளாரிடா பகுதியிலுள்ள ராணுவ விமான நிலையத்தி லிருந்து தானே சென்று குறித்த இடத்தில் பாயும் ஓர் பயங்கர குண்டை செலுத்தியது. ஆனால் அந்தப் பயங்கர ஆயுதம் எங்கே போயிற்று என்று தெரியவில்லையாம். ஒரு வேளை தென் அமெரிக்காவிலுள்ள அமேஸான் காடுகளில் போய் விழுந்திருக்கக் கூடும் என்று சந்தேகப்படுகிறார்கள்.

எவ்வளவுதான் நுட்பமான யந்திரங்களும், நுட்பமான அறிவுத் திறனும் பெற்றிருந்தாலும் மனிதனின் காரியங்கள் தவறாகப் போய் விடும் என்பதற்கு இந்நிகழ்ச்சி ஒன்றே போதிய அத்தாட்சியாகும். சாமர்த்தியமாக செய்யப்பட்ட ஒரு ஆளில்லா மோட்டார் வண்டியைச் சென்னை மவுண்ட்ரோட்டில் விட்டுச் சோதனை நடத்தினால் எப்படியிருக்கும்? அதைவிட எத்தனையோ மடங்கு அக்கிரமம் இந்த ஆளில்லா அணு ஆயுதங்கள்.

இதைத் தவிர மற்றொரு செய்தியும் நமக்குக் கிடைத்திருக்கிறது. அதுவும் ஒரு உண்மையை விளக்குவதாக இருக்கிறது.

அமெரிக்கா பிரிட்டனுக்கு ராணுவத் தளவாடங்கள், ஆயுதங்கள் எல்லாம் ஏற்கனவே கொடுத்திருக்கிறது. அப்படிக் கொடுக்கும் போது, வட அட்லாண்டிக் உடன்படிக்கை செய்து கொண்டுள்ள (நாட்டோ) வரம்புக்குள் தான் இந்த ஆயுதங்களை உபயோகிக்க வேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லியே இந்த உபகரணங்களை அமெரிக்கா பிரிட்டனிடம் கொடுத்திருக்கிறது.

ஆனால் பிரிட்டன், அமெரிக்காவுக்குக் கொடுத்த வாக்கைக் காற்றில் பறக்க விட்டு விட்டு, அமெரிக்க ஆயுதங்களையும் குண்டுகளையும் எகிப்தில் உபயோகித்திருக்கிறது. ஜனாதிபதி ஐஸன்ஹோவர் இதை ஆட்சேபித்திருப்பதாகத் தெரிகிறது.

ஆனால், பிரிட்டனோ, அமெரிக்கா ஆயுதங்களும், தங்கள் ஆயுதங்களும் பிரிக்க முடியாதபடி இரண்டறக் கலந்து போயிருக்கின்றன! அதனால்தான் அமெரிக்க ஆயுதங்களை எகிப்தில் உபயோகிக்க நேர்ந்தது என்று சமாதானம் சொல்லியிருக்கிறது.

# திருத்த முடியுமா?



"இந்த அநியாயக்காரர்கள் கூட்டத்தில் நமக்கு என்ன வேலை?"
"அவர்களை யெல்லாம் நான் திருத்தி விடப் போகிறேன்"
கனடா
ஆஸ்திரேலியா
பிரிட்டன்
காமன் வெல்த் நாடுகள்
தென் ஆப்பிரிக்கா
பாகிஸ்தான்

ஒருவனிடம் ஐந்து ரூபாய் கொடுத்து ஒரு ரூபாய்க்கு அரிசியும் ஒன்றரை ரூபாய்க்குப் பருப்பும் வாங்கி மீதி இரண்டரை ரூபாயை ஜவுளிக் கடையில் பழைய பாக்கிக்காகக் கொடுத்துவிடு என்று அனுப்பினால், கடைக்குப் போனவன் திரும்பிவந்து எந்த ரூபாய்க்கு அரிசி, எந்த ரூபாய்க்குப் பருப்பு என்று விவரம் தெரியாமல் குறிப்பிட்டுக் கொடுக்கும்படி கேட்டானாம்.

இந்தக் கதையின் கணக்காகவே இருக்கிறது இந்த ஆயுதங்களின் கணக்கு. எந்தக் குண்டை யார் பேரில் போடுவது என்பதல்ல விஷயம். ஒன்றுக்கு உபயோகப்படும்படி ஆயுதங்களைப் பெற்றால் எஞ்சிய ஆயுதங்கள் மற்றொரு காரியத்துக்கும் பயன் படும். இதை அறிந்தேதான் ஐஸன் ஹோவருடைய ஆட்சேபனை மௌனத்தில் முடிந்திருக்கிறது.

உலகத்தினுடைய அதிர்ஷ்டம், ஈடன்பிரபுவின் கோபம் எகிப்தின்மீது பொங்கிக் கிளம்பியபோது பிரிட்டனிடம் அணுகுண்டுகள் அவ்வளவாக இருக்க வில்லை. அக்கிரமக்காரர்களிடம் அணுகுண்டுகள் இருந்தால் உலகத்தின் முடிவு நிச்சயம். யார் எப்பொழுது அக்கிரமக்காரர்கள் ஆவார்கள் என்று முன் கூட்டியே யறிவது கஷ்டம்.

## பிரசார நாடகம் பலிக்காது!

உலக அரங்கில் பாரத நாட்டின் மதிப்பு மேலும் உயர்ந்திருக்கிறது. இந்த உண்மையை, இந்தியாவைத் தன் விரோதியாக நினைத்துக் கொண்டிருக்கும் பாகிஸ்தான் தலைவர்களே ஒத்துக் கொள்கிறார்கள்! நேரடியாக அல்ல, தங்களுடைய அதிசயமான பாஷையில் ஒப்புக் கொள்கிறார்கள்.

அதாவது உலக நாடுகளிடையே இந்தியாவின் மதிப்பு உயரும்போதெல்லாம் பாகிஸ்தான் தலைவர்கள் அதற்கு இழுக்கு ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக ஆதாரமற்ற அபாண்டமான குற்றச்சாட்டுகளிலும் பித்தலாட்டப் பிரசாரங்களிலும் வசைமாரியிலும் ஈடுபடுவது வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. சென்ற சில நாட்களாக அவர்களின் குற்றச்சாட்டுகளும் பொய்ப் பிரசாரங்களும் உச்ச நிலையை அடைந்திருக்கின்றன.

இதிலிருந்து இந்தியாவின் பெருமையும் புகழும்கூட உலகில் உச்சநிலையை அடைந்திருக்கின்றன என்பதை உணரலாம் அல்லவா!

பாகிஸ்தான் பிரிவினையை இந்தியா விரும்ப வில்லை என்றும் எனவே பாகிஸ்தான் மீது இந்தியா ஆக்கிரமிக்கலாம் என்றும் பாகிஸ்தான் பிரதம மந்திரி ஸ்ரீ சுஹ்ரவர்தி கூறுகிறார். காஷ்மீர் பிரச்னையை மறுபடியும் ஐக்கிய நாடுகள் சபையின் பரிசீலனைக்குக் கொண்டு வரப் போவதாகவும் அவர் பயமுறுத்தியுள்ளார்.

பாக் அயல்நாட்டு மந்திரி பிரோஸ்கான் நூன் பொய்ப் பிரசாரத்தில் எல்லோரையும்



சென்னை ராஜ்யத்தின் புதிய கவர்னரான திரு ஏ. ஜே. ஜான், சென்ற 10-ந் தேதி ராஜாஜி மண்டபத்தில் நடந்த பதவி ஏற்கும் வைபவத்தின் போது விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார். அந்த வைபவத்துக்கு மந்திரிகளும், ஹைகோர்ட் நீதிபதிகளும், உயர்தர அதிகாரிகளும் ஆயிரக்கணக்கான பொதுமக்களும் விஜயம் செய்து சிறப்பித்தார்கள். பிரமாணப் பத்திரத்தைப் பிரதம நீதிபதி ஸ்ரீ ராஜமன்னார் வாசிக்க, புதிய கவர்னர் திரு ஜான் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்வதைப் படத்தில் காணலாம்.

மிஞ்சி விட்டார். அந்த அதிசய மனிதர் கூறியிருப்பதைக் கேளுங்கள் :

''நேருஜி ஆக்கிரமிப்பு புத்தி படைத்தவர். சிறிய நாடுகளை யெல்லாம் அழித்துவிட அவர் உறுதி கொண்டிருக்கிறார். உதாரணமாக ஹைதராபாத் மீதும் ஜுனாகாத் மீதும் படையெடுத்து அவற்றை ஆக்கிரமித்துக் கொண்டார். புதுச் சேரியையும் தம் வசப் படுத்திக் கொண்டு விட்டார். கோவா மீதும் படையெடுக்க நேருஜி முயற்சித்தார். ஆனால் போர்ச்சுகீசியர்கள் வலிமை பொருந் தியவர்களாதலால், அவர்களிடம் நேருவின் தந்திரம் பலிக்க வில்லை.''

இவை போல், பிரோஸ் கான் நூனின் பொய் மூட்டையில் இன்னும் வேறு பல சரக்குகளும் அடங்கி யிருக்கின்றன !

* * *

பாகிஸ்தான் தலைவர்களுக்கு ஜவாஹர் லால்ஜி அளித்துள்ள கண்யமான பதில், அவர்களுடைய பிரசாரக் கோட்டையைத் தகர்த்து, அவர்களின் வேஷத்தை அம்பலப் படுத்தி விட்டது.

பாகிஸ்தான் இந்தியாவிலிருந்து பிரிந்தது பிரிந்ததுதான். இனி அது இந்தியாவுடன் இணைவது இந்தியாவுக்கே பெரிதும் ஆபத் தாக முடியும் என்று நேருஜி ராஜ்ய சபையில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். காஷ்மீர் பிரச்னையை மறுபடியும் ஐ. நா. சபை பரி சீலனை செய்வதாயின், முதன் முதலாகக் காஷ்மீர் மீது ஆக்கிரமித்த பாகிஸ்தான் விஷ யத்தில் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள் ளப் போகிறார்கள் என்றும் கேட்டிருக்கிறார்.

பாகிஸ்தான் சர்க்கார் காஷ்மீரில் உள்ள தங்கள் துருப்புக்களை வாபஸ் செய்ய வேண் டும் என்று ஐ. நா. கமிஷன் கட்டளையிட்டு எட்டு ஆண்டுகள் சென்றுவிட்டன. ஆனால், அந்தக் கட்டளையைப் பாகிஸ்தான் நிறை வேற்றவில்லை.

பிற நாடான காஷ்மீர் மீது அக்கிரமமாகப் படையெடுத்து, அங்கு சொல்லொணு அட்டூழியங்கள் புரிந்த பாகிஸ்தான், இந்தியா வைச் சேர்ந்த ஹைதராபாத்தையும் ஜுனு காதையும் இந்தியாவுடன் ஐக்கியப்படுத்திக் கொண்டது குற்றம் என்று கூறும் பிரசார நாடகத்தை உலகம் நம்பும் என்று அவர்கள் எண்ணுவது பைத்தியக்காரத்தனம் அல்லவா?

* * *

பாகிஸ்தான் தலைவர்களின் பொறுமையும் வெறியும் எதில் வந்து முடியுமோ என்ற கவலை யும் தற்போது ஏற்பட்டிருக்கிறது.

பிரிட்டனும் பிரான்சும் அமெரிக்காவிட மிருந்து தாங்கள் பெற்ற போர்த் தளவாடங் களைக் கொண்டு எகிப்து மீது படையெடுத்தது போல், பாகிஸ்தான் அமெரிக்காவிடமிருந்து பெற்றுள்ள யுத்த தளவாடங்களைக் கொண்டு காஷ்மீர் மீது படையெடுக்கலாம் அல்லவா?

தாங்கள் அனுப்பும் போர்த் தளவாடங் களைப் பாகிஸ்தான் துஷ்பிரயோகம் செய்யா மல் தடுப்பதாக அமெரிக்க ஜனாதிபதி ஏற் கெனவே இந்தியாவுக்கு வாக்களித்துள்ளார்.

எகிப்து மீது பிரிட்டனும் பிரான்சும் படை யெடுத்ததைத் தடுக்க முடியாத அமெரிக்கா, காஷ்மீர் மீது பாகிஸ்தான் படையெடுத்தால், அதைத் தடுக்க என்ன முறைகளைக் கைக் கொள்ளும் என்ற கேள்வி இப்போது எழுந் திருக்கிறது.

நவம்பர் மாதச் சிறுகதைப் போட்டி
நூறு ரூபாய் பரிசு பெற்ற
'பணமா? பாசமா?'
என்னும் கதை அடுத்த இதழில் வெளியாகிறது.

பரிசு பெற்றவர் :
திரு அ. ரா. சீனிவாசன், ''சரணை''
64, எல்லம்மன் கோவில் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை-17.

# பி.ஸி.ஜிக்கு மற்றொரு தோல்வி!

டாக்டர் மையர்ஸ் என்ற உலகப் பிரசித்தி பெற்ற அமெரிக்க டாக்டர் நவம்பர் 24ம் தேதி ராஜாஜிக்கு எழுதியுள்ள கடிதத்தைப் பாருங்கள் :

"பி. ஸி. ஜி ஏன் கூடாது?" என்ற தலைப்பில் ராஜாஜி எழுதியுள்ள புஸ்தகத்தைப் படித்து விட்டுப் பின் வருமாறு எழுதியிருக்கிறார் :

"தங்களது சிறுநூலை மிகுந்த சந்தோஷத்தோடும் ஆர்வத்தோடும் படித்தேன்.

வைத்தியர் ஒருவர் தமது வாழ்நாள் முழுதும் க்ஷயரோக ஆராய்ச்சியில் செலவிட்டு எழுதினால் எப்படி எழுதுவாரோ, அப்படித் தாங்கள் இந்த விஷயத்தைக் கையாண்டு எழுதியிருக்கிறீர்கள். இதைப் படித்த பிறகு தங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற பேர் ஆர்வம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. நான் தங்களைப் பற்றியும் தாங்கள் இந்த 'டியூபர்குலோஸிஸ்' விஷயத்தில் எப்படி இவ்வளவு ஆர்வம் கொள்ள நேர்ந்தது என்பதைப் பற்றியும் அறிய ஆவலாக இருக்கிறேன்.

சென்னையில் நடக்கும் பி. ஸி. ஜி இயக்கத்தைப் பற்றிப் பல முறை வியந்திருக்கிறேன். சென்னையில் பி. ஸி. ஜி சம்பந்தமாக நடைபெற்று வரும் செய்திகளைப் படித்து 'உலகில் இப்படிக்கூட நடக்குமா?' என்று வியந்திருக்கிறேன். இந்த நிகழ்ச்சிகள் தங்களுக்கு மிகுந்த வேதனை அளித்திருக்கும்.

தற்சமயம் தங்கள் கொள்கைகளைப் புறக்கணித்தாலும் முடிவில் நீங்கள் ஜெயிப்பீர்கள் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஏனெனில், உண்மை தங்கள் பட்சத்தில் இருக்கிறது.

நான் ஒரு டாலர் அமெரிக்கப் பணம் அனுப்பியிருக்கிறேன். அதற்குத் தங்கள் புஸ்தகம் எத்தனை பிரதிகள் கிடைக்குமோ (தபால் செலவு உள்பட) அத்தனை அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன். தங்களுடைய பி. ஸி. ஜி புஸ்தகத்தை இங்கு என் நண்பர்களிடையே பரப்ப விரும்புகிறேன். அவர்களுக்கு அது மிகுந்த உற்சாகத்தை யளிக்கும்.

அன்பும் மரியாதையும் கலந்த வணக்கங்கள்

இப்படிக்கு

ஜே. ஏ. மையர்ஸ்"

இப்படிப் பல உலகப் பிரசித்தி பெற்ற டாக்டர்கள் பி. ஸி. ஜி விஷயமாகச் சற்றும் சந்தேகத்துக்கு இடம் வைக்காமல் ராஜாஜியின் கட்சியை ஆதரித்துப் பேசுகிறார்கள். பிடிவாதமாக மத்திய சர்க்காரின் சுகாதார இலாக்கா இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கோடிக்கணக்கான ரூபாய்களை பி.ஸி. ஜிக்காகச் செலவழிக்கப் போவதாக மார் தட்டுகிறார்கள்!

டாக்டர் கரோல் பாமர் சமீபத்தில் சொன்னதிலிருந்து இந்தத் திட்டம் மக்களின் வரிப் பணத்தைக் கடலில் போடுவதுபோல்தான் ஆகும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

# அம்பேத்கர் மறைந்தார்

இந்தியாவின் ஒரு சிறந்த தலைவரை இழந்து விட்டோம். ஹரிஜனங்களின் தலைவர், நிறைந்த படிப்பாளி மறைந்துவிட்டார்.

டாக்டர் அம்பேத்கர் கடந்த ஆறும்தேதி விடியற்காலை தம்முடைய 63-வது வயதில் காலமாகி விட்டார். அவருடைய மறைவு தாழ்த்தப்பட்ட ஏழை ஹரிஜனங்களுக்குப் பேரிடிபோலாகும். அம்பேத்கர் ஹரிஜனங்களின் உயர்வுக்காகக் கடந்த முப்பது ஆண்டுகளாக இடைவிடாமல் பாடுபட்டு உழைத்து வந்தார்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு பிரிட்டிஷ் ஆட்சி ஹிந்து சமூகத்திலிருந்து ஹரிஜனங்களை வேறுபடுத்தி அவர்களுக்குத் தனித் தொகுதி ஏற்படுத்த முயற்சித்தபோது காந்திஜி அதை எதிர்த்து உண்ணாவிரதம் ஆரம்பித்தார். அப்போது ஏற்பட்ட புனா ஒப்பந்தத்தை அம்பேத்கரும் ஒப்புக் கொண்டு கையெழுத்திட்ட பிறகுதான் காந்திஜி தமது உண்ணாவிரதத்தைக் கை விட்டார்.



ஹரிஜனங்கள் இந்த நாட்டில் சட்டப்படி பூரண உரிமை பெற்றிருந்த போதிலும் அம்பேத்கர் திருப்தி அடையவில்லை. ஹிந்து சமூகத்தின் பேரில் அவருக்கு இருந்த கோபம் என்றுமே தீரவில்லை. அதன் காரணமாகத் தம்முடைய கடைசிக் காலத்தில் அவர் பௌத்த மதத்தைத் தழுவினார்.

டாக்டர் அம்பேத்கரின் போக்கு எப்படியிருந்தாலும் அவர் இந்த நாட்டுக்குச் செய்துள்ள ஒப்பற்ற சேவையை நாம் என்றும் மறக்க முடியாது. நமது சுதந்திர சர்க்காரில் அவர் சட்ட மந்திரியாக இருந்து ஆற்றிய பணியையும் அரசியல் நிர்ணய சபையில் சிக்கலான அரசியல் சட்டங்களை உருவகப் படுத்துவதில் அவர் புரிந்துள்ள மகத்தான சேவையும் சரித்திரத்தில் நிரந்தரமான இடம் பெற்றவை. அம்பேத்கரின் மறைவு இந்தத் தேசத்து மக்களுக்கெல்லாம் துக்கம் உண்டாக்கியது என்பதைத் தலைவர்களின் அறிக்கைகளினின்று காணலாம்.



இந்தியாவில் பெரும் அளவில்

# சீட்டுக் கட்டுகள்

தயாரிப்பவர்கள்

*

எல்லோரும் வாங்கும் சக்திக்கு ஏற்றவாறு பற்பல ரகங்களில் அநேகவித கவர்ச்சிகரமான அழகிய டிஸைன்களில் கிடைக்கும்

மாதிரி வேண்டுவோர் எழுதவும்

**Popular Fine Litho Works, Suryoday Mills Compound, Tardeo, Bombay-7**

---

**READ SOVIET BOOKS AND PERIODICALS**




# SOVIET LIFE IN PICTURES

Subscriptions:

| | |
|---|---|
| Yearly: | Rs. 6/12 |
| Half Yearly: | Rs. 3/6 |
| Single copy: | As. -/12 |

SOVIET UNION (and SOVIET SANGH), the illustrated monthly published in English & Hindi, presents news photographs and picture stories about the life of the people of the Soviet Union Soviet economic, scientific, technical and cultural achievements, and reflects the country's major current events.

Each issue of the SOVIET UNION has 40 pages 12 of them in multi-colour.

"All Subscribers will receive their Copies direct from Moscow by AIR from January 1957"

Subscription accepted at:

NEW CENTURY BOOK HOUSE, 199, Mount Road, Madras-2



V/O MEZDUNARODNAYA KNIGA, Moscow 200, U.S.S.R.

# அருமை நண்பர் அழகப்பர்

விசுவாமித்ரா

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் மாணவர் சங்கத்தில் 1924-ம் வருஷம் ஜூலைமாதம் ஒரு நாள் மாலை ஒரு வாக்குவாதம் நடைபெற்றது. அன்று நடந்த வாக்கு வாதத்தின் தலைப்பு ''மனிதர் எப்பொழுதும் போர் புரிவார்; அது அவருடைய தன்மை; அதை மாற்ற முடியாது.'' சிலர் இக் கொள்கையை ஆதரித்தும், மற்றும் சிலர் இக்கொள்கைக்கு மாறாகவும் பேசினார்கள். கேட்க வந்திருந்த மாணவர்கள் போட்ட கூக்குரலும், அடிக்கடி செய்த கரகோஷமும், (அதாவது வேண்டாத சந்தர்ப்பத்தில்) கடலின் அலை ஓசைக்குப் போட்டியாகவே இருந்தன. அவர்கள் நடந்து கொண்ட வகையிலிருந்து உலகத்தில் போர் எப்பொழுதுமே நிலைத்துநிற்கும் என்று தான் தோன்றியது. அன்று நடந்த விவாதத்தில் நானும் கலந்து கொண்டேன். என்ன பேசினேன் என்பது இப்பொழுது முழுமையும் நினைவில்லை. ஆனல், ''போரையே வெல்லுவதுதான் உண்மையான வெற்றி; இக்காலத்தில் இரு கட்சியாரும் போரில் தோல்வி அடைகின்றனர். மனிதன் தன்னுடைய வீராவேசத்தைப் பந்தாட்டம், போட்டி, மனைவி மக்களுடன் வீட்டில் சச்சரவு முதலியவைகளில் தீர்த்துக் கொள்ள வேண்டும்'' என்று மட்டிலும் சொன்னது ஞாபகம் இருக்கிறது. பேச்சை முடித்து விட்டு, சபையில் ஒரு பக்கமாகப் போய் உட்கார்ந்து கொண்டேன். அப்பொழுது ஒரு சிறு மாணவர் என் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

''உங்கள் பேச்சு நன்ருக இருந்தது. வேடிக்கையாகவும் இருந்தது'' என்று என்னிடம் கூறினர். அவருக்கு வயது சுமார் பதினறு அல்லது பதினேழு இருக்கும். மேனி சிவப்பாக இருந்தது. கண்கள் கறுகறுப்பாக இருந்தன. பார்வையில் ஆவல் நிறைந்திருந்தது. இவற்றுடன் அகன்ற நெற்றியும், அடர்ந்த தலைமயிரும் ஒரு கவர்ச்சியை அளித்தன. கூட்டம் முடிந்ததும் அவர் என்னைத் தம்முடைய சிறிய ''ரெனல்ட்'' மோட்டாரில் வீட்டுக்குக் கொண்டு விட்டார். அன்றுதொட்டு இன்றுவரை மருந்துக்குக்கூட மனவேற்றுமை இல்லாமல் ஆழ்ந்த நட்பை நாங்கள் இருவரும் பாராட்டி வருகிறோம். கல்லூரியில் படித்த நாளெல்லாம் அவர் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவது வழக்கமா யிருந்தது. அவரை எங்கள் சுற்றத்தாரில் ஒருவர் என்றே அனேகர் கருதினர்.



மாணவர் அழகப்பர்

அழகப்ப செட்டியாரைப் பற்றி நான் எழுதுவது உசிதமல்ல. வேறு யாராவது அவரைப் பற்றி எழுதி, அதைப் படித்துக் களிப்புற வேண்டியவன் நான். நானே எழுதினால் ஏதோ தற்பெருமை காட்டிக் கொள்வது போல் எனக்குத் தோன்றுகிறதே தவிர, மற்றொருவரைக் குறித்து எழுதுவதாகத் தோன்றவில்லை. மேலும் முப்பத்து மூன்று ஆண்டுகளாக நெருங்கிப் பழகி விட்டு, இரண்டு மூன்று பக்கங்களில் 'செட்டியாரை'ப் பற்றி எப்படி எழுதுவது? அதற்குக் குறள் எழுதும் வல்லமை வாய்ந்த யாராவது வேண்டும். எனக்குத் தெரிந்ததில் ஒரு பகுதியை எடுத்துரைப்பதற்குக் ''கல்கி''யில் ஒரு முழு இதழ் தேவை. (விளம்பரப் பக்கங்கள் உள்பட!) ஆகையால் இவ்விடத்தில் ஒரு சிறிய ''சொல்லோவியம்'' மட்டும் வரைய முயற்சி செய்கிறேன். அதிலும் அவரிடத்தில் நான் கண்டு அறிந்து கொண்ட அரிய குணங்களில் ஒன்றிரண்டை எடுத்து உரைக்கிறேன்.

அழகப்ப செட்டியாரை நினைக்கும்போது மனத்தில் முன்தோன்றுவது அவருக்குப் படிப்பிலும், புத்தகங்களிலும் உள்ள அளவு கடந்த ஆசை. அவர் எப்பொழுதும் ஏதாவது ஒரு நூலைப் படித்துக் கொண்டே இருப்பார். அவர் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்வது வழக்கம். துணிமணி, படுக்கை முதலியவைகளைச் சில சமயங்களில் எடுத்துச் செல்ல மறந்து விடுவார். ஆனல் ஒரு புத்தக மூட்டை மாத்திரம் அவர் பக்கத்தில் எப்பொழுதும் இருக்கும். ரயிலிலோ, காரிலோ, விமானத்திலோ, ஒரு பென்ஸிலையோ, பேனவையோ கையில் வைத்துக் கொண்டு படிக்கும் நூலில் சுவையான இடங்களில் கோடு இழுத்துக் கொண்டு இருப்பார். அதன் பிறகு அவர் யாரைச் சந்திக்கிருரோ அவருக்குத் தாம் படித்த ருசியான கட்டங்களை உடனே படித்துக் காண்பிப்பார்.

''தாமின்புறுவது உலகின்புறக் கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்''

என்ற வள்ளுவர் வாக்கை எப்பொழுதும் நடத்தையில் அவர் காண்பித்து வருபவர்.

ஆனல் அவரைப் பார்க்க வருபவர்கள் பலரகமாக இருப்பார்கள். சிலர் கடன் வாங்க வந்திருப்பார்கள். சிலர் வேலைக்காக வந்திருப்பார்கள். சிலர் நன்கொடை வாங்க வந்திருப்பார்கள். செட்டி நாட்டிலிருந்து ''அப்புச்சி'', ''அம்மான்'' என்று அநேகர் வருவார்கள். பொழுது போக்குவதற்காக நண்பர்களும் வருவார்கள். அவர்கள் எல்லோரிடமும் வெவ்வேறு நூல்களிலிருந்து மேன்மையான இடங்களைப் படித்துக் காட்டுவார். ஆங்கிலம் தெரியாதவர்களுக்குத் தமிழில் கருத்தை எடுத்துச் சொல்லுவார். அவர் சரமாரியாகப் பேசுவது சில

ருக்குப் புலப்படும். சிலர் தங்கள் மனத்தை விரட்டிக்கொண்டு பின்தொடர்வார்கள். ஒரு சாராருக்கு வெறும் வியப்பு மட்டும் தான் மிஞ்சும். ஏதோ பெரிய விஷயம் என்று எண்ணிச் சந்தோஷப்பட்டுக் கொள்வார்கள்.

அழகப்ப செட்டியார் ஒரு நூலையும் அரைகுறையாகவோ, உதாசீனமாகவோ படிக்கும் வழக்கம் கிடையாது. ஆசிரியரின் கருத்தை நன்றாக உணர வேண்டுமென்று ஆழ்ந்து கவனத்துடன் படிப்பார். அவருக்கு நாவல், சிறுகதை இவைகளில் பற்றுதல் குறைவு. மனத்துக்கு இசைப்பாற நண்பர்களுடன் கலந்து பேசுவதே போதும் என்பது அவர் கொள்கை. காவியம், சொல்லழகு வாய்ந்த கட்டுரைகள், விஞ்ஞான நூல்கள், பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகள், சரித்திரம், மத நூல்கள், மெய் விளக்க நூல்கள், பொருளாதாரப் புத்தகங்கள் இவைகளில் தான் அவருக்கு அதிக விருப்பம்.

நாம் வடமொழி கற்றுக் கொள்ளவில்லையே என்ற வருத்தம் அழகப்ப செட்டியாருக்கு உண்டு. வால்மீகி ராமாயணத்தைத் தாமே படிக்க வேண்டும் என்ற எண்ணத்தை என்னிடம் அடிக்கடி தெரிவித்திருக்கிறார். நானும் அவருமாகப் பல முறை சேர்ந்து பிரயாணம் செய்திருக்கிறோம். அந்தச் சமயங்களில் நான் அவருக்கு வால்மீகி, காளிதாசன் முதலிய கவிஞர்களின் செய்யுட்களை எடுத்துப் படித்துக் காண்பித்து விட்டுப் பொருள் கூறி வருவேன். அவைகளை அவர் கற்கண்டு கிடைத்த குழந்தையைப் போல் அநுபவிப்பார். அப்பொழுதெல்லாம் அவர் மனமானது புதுப் புது சந்தேகங்களைத் தோற்றுவித்துக் கொண்டே இருக்கும். அவருடைய சந்தேகங்களுக்குச் சமாதானம் சொல்வது அவ்வளவு எளிதல்ல. ''கடவுள் முதலில் ஒருவனைப் படைத்தபொழுது ஏன் தவறு செய்வதற்கு இடம் கொடுத்தார்; அதன் விளைவுதானே உலகமெல்லாம் இப்பொழுது பரவி இருக்கிறது'' என்பார். வானர சேனை என்பது நிஜமாக இருந்திருக்க முடியுமா? என்று கேட்பார். அதே தருணத்தில் அவர் மனம் மாறிவிடும். ராமாயணம் போன்ற காவியத்தை ஒரு மனிதன் தன் திறமையினாலேயே எழுதிவிட முடியுமா? இதிலிருந்தே கடவுளின் அருள்தான்வேண்டும் என்று உறுதி கூறுவார். திரும்பவும் சந்தேகங்கள் வந்து விடும். ராமாயணம் எந்த நூற்றாண்டில் எழுதியது; புத்தருக்குப் பின்பா? முன்பா? புத்தமதத்தை நாம் இந்தியாவிலிருந்து ஏன் ஓட்டி விட்டோம்? கம்பர் எழுதிய ராமாயணத்துக்கும், வால்மீகி எழுதிய ராமாயணத்துக்கும் என்ன ஒற்றுமை, வேற்றுமை? என்றெல்லாம் பல கேள்விகள் வில்லிலிருந்து எய்த அம்புபோல் ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டே இருக்கும்.

ராமாயணத்திலிருந்து ஷேக்ஸ்பியர், பிறகு பெர்ட்ராண்டு ரஸ்ஸல், அதனிடையே தென்னிந்தியாவிலுள்ள ஆலயங்களின் சிறப்பு, நமது சிற்பங்களின் பெருமை, நாம் வியாபாரத்தில் நடக்கும் சூழ்ச்சிகள், நாட்டின் எதிர்காலம், நம் தலைவர்கள், ஆங்கிலேய நாட்டிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியவை, - இன்னும் இவ்வாறாகப் பல வேறு விஷயங்களைச் சிற்றாராய்ச்சி செய்து கொண்டும், செவிக்குணவிருந்த போதிலும் அவ்வப்போது வயிற்றுக்கும் இன்பண்டங்களை ஈந்து கொண்டும், போகும் பொழுதைக் குறுக்கிச் சென்னையிலிருந்து திருப்பதி மலை வரை சென்று விடுவோம்.

அழகப்ப செட்டியாரிடம் யாராவது ஐந்து நிமிஷம் பேச வேண்டுமென்று போனால் இரண்டு மூன்று மணி நேரம் வரை திரும்ப மாட்டார்கள். வருத்தங்களைக்கூட வேடிக்கையாக மாற்றிக் கொள்ளும் தன்மை வாய்ந்தவர். ஒரு நாள் அவரது வலது கண் துணியால் மூடப்பட்டிருந்தது. நான் அவரைப் பார்த்ததும் ''கண்ணில் என்ன?'' என்று கேட்டேன்.

அதற்கு அவர் ''ஏதோ வலி இருக்கிறது! ஆனால் இப்பொழுது உலகத்திலுள்ள அநியாயங்களில் ஒரு பகுதிதான் எனக்குத் தெரிகின்றது'', என்று சொல்லி நகைத்தார். மற்றொரு சமயம் தம் கையில் சிவப்பு, கறுப்பு, நீலம் என்று பல வர்ணங்களில் உட்கொள்வதற்காக மாத்திரைகளை வைத்துக்கொண்டிருந்தார். ''இது வைத்தியத்தில் ஒரு ராகமாலிகை'' என்று சிரித்துக் கொண்டே சொல்லி விட்டு ஒவ்வொன்றாக விழுங்கினார்.

எப்பொழுதுமே அழகப்ப செட்டியார் தம் பொருட்டு அதிகமாகச் செலவு வைத்துக் கொள்வதில்லை. ரயில் பிரயாணம் செய்கையில் ஒரு தலையணை மட்டும் எடுத்துக் கொண்டு சென்று விடுவார். இவர் பெரும்பாலும் தூங்குவது மோட்டார் வண்டியின் பின்ஸீட்டில்தான்.

''ஒரு சமயம் சென்னை கவர்னர் இவரது வீட்டுக்கு விஜயம் செய்ய நேர்ந்தது. அப்பொழுது அவரை அழகப்ப செட்டியார் அவர்கள் தோட்டம், அலங்கரித்து வீற்றிருக்கும் அறை, புத்தகங்கள் வைத்திருக்கும் அறை, ஆங்கிலேய முறையிலுள்ள உணவருந்தும் அறை எல்லாவற்றையும் காண்பித்தார். '''எங்கே நீங்கள் படுத்து உறங்கும் அறை என்று கேட்டு விடுவாரோ?' என்று பயந்து கொண்டே இருந்தேன். நல்ல காலம் கேட்கவில்லை!'' என்று பிறகு என்னிடம் சொன்னார். ஏனென்றால் இவர் படுப்பது பங்களா முகப்பில்தான். கட்டில் இருந்தால் கட்டில். இல்லாவிட்டால் தரை. எந்த இடத்தில் இருக்கிறாரோ அந்த இடந்தான் அவரது உணவுச் சாலை. எந்த உடுப்பு இருக்கிறதோ அதுதான் அன்றைய வேஷம். சமீப காலத்தில் தம் மீது செலவு செய்து கொள்வதில் அவருக்கு ஒரு வெறுப்பே வந்திருக்கிறது. நூறு ரூபாய் தமக்காகச் செலவு செய்வது கூட அவருக்கு மன வேதனையாக இருக்கிறது. இதை வைத்துக் கொண்டு காரைக்குடி கலாசாலைகளில் ஒரு பையனுக்கு உதவி செய்யலாமே என்ற எண்ணம் அவர் மனத்தில் முழுதும் குடிகொண்டிருக்கிறது.

காரைக்குடியில் பல கல்லூரிகளை நிறுவி அவைகளைப் பல விதத்திலும் பெருக்கி, அவ்வூரின் பெயர் நம் நாடு முழுதும் அழகப்ப செட்டியார் அறியச்செய்திருப்பது அனைவரும் அறிந்ததே. ஆனால் அதற்காக அவர் வழங்கியிருக்கும் நிதியைப் பற்றித்தான் பலருக்கும் தெரியும். தன் உடலாலும் மதியாலும், அவர் அளித்துள்ள நிதி பணத்தைவிடப் பன்மடங்கு பெரிது. செங்கற்களையும் சுண்ணாம்பையும் கலந்து அவரே கட்டடம் கட்டவில்லை என்பது தவிர மற்றதெல்லாம் அவர்

ஒருவராகவே செய்திருக்கிறார். இதை நான் நேரில் அறிவேன். 1947-ம் வருஷம் புதிதாக ஓர் கல்லூரி இவர் ஆரம்பிப்பதாக அடையாற்றில் உறுதி கொடுத்த போது இவரிடம் வாரி வீசும்படியான பொருளோ, மனிதர்களின் பக்கபலமோ, தேகத்தில் திடமோ ஒன்றும் கிடையாது. குறையாத மனத்திடம் ஒன்றுதான் இவரிடம் குடிகொண்டிருந்தது. ஒரு சமயம் இதைப் பற்றி என்னிடம் பேசுகையில் அவர் கூறியதாவது :

"நான் பல வருஷங்களாகப் பணத்தைச் சேர்த்தும் இருக்கிறேன். அப்பொழுதெல்லாம் 'எதற்காக நாம் பணம் சம்பாதிக்கிறோம்? மேலும் மேலும் பணம் வேண்டுமென்று உழைக்கிறோம்?' என்பது எனக்குப் புலப்படாமலிருந்தது. ஆனால் காரைக்குடியில் கல்லூரிகள் தொடங்கிய நாள் முதல் பணம் சம்பாதித்தே தீர வேண்டும். இல்லாவிட்டால் கல்லூரிகளை முன்னேற்றி நிலைநிறுத்துவது இயலாது என்று ஒரு புதிய ஊக்கம் வந்தது. இவ்வாறு செலவு செய்வதில் நான் அடைந்து வரும் நிம்மதி நான் எப்பொழுதும் அடைந்ததில்லை. இக் கல்லூரிகளை நான் ஆரம்பித்திரா விட்டால் பணத்தை எவ்வாறெல்லாம் செலவு செய்திருப்பேனோ என்று இப்பொழுது பயப்படுகிறேன்."

ஆங்கிலத்தில் "ரீடர்ஸ் டைஜஸ்ட்" என்று ஒரு மாதப் பத்திரிகை இருக்கிறது. அதில் 'நான் அறிந்தவர்களில் மறக்க முடியாதவர்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை ஒவ்வொரு மாதமும் வெளிவரும். அதைப் படிக்கும்போதெல்லாம் என் மனைவி, "உங்கள் நண்பர் செட்டியாரைப் பற்றி ஏன் நீங்கள் இந்தப் பத்திரிகைக்கு எழுதக் கூடாது?" என்று கேட்பதுண்டு. அதற்குத் தருணம் இப்பொழுதுதான் வாய்த்தது.

# வட்ட மேஜை

## இலவச வைத்தியசாலை

காரமடை சுமார் பத்தாயிரம் பேர் மக்கள் தொகையுள்ள ஒரு சிறு நகரம். இங்கே போய் வர பஸ், ரயில் மார்க்கம் உண்டு. வாரம் ஒரு முறை வெள்ளிதோறும் பெரிய சந்தை கூடும். அப்பொழுது சுற்றுப்புறத்தில் உள்ள பல கிராம மக்களும், உதகமண்டலம், குன்னூர் முதலிய மலைப் பிராந்தியங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான பேர்கள் வந்து கூடுவர். இது தவிர இங்குள்ள அரங்கநாதர் கோயில் உற்சவத்தில் பங்கு கொள்ளப் பலர் வந்து கூடுவர். வருடந்தோறும் நடைபெறும் தேர் திருவிழாவுக்கு லட்சத்தை எட்டுமளவு கூட்டம் கூடும். இப்படி அடிக்கடி பலர் கூடும் இடமாகத் திகழும் காரமடைக்கு ஓர் குறை உண்டு. இவ்வூரில் இலவச வைத்தியசாலை இல்லாத குறைதான். குடியானவர்களும், ஏழை எளியவர்களும் உள்ள இப்பிரதேசத்தில் நல்ல வைத்தியசாலை கிடையாது. அவசரமாகக் கவனிக்கப்பட வேண்டிய ஆபத்துக்களா யிருந்தாலும் பதினெட்டாவது மைலில் உள்ள கோவைமா நகருக்குத்தான் செல்ல வேண்டியிருக்கிறது. அதுவும் பஸ், ரயில் போகாத இரவு நேரமாகி விட்டால் மறுநாள் வரை காத்துக் கொண்டிருக்க வேண்டும். அதுவரை உயிர் காத்துக் கொண்டிருக்குமா?

காரமடையில் வசதியான இலவச வைத்தியசாலை ஒன்று ஏற்படுத்தி விட்டால் இவ்வூருக்கும், சூழ்ந்திருக்கும் கிராம மக்களுக்கும் ஓர் வரப்பிரசாதம் கிடைத்தது போலாகும்.

காரமடை
15—11—56 துரை முருகேசன்

## குறை நீங்குமா?

பெண்களுக்குப் பல உத்தியோகங்களில் சலுகைகள் தரப்பட்டுள்ளன. உதாரணமாக நர்ஸ், உபாத்தியாயினி முதலியவைகளில் வயது முப்பது தரப்பட்டுள்ளது. ஆனால், சர்விஸ் கமிஷன் முதலிய சர்க்கார் பரீட்சைகளுக்கு வயது இருபத்தைந்து. இது பெண்களின் முன்னேற்றத்துக்குப் பாடுபடும் சங்கங்களும், உத்தியோகஸ்தர்களும் பார்த்து நீக்க வேண்டிய ஒரு குறை.

இது நீக்கப்பட்டால் என்னைப் போல் வறுமையில் சிக்கி உழலும் என். ஜி. ஓ. குடும்பங்களுக்குப் பேருதவியாக இருக்கும்.

சேலம்
26—11—56 ராஜேஸ்வரி

## தவம் கிடக்கிறேன்

நவம்பர் 25-ந் தேதி 'கல்கி'யில் வெளியாகியுள்ள 'கடைசிக் கனவு' வேதாந்தம் விரும்பும் எல்லோருக்கும் ஒரு சொல் விருந்தாக அமைந்துள்ளது. ரால்ப் ஹாட்ஜ்ஸனின் 'காலே' என்ற தலைப்புக் கொண்ட கவிதையை இண்டர்மீடியட் வகுப்பில் படித்து உவகையுற்ற பலரில் நானும் ஒருவன். அதைத் தமிழில் மற்றொரு வகைக் கவிதையாக எழுதி விட்டார் பேராசிரியர் அ. சீநிவாச ராகவன். மற்றவர் எதை எதிர்பார்ப்பினும் நான் இலக்கியச்செல்வத்துக்காகவே வாரந்தோறும் தவம் செய்கிறேன். இது மிகையல்ல.

மற்றொரு வார்த்தை. நம் நாட்டில் உள்ள எல்லாப் பெண் கல்லூரிகளும் மாதர் குழுக்களும் பெண்களுக்கு அளிக்க முயற்சிக்கும் கல்வியை ஸ்ரீமதி வசுமதி ராமசாமி அவர்களின் ஒரு பக்கக் கட்டுரை அளித்துவிடுகிறது.

சேலம்
25—11—56 எஸ். சீதாராமன்

## நன்றி

காந்தி மகாத்மா வழி வந்த சமூகத்தில் சமையல்காரர்கள் மிகவும் இழிவானவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

வசைச் சொற்களில், 'மடையன்' என்பதும் ஒன்று அல்லவா? இச் சொல்லுக்கு, 'சமையல்காரன்' என்று பொருளாம்.

எத்தனையோ சமூக நல முயற்சிகளைச் செய்யும் 'கல்கி,' ''எந்தப் பணியும் இறைவனுக்கு ஒன்றே'' என அறிவித்து, சமையல்காரர்களையும் மனிதர்களாக மதித்து, அவர்கள் வாழ்க்கை நிலையைச் சித்திரிக்கும் கதைகளையும் அடிக்கடி வெளியிடுவது குறித்து, 'கல்கி' நிர்வாகிகளுக்கும், தற்சமயம் 'பானுவின் காதலன்' என்னும் தொடர்கதையை எழுதுபவருக்கும், ஒரு சமையல்காரர் என்ற ஹோதாவில் என் மனப்பூர்வமான வணக்கத்தையும், நன்றியையும், மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மதனப்பள்ளி
4—12—56 ஆர். சுப்பராமன்

## மாறு வேஷத்தில் மந்திரி

சென்ற டிசம்பர் 2-ந் தேதி 'கல்கி' இதழில் 'சாவி' எழுதிய ''மாறு வேஷத்தில் மந்திரி'' என்ற தலைப்பில் கனம் மந்திரி பக்தவத்சலம் அவர்கள் மாறுவேஷத்தில் வந்து மக்களிடையே பழகினால் எதைக் காண்பார் என்பது அருமையாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு ஒரு முறை கனம் பக்தவத்சலம் அவர்கள் மாறு வேஷத்தில் வந்து மக்களின் நிலையைப் பார்ப்பாரானால் நல்லது.

நான்குநேரி
3-12-56 டி. தனசேயன்

## வில் பிடித்த வேலவன்

முருகனுக்கு வில் உண்டு! ஆம், வேலவனுக்கு வில்லும் உண்டு! இது விந்தை தரும் செய்தியல்ல! குன்று தோறும் குமரனுக்கு இந்தக் கோலம் புதிதல்ல! கனுதேசாய் வரைந்த உயிரோவியம் கருத்துக்கு முரண்பட்டதல்ல!

வேலேந்திய முருகன் வில்லேந்தி நிற்கும் விந்தைக் கோலத்தை, தமிழகக் கலைக் கோயிலாம் தஞ்சைப் பெரிய கோயிலில், பெரிய நாயகி அம்மன் சந்நிதியின் முன் மண்டபத்தில் உள்ளதொரு கல் தூணில், நாம் கண்டு மகிழலாம்.

திருப்பெருந்துறை எனும் ஆவுடையார் கோயிலில் ஆயிரக்கால் மண்டபம் என்று கூறப்படும் பெரிய மண்டபத்தில் எழு



சென்னையிலிருந்து பதினறு மைல் தூரத்திலுள்ள செம்பரம்பாக்கம் என்னும் சின்னஞ் சிறு கிராமம் செங்கல்பட்டு ஜில்லாவில் உள்ளது. மேற்படி கிராமவாசிகளும் செங்கல்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த போலீஸ்காரர்களும் ஒன்று சேர்ந்து பல முன்னேற்றத் திட்டங்கள் போட்டுக் காரியத்திலும் நிறைவேற்றி யிருக்கிறார்கள். அதன் பயனுக இப்போது செம்பரம் பாக்கத்தில் ஒரு வாசகசாலை இருக்கிறது. வாசகசாலையில் ஒரு ரேடியோ இருக்கிறது. பூந்தமல்லிச் சாலையிலிருந்து செம்பரம்பாக்கம் செல்லும் ஒரு மைல் தூரமுள்ள மார்க்கம் அருமையாக மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. நாட்டு மக்களுக்கும் போலீஸ்காரர்களுக்கும் இருந்த வேற்றுமை உணர்ச்சி சுதந்திரம் பெற்ற பிறகு அடியோடு மறைந்து விட்டது. எல்லோரும் இந்நாட்டு மன்னர்களாகித் தோளோடு தோள் நின்று தேசப் பணி ஆற்றி வருகின்றனர். போலீஸார் மேற்படி கிராம மக்களின் ஒத்துழைப்போடு ரோடு போட்டிருப்பதுடன் கிராம அபிவிருத்திக்கான இன்னும் பல காரியங்களையும் செய்திருக்கிறார்கள்.

கடந்த 2-12-56 அன்று ஸ்ரீ பக்தவத்சலம் மேற்படி கிராமத்துக்கு விஜயம் செய்து கிராம அபிவிருத்தி வேலைகளைப் பார்வையிட்டதுடன் வாசகசாலைக்கு அஸ்திவாரக் கல் நாட்டிப் போலீஸாரின் சேவையைப் பெரிதும் பாராட்டினர். விழாவில் கலந்துகொண்ட இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீ வி. ராஜரத்னம், செங்கல்பட்டு ஜில்லா கலெக்டர் ஸ்ரீ வெங்கடேசன், ஸ்ரீ ராமகிருஷ்ணய்யர் எம்.எல்.ஏ. முதலியவர்களையும் கிராமத்து மக்களையும் படத்தில் காணலாம்.

---

தூண்கள்—ஏழு கலைக் கோயில்களாகக் காட்சி யளிக்கின்றன. அவ்வரிசையில் ஐந்தாவது தூணில் முருகன் கோதண்டபாணியாக, மயில் மீது காலைத் தூக்கி வைத்த வண்ணம் கம்பீரமாக நிற்கும் காட்சியைக் காணக் கண் ஆயிரம் வேண்டும்!

இன்னும் அநேக தலங்களில் வேலவன், 'வில்லவனு'க் காட்சி தருவதை நேரில் கண்டவர்கள் கூறுகிறார்கள்.

வேலவன் வில்லவனுன கோலத்திற்கு இலக்கியத்தில் சான்றில்லை என்று சிலர் கருதுவதும் தவறு.

"சூலம் வாள் தண்டு
செஞ்சேவல் கோதண்டமும்
சூடுதோளும் தடந்திருமார்பும்"

என்று அருணகிரியார் ஆர்வமுடன் திருப்புகழ் பாடுகிறார்.

அது மட்டுமல்ல; அவருக்கும் எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னுல் தோன்றிய சங்கப் புலவர் நக்கீரர்,

'வானோர் வணங்கும் வில்தானைத் தலைவ'

என்று பக்தியுடன் பாடியிருக்கிறார்.

மேலும் வில் பிடித்த கையுடன் வனத்தில், வேலன் வள்ளிமானைத் தேடித் திரிந்த கதையும் நாம் அறியாததல்லவே!

வேல் முருகனுக்குரியது; வில் இராமனுக்குரியது. "வேலையும் வில்லையும் இணைப்பதன் மூலம் சைவ வைணவப் பிரிவையே இணைத்து விட முடியாதா எனச் சிந்தித்தார்கள், பக்தர்கள், கவிஞர்கள், கலைஞர்கள் முதலானோர். அவர்கள் சிந்தனையில் உருவானவன் தான் 'வில்லேந்திய வேலன்' என்று எனது மதிப்புக்குரிய திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் ஒரு கட்டுரையில் கூறியிருக்கிறார்கள்.

இன்னும் இதற்கு ஆதாரமாகச் சுப்ரமணிய பராக்கிரமம் என்னும் பழைய நூலொன்றில் காணப்படுகின்ற கதையொன்றையும், திருச்செந்தூர் புராணத்திலிருந்து

"சுந்தரச்சிலை யிராமன்
தோற்றமும் காட்டி"

என்று ஆரம்பமாகும் பாடல் ஒன்றையும் திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் எடுத்துக் காட்டி யிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது.

வெள்ளூர்
4-12-56

மு. சுப்பிரமணியன்
'காசாவயல்மணி'

## உள்ளத்தைத் தொட்டது

ஸ்ரீ ராஜாஜியைப் பற்றி எவ்வளவோ கட்டுரைகளையும் புகழுரைகளையும் பேச்சுக்களையும் கேட்டும், படித்தும் வந்திருக்கிறேன். ஆனல் 9-12-56 கல்கி இதழில் கர்ம வீரர் டாக்டர் என்று நமது நிதி மந்திரியும், பாரத ரத்னம் என்று நவரத்ன ராமராவ் அவர்களும் எழுதியவை என் உள்ளத்தைத் தொட்டது போல் இதுவரை யார் எழுதியதும் என் உள்ளத்தைத் தொடவில்லை. இத்தகைய கட்டுரைகள் கல்லூரி மாணவர்களுக்கும், நிர்வாகத் தலைவர்களுக்கும் மிகவும் வழிகாட்டியாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

கோயமுத்தூர்
7-12-56

வாகை கிருஷ்ணமூர்த்தி



# சென்னையில் சீனப் பிரதமர்





சீனப் பிரதமர் சூ என் லாய் சென்னைக்கு விஜயம் செய்து தமிழ் மக்களின் அன்பையும் பண்பையும் அறிவையும் ஆற்றலையும் கண்டு வியந்து சென்றார். ராஜாஜியுடன் இரண்டு மணி நேரம் அளவளாவினார். மகாபலிபுரத்தின் சிற்ப அதிசயங்களைக் கண்டார்..

1. சென்னை மேயர் அளித்த மாலையுடன் மலர்ந்து காண்கிறார் சூ என் லாய். 2. சூ என் லாயிடம் ஞான முத்திரை காட்டி ஏதோ சொல்கிறார் ராஜாஜி. 3. சீனப் பிரதமரின் மொழிகளைக் கேட்கக் கூடியிருந்த பொது மக்கள். 4. ராஜ பவனத்தில் ராஜாஜி கவர்னருடன். 5. மாணவர்கள் கூட்டத்தில் சூ என் லாய்.



யுடன் மலர்ந்து காண்கிறார் சூ என் லாய். 2. சூ என் லாயிடம் ஞான முத்திரை காட்டி ஏதோ சொல்கிறார் ராஜாஜி. 3. சீனப் பிரதமரின் மொழிகளைக் கேட்கக் கூடியிருந்த பொது மக்கள். 4. ராஜ பவனத்தில் ராஜாஜி கவர்னருடன்.



# இலங்கைத் தமிழ் எழுத்தாளருக்குப் பரிசு

சிறந்த தமிழ் எழுத்தாளர்கள் இந்தியத் தமிழகத்தில் மட்டுமல்ல, ஈழத் தமிழகத்திலும் இருக்கிறார்கள் என்பதைச் சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகம் அங்கீகரித்து ஸ்ரீ சொ. சிவபாதசுந்தரம் எழுதிய ''ஒலிபரப்புக் கலை'' என்ற நூலுக்கு இவ்வருட விஞ்ஞானப் புத்தகத்துக்குரிய பரிசை வழங்க முன் வந்திருக்கிறது.

ஸ்ரீ சிவபாதசுந்தரம் தமிழ் நாட்டுக்குப் புதியவரல்ல. அவரை நேரில் பார்க்காதவர்கள் கூட அவருடைய குரலைப் பலமுறை கேட்டிருப்பார்கள். அவர் 1942-ம் வருடம் முதல் 1952-ம் வருடம் வரையில் இலங்கை வானொலி தமிழ்ப்பகுதி அதிகாரியாகச் சேவை புரிந்தார். இந்தக் காலத்துக்கிடையில் அவருடைய சேவையை 1947 முதல் 1950 வரை பி. பி. ஸி.க்கு இலங்கை வானொலி இரவல் கொடுத்திருந்தது. அப்பொழுதுதான் ''உலகமெல்லாம் தமிழ் முழக்கம் செய்தல் வேண்டும்'' என்று கவிச்சக்ரவர்த்தி பாரதியார் சொல்லியபடி லண்டனைத் தலைமை ஸ்தானமாகக் கொண்டு அகிலமெல்லாம் கேட்க ஸ்ரீ சிவபாத சுந்தரம் தமிழ் முழக்கம் செய்து வந்தார். பி. பி. ஸி.யில் 'தமிழ் ஓசை' என்ற தமிழ் நிகழ்ச்சியை அங்குரார்ப்பணம் செய்து வைத்த பெருமை ஸ்ரீ சிவபாதசுந்தரத்தையே சாரும். அவர் ஐரோப்பாவில் உள்ள பல வானொலி நிலையங்களுக்கும் சென்று ஒலிபரப்புக் கலையைப் பற்றித் தீவிரமாக ஆராய்ந்து தமிழ் மொழியில் 'ஒலிபரப்புக் கலை' என்ற நூலைச் சென்ற வருடம் எழுதி வெளியிட்டார். இதற்கு ராஜாஜி எழுதிய முகவுரையில் இப்புத்தகத்துக்கு ''ரேடியோ வாத்தியார்'' என்று பெயரிடுவது பொருத்தமென்று குறிப்பிட்டிருந்தார்.

சென்ற வருடம் ஸர் கந்தையா வைத்தியநாதன் தலைமையில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் இந்நூல் அரங்கேற்றப்பட்ட பொழுது அடுத்த வருடம் சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகம் அளிக்கும் பரிசு இந்த நூலுக்குத் தானென்று ஸர் கந்தையாவும் கலாரசிகர் ஸ்ரீ கே. கனகரத்தினமும் சோதிடம் சொன்னார்கள். அவர்கள் வாக்கு பலித்தது. இலங்கை தமிழ் எழுத்தாளர்களின் கௌரவமும் உயர்ந்தது. ஸ்ரீ சிவபாத சுந்தரத்துக்குக் கிடைக்கும் பரிசு இலங்கை தமிழ் எழுத்தாளர் வர்க்கத்துக்குக் கிடைக்கும் பரிசு.

* * *

களுத்துறை தமிழ்க் கழகத்தினர் சென்ற வாரம் மூன்றாவது தமிழ் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். அப்பொழுது அகில இலங்கை தமிழ்ச் சங்கத் தலைவர் வித்துவான். வ. மு. கனகசுந்தரம் தமிழ் மொழிக்குச் செய்த சேவைகளைப் பாராட்டுவதற்காக அவருக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தனர். விழாவுக்குத் தலைமை வகித்த ஸர் கந்தையா வைத்தியநாதன் வித்துவான் கனக சுந்தரத்தின் தமிழ்த் தொண்டைப் பாராட்டிப் பேசி விட்டு அவருக்குப் பொன்னாடை போர்த்தினார்.

கொழும்பு தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசியாக வித்துவான் கனகசுந்தரம் கடமையாற்றிய பொழுதுதான் அவர் அமரர் கல்கியை இலங்கைக்குத் தருவித்துத் தமிழ்ப் பற்றை இங்கு மறுமலர்ச்சியடையச் செய்தார். அச்சம்பவத்தைப் பின்பற்றியே தமிழ் விழாக்களைக் கொண்டாடுவது இங்கு சகஜமாகியது.

* * *

இலங்கையின் கடைசி மன்னரான ஸ்ரீ விக்ரம ராஜசிங்கனின் கொள்ளுப் பேரன் ஸ்ரீ கண்டி ஜி. சுகராஜசிங்காவுக்கு இலங்கை அரசாங்கம் சென்ற வாரம் கௌரவப் பிரஜா உரிமை வழங்கியிருக்கிறது. 1815ம் ஆண்டில் பிரிட்டிஷார் கண்டி ராஜ்யத்தை ஆக்ரமித்துக் கொண்ட பொழுது மன்னர் விக்ரமராஜசிங்கனும் அவருடைய ராஜ குடும்பத்தினரும் வேலூர் மத்திய சிறைச்சாலைக்குக் கொண்டு போய் வைக்கப்பட்டிருந்தார்கள். 1832-ம் ஆண்டில் கண்டி மன்னர் சிறையில் காலமானார். இதற்குச் சில வருடங்களுக்குப் பின்னரே ராஜகுடும்பத்தினர் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டனர். ஆயினும் அவர்கள் இலங்கைக்குவரக்கூடாதென்று பிரிட்டிஷ் அரசாங்கம் தடைவிதித்திருந்தது. 1948-ம் வருடம் இலங்கை சுதந்திரமடைந்தவுடன் இந்தத் தடை நீக்கப்பட்டு மன்னரின் கொள்ளுப் பேரர்கள் 1953ல் இலங்கைக்கு வந்தனர்.

இப்பொழுது இலங்கையின் கௌரவப் பிரஜையாக அங்கீகரிக்கப் பட்டிருக்கும் ஸ்ரீ கண்டி ஜி. சுகராஜசிங்கா வேலூரிலும் சென்னையிலும் கல்விபயின்றார். கொழும்பிலுள்ள பிரபல பத்திரிகையான 'டெய்லி நியூ'வில் அவர் இப்பொழுது பணியாற்றிவருகிறார். அவரது பெற்றோர்கள் ஆந்திர ராஜ்யத்தைச் சேர்ந்த சித்தூரில் இருக்கிறார்கள்.

—ரஜனி

வித்துவான் வ. மு. கனகசுந்தரத்துக்குக் களுத்துறையில் நடந்த தமிழ் விழாவில் ஸர் கந்தையா வைத்தியநாதன் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.



அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் க்ரீம்

**85% கிருமிகளை ஒழிக்கிறது சொத்தையும்**

**மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள்**

**அவை**




---




# ஜெய்பேப்ஸ்

## உயர்தரமான ரேயான் ஸில்க்குகள்

**ஜெய் ஹிந்த் ஸில்க் மில்ஸ்**

ஆக்ரா ரோடு, காட்கோபார், பம்பாய் - 39

# எக்லா
## தென் இந்தியா விரும்பும் டால்க்!

**தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு**

இந்த பரத நாட்டியக்காரியைப்போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண கால நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம். மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால் குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

*மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட*

கால்கேட்
# எக்லா
## டால்க் பவுடர்






# உலைக்கூடமா?

பேராசிரியர் அ. சீனிவாசராகவன்

'கவிஞனைக் கொல்லன் ஆக்கி விட்டீர்களே' என்று அங்கலாய்த்துக் கொண்டார் ரசிகர் ஒருவர், போன வார 'இலக்கியச் செல்வ'க் கட்டுரையைப் படித்து விட்டு.

'உண்மைதான். என்னுடைய நெஞ்சு இரும்பைப் போல் இருப்பதால், கவிஞனும் எனக்காகக் கொல்லனாக வேண்டி இருக்கிறது. கொல்லனாவதில் குறை என்ன? இரும்பைக் காய்ச்சி உருக்கும் கொல்லனும், மண்ணெடுத்துக் குடங்களைச் செய்யும் குயவனும், பாட்டும் செய்யுளும் கோத்திடும் புலவனும், எந்தத் தொழிலாளியும்

'தேட்டமின்றி விழி எதிர்காணும்
தெய்வம்'

என்றுதானே கவிஞர் பாரதியார் பேசுகிறார்? இரும்பைக் காய்ச்சி உருக்குகிறான் கொல்லன் என்றால், என் நெஞ்சைக் காய்ச்சி உருக்குகிறான் கவிஞன். இவ்வளவுதானே?' என்றேன்.

'இருந்தாலும் கம்பருடைய பாட்டு ஒன்றே ஒன்றை வைத்துக் கொண்டு இப்படியெல்லாம் முடிவு கட்டலாமா?' என்று ஒரு போடு போட்டுவிட்டு, என் பதிலுக்குக் காத்திராமல் போய் விட்டார் அவர்.

ஒரு பாட்டா, ஒரு பாட்டுத்தானா இருக்கிறது? கற்பனைத் தீயினாலும், சொல், சந்தம் என்ற சம்மட்டியாலும், தன்னுடைய அனுபவக் கனலை, நம்முடைய நெஞ்சில் கவிஞன் ஏற்றுகிறான் என்பதை நமக்குக் காட்ட, கம்பருடைய காவியத்தில் ஒன்றா, இரண்டா, நூற்றுக் கணக்கான பாடல்களைக் காணலாம். நாம் மாத்திரம் அவருடைய காவிய உலகத்திற்குப் போய்ப் பார்க்க வேண்டும்.

'அந்த வருத்தம் உங்களுக்கு எதற்கு? இதோ நானே வந்துவிட்டேன்' என்று வருகிறார் கம்பர். ஆம். தேரழுந்தூரிலிருந்துதான். 'காவேரி தங்கும்' அந்த ஊரின் பொன் வயலும், பனி முத்துக்கள் பளபளக்கும் புல்லடர்ந்த வரப்பும், செங்கழுநீர்ப் பொய்கையும், சோலையும், வண்டும், அன்னமும், எருமையும் மருதநில வளத்தின் ஆயிரமாயிரம் முத்திரைகளும், அவர் மனத்தில் அலை இல்லாத பெரு வனப்பாகத் திரண்டு கோலம் சமைக்கின்றன. இதை நமக்குச் சொல்ல வருகிறார். 'எங்கள் ஊர் மிகுந்த அழகுடையது' என்று சொன்னால் போதுமா? கம்பர் மனத்தில் பெருகும் அழகு வெள்ளம் நமக்கு வந்து சேருமா? சேராது. இது கவிஞருக்குத் தெரியும். நம்முடைய மனம், அழகுணர்ச்சி வெள்ளம் எளிதிலே ஏறாத மேட்டுக் கரடு என்பது அவருக்குத் தெரியாதா?

'இதோ, வரப்பிலே முத்துக்கள் சிதறிக்கிடக்கின்றன' என்று தொடங்கு

கிறார் கம்பர். வரப்பிலே முத்தா? ஆம், வெயிலில் மின்னுகின்ற பனித் துளி முத்து. இல்லை, உண்மையான முத்துக்கள் என்றே வைத்துக்கொள்ளு வோமே, என்ன குடி முழுகிப் போகிறது? சங்கிலிருந்து முத்து விளையும் என்று பழங்காலத்தில் எண்ணியிருந் தார்கள். அந்தக் கற்பனை—முத்தாகவே தான் இருக்கட்டுமே! வரப்பிலே முத்து. இதனால் நமது நெஞ்சிலே அழகின் முதல் அலை.

கம்பர் பேசுகிறார்:

'தண்ணீர் துள்ளிப் பாய்கின்ற மடையைப் பார். அந்தக் கருநீல வீச்சில் இடை இடையே வெண் சங்குகள் புரளுகின்றன. ஆறு போல் பாயும் வாய்க்காலின் இரு புறமும் என்ன, வயல்களா, இல்லை, இல்லை, தங்கத் தகடு. இந்தப் பொன் பரப்பின் நடுவில் செங்கழு நீர் மலர்கள் கொள்ளையாய்க் கிடக்கின்றன. அவற்றில் புரளுகிறது கார் எருமை. பக்கத்திலே, பரம்படித் துச் சமமான நிலம், அதன் மேல் என்ன, செந்நிறப் பூக்கள் உதிர்ந்திருக் கின்றனவா? யார் சொன்னது? அவை பவளங்கள். பவளந்தானா என்று பார்ப் பதற்குத்தானோ என்னவோ, பச்சை வயலின் ஊடே அன்னங்கள் மிதந்து வருகின்றன. இதோ, தேன் சொரியும் கரும்புத் தோட்டம். அந்தத் தேனை உண்டு இசை பாடும் வண்டுகளின் கூட்டம், அடடா! பார் தம்பி, பார், அழகுக் கடல் அலையலையாகப் பெருகி வருகிறது.

> வரம்பெலாம் முத்தம்:
> தத்து மடையெலாம் பணிலம்: மாநீர்க்
> குரம்பெலாம் செம்பொன்:
> மேதிக் குழியெலாம் கழுநீர்க் கொள்ளை;
> பரம்பெலாம் பவளம்:
> சாலிப்பரப்பெலாம் அன்னம்: பாங்கர்க்
> கரும்பெலாம் செந்தேன்:
> சந்தக் காவெலாம் களிவண்டீட்டம்.'

[வரம்பு - வரப்பு; தத்துமடை - தண்ணீர் துள்ளும் மதகு; பணிலம்-சங்கு; மாநீர்-பெருவாய்க்கால்; குரம்பு - கரை; மேதி-எருமை; கழுநீர்-செங்கழுநீர்ப்பூ; கொள்ளை-மிகுதி; பரம்பு - சமநிலம்; சாலி-நெல்; பாங்கர்-அருகில்; சந்தக்கா-அழகிய சோலை; ஈட்டம் - கூட்டம்.]

இப்படி அழகுச் செய்திகள் ஒன்றன் மேல் ஒன்றாகவந்து, சூடேற்றி அடிக்கும் போது, நம்முடைய மனமும் நெகிழ்ந்து கவிஞன் உணர்ந்த எல்லையற்ற அழகை நோக்கி வளைகிறது.

அழகுணர்ச்சி மாத்திரம் இல்லை, எந்த உணர்ச்சிப் பெருக்கைத் தருவ தற்கும் 'வளம்' என்ற இந்த முறையைக் கவிஞன் கையாளுகிறான்.

இந்திரசித்து வீசிய பிரம்மாத்திரத் தால் கட்டுண்டு, இலங்கைப் போர்க் களத்தில் லக்ஷ்மணன் விழுந்து கிடக் கிறான். இதைக் கண்ட ராமன் துயரத் தால் உணர்விழந்து கீழே சாய்கிறான். இருவரும் இறந்தனர் என்று எண்ணி மகிழ்ந்த ராவணன், 'இதுதான் சமயம் சீதையின் மனத்தை மாற்ற' என்று நினைத்து, சீதையைப் போர்க்களத் துக்கு அழைத்துச் சென்று ராம லக்ஷ் மணர்கள் மூச்சின்றிக் கிடப்பதை அவளுக்குக் காட்டும்படி அரக்கியருக்குக் கட்டளை இடுகிறான். சீதை போர்க் களத்திற்கு வருகிறாள்; உயிரற்றவன் போல், கீழே கிடக்கும் கணவனைப் பார்க்கிறாள்; நெருப்பிலிட்ட தாமரைப் பூவைப் போலத் துடிக்கிறாள். 'பெண் ஒருத்தி அடைந்த இந்தத் துயரத்துக்கு எல்லை ஏது? உலகத்தை யெல்லாம் விட, இது பெரியதல்லவா?

> பெண்தான் உற்ற பெரும்பீழை உலகுக்
> கெல்லாம் பெரிதன்றோ?'

என்று நம்மைப் பார்த்துக் கேட்கிறார் கம்பர். உலகத்தைவிடப் பெரிய இந்தத் துயரத்தை நாம் உணரும்படி செய்ய வேண்டுமே! 'சீதையைப் பார்' என் கிறார் கவிஞர். நாம் திரும்புகிறோம். திரும்பிக் காண்பது என்ன?

> விழுந்தாள் புரண்டாள் உடல் முழுதும்
> வியர்த்தாள் அயர்த்தாள் வெதும்பினாள்,
> எழுந்தாள் இருந்தாள் மலர்க்கரத்தை
> நெரித்தாள் சிரித்தாள் ஏங்கினாள்:
> கொழுந்தா என்றாள் அயோத்தியர்தம்
> கோவே என்றாள் எவ்வுலகும்
> தொழும் தாள் அரசே, ஓ என்றாள்
> சோர்ந்தாள் அரற்றத் தொடங்கினாள்.

பாட்டைப் படித்தீர்கள் அல்லவா? 'விழுந்தாள், புரண்டாள், வியர்த் தாள், அயர்த்தாள்' என்று ஒன்றன்பின் ஒன்றாகச் செய்திகள் அவலச் சூறாவளி யின் இடையறாத குரலாக வருகின்றன. ஒன்றின் மூலமாக நாம் உணர்ந்த துய ரம் தணிவதற்குள் இன்னொன்று வரு கிறது. அதன் வேகம் குறைவதற்குள் வேறொன்று வருகிறது. இப்படியாக, பாட்டைப் பாடி முடிக்கும்போது, பெண்ணொருத்தியின் துயரத் துடிப்பு நம்முடைய நெஞ்சில் அலகில்லாத அவலமாக வடிவெடுத்து விடுகிறது. சீதையோடு நாமும் சோர்கிறோம், நாமும் அரற்றத் தொடங்குகிறோம்.

கம்பர் மட்டுமில்லை, கவிஞர்கள் எல் லோரும் அவ்வப்போது கையாளுகின்ற முறைதான் இது. எல்லா இலக்கியங் களிலும் இதைக் காணலாம். தமிழிலும் காணலாம், நிறையக் காணலாம். அப்

பர் சுவாமிகள், இறைவனுடைய பாதத்தில் தமது நெஞ்சை இணைத்துப் பெற்ற பேரின்பத்தை நமக்கு எப்படி உணர்த்துகிறார், பாருங்கள் :

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கு இளவேனிலும்
மூசு வண்டு அறை பொய்கையும்
போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

*[மாசில்—குற்றமில்லாத; வீங்கு—வளரும்; மூசு—மொய்க்கின்ற; அறை—ஒலிக்கின்ற.]*

மாசு மறு இல்லாத வீணை இசை, அந்திப் பொழுது, சந்திரன், வீசுகின்ற தென்றல், விம்மிப் பூரிக்கின்ற இளவேனிலின் சோலை, வண்டுகள் மொய்த்துப் பாடுகின்ற மலர்ப் பொய்கை— இவை அனைத்தும் ஒன்ருகத் திரண்டு வந்து, அப்பர் உள்ளத்தில் எழுந்த பேரின்ப உலகுக்கு நம்மை அழைத்துச் செல்கின்றன.

கடவுளின் அலகிலாத் தன்மையை உணர்ந்து, அதைச் சொல்லில் வடிவாக்க முடியவில்லையே என்று தவிக்கின்ற நம்மாழ்வார், அந்தத் தவிப்பையும், மனமும் சொல்லும் கடந்து இறைவன் நிற்பதால் ஏற்படும் பெருவியப்பையும், எப்படி நம்முடைய உடைமை ஆக்குகிருர், பார்ப்போம் :

'கண்ணனைக் கூவுதல் தான் எப்படியோ? என்ன சொல்லி அழைப்பேன் அவனை? எந்தப் பெயர்தான் அவன் தன்மை முழுவதையும் உணர்த்தும்? நான் புகழும் ஒருவன் என்று வேண்டுமாளுல் சொல்லலாமே ஒழிய, என் புகழ்ச்சி அவனை முற்றிலும் அளந்து விடவா போகிறது? ஒப்பற்ற பெருமை உடைய இந்தப் பூமி என்று அழைக்கட்டுமா? கண் முன்னே ஆழ்ந்து அகன்று புரளுகிறதே இந்தக் கடல், இது என்று சொல்லட்டுமா? தீ என்று பேசவா, வாயு வென்று, ஆகாசமென்று குறிக்கவா, சந்திரன் சூரியன் என்று சுட்டிக் காட்டவா, அல்லது இவை எல்லாம் என்று சொல்லவா? செய்வதென்ன, விளங்க வில்லையே! கண்ணனை எவ்வாறு வருணிப்பேன், எவ்வாறு அழைப்பேன்?' என்று நம்மாழ்வார் அதுவா, இதுவா, மற்றென்று என்று அண்டப் பெருவெளி முழுதும் துழவிப் பரபரத்து நிற்கும் பரவச நிலையை, பாட்டிலே அடுக்கடுக்காக வரும் செய்திகள் உணர்த்தி விடுகின்றன :

புகழுநல் ஒருவன் என்கோ
பொருவில் சீர்ப்பூமி என்கோ
திகழும்தண் பரவை என்கோ
தீ என்கோ வாயுஎன்கோ

நிகரும் ஆகாசம் என்கோ
நீள்கடர் இரண்டும் என்கோ
இகழ்வில் இவ்வனைத்தும் என்கோ
கண்ணனைக் கூவு மாறே

[பொருவில்-ஒப்பற்ற; பரவை-கடல்; இகழ்வில்-குறை இல்லாத; என்கோ-என்று சொல்லட்டுமா?]

இன்னும் ஒரு பாட்டைப் பார்க்கலாமா? இது பாரதியாருடைய 'பாஞ்சாலி சபத'த்திலிருந்து வருகிறது. துரியோதனன் சபையிலே, அவன் தம்பியான துச்சாதனன், திரௌபதியின் கூந்தலைப் பற்றி இழுத்து, அவள் துகிலை உரிகிறான். பெண்ணொருத்தியின் மானத்தைக் காக்கச் சபையிலிருந்தோர் ஒருவராவது முன்வரவில்லை. அங்கும் இங்கும் பார்த்துப் பரதவித்தாள்; எங்கிருந்தும் உதவியைக் காணோம். 'திக்கற்றவருக்கு வேறு யார் துணை' என்று இறைவனை நோக்கித் திரும்பினாள்:

உட்சோதியிற் கலந்தாள்—அன்னை
உலகத்தை மறந்தாள் ஒருமை உற்றாள்
................
'ஐயநின் பதமலரே—சரண்
ஹரி, ஹரி, ஹரி, ஹரி, ஹரி' என்றாள்

உடனே, அற்புதம் ஒன்று நிகழ்கிறது. திரௌபதியின் துகில் வளர்ந்து கொண்டே இருக்கிறது. கழற்றக் கழற்றப் புதிது புதிதாக, வண்ணப் பொற்சேலைகள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. இந்த அற்புதத்தில் மலரும் வியப்பை — அலகிலாத பெரு வியப்பை — நமது புது யுகக் கவிஞன் எப்படிச் சொல்லுகிறான்?

உலகிலே பொய்யர்களுடைய துயரமும் புண்ணியம் செய்வாருடைய புகழும் முடிவில்லாமல் வளர்கின்றன. தாய்மாருடைய அன்பு, அதற்கு எல்லையுண்டா, அதுவும் முடிவில்லாமல் பெருகுகிறது. கடலைப் போல. கடலா, நல்லது, அதைத்தான் பார்ப்போமே. அதன் அலைகளுக்கு எண்ணிக்கை உண்டா, ஓய்வு உண்டா, ஒழிவு உண்டா? பெண்ணின் பெருமையைப் பாராட்டும் பெருமக்களுடைய செல்வமும், இந்தக் கடலைப் போல அளவில்லாமல் பெருகுகிறது.

பொய்யர் தம் துயரினைப் போல்—நல்ல
புண்ணியவாணர் தம் புகழினைப்போல்
தையலர் கருணையைப் போல்-கடல்
சலசலத் தெறிந்திடும் அலைகளைப் போல்,
பெண்ணொளி வாழ்த்திடுவார்-அந்தப்
பெருமக்கள் செல்வத்தின் பெருகுதல்போல்

இவை ஒவ்வொன்றையும் போல, இவை எல்லாவற்றையும் போல,

வண்ணப் பொற் சேலைகளாம்-அவை
வளர்ந்தன, வளர்ந்தன, வளர்ந்தனவே.

சேலைகள் மட்டுமா, நம்முடைய வியப்பும் வளர்கிறது, வளர்கிறது, வளர்ந்து கொண்டே செல்கிறது. எதனால் என்று எண்ணிப் பார்த்தீர்களா? கவிஞனுடைய உலைக்கூடத்தில் அவனுடைய கற்பனைத் தீயில், சொல்லின் வீச்சில், நம்முடைய மனம் பண்பட்ட காரணத்தினாலேதான், வேறு என்ன? (தொடரும்)

## வரவேற்கிறோம்



ஸ்ரீ கே. என். சீனிவாசன்

நகர சபையின் புதிய மேயராக ஸ்ரீ கே. என். சீனிவாசன் அவர்களும், உதவி மேயராக ஸ்ரீ கே. ராமதாஸ் அவர்களும் பதவி ஏற்றுள்ளார்கள். இருவரும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த சிறந்த தேச பக்தர்கள். நகர சபை அலுவல்களில் நீண்ட கால அனுபவம் பெற்றவர்கள். உதவி மேயர் ஸ்ரீ ராமதாஸ் பொது ஜன சேவையே புனிதப் பணியாகக் கருதுபவர். கீர்த்தி வேண்டாத உழைப்பாளி. நகரசபை மேயர், உதவி மேயர் இருவரையும் வாழ்த்துக் கூறி வரவேற்கிறோம்.



ஸ்ரீ கே. ராமதாஸ்

# பினிக்ஸ் உங்களை அழகு படுத்துகிறது

Ruia
Fabrics

**பினிக்ஸ் ப்ரிண்ட்ஸ், வாயில்கள், வீரேஸ்**

அழகு வாய்ந்த பினிக்ஸ் ப்ரிண்ட்ஸ், வாயில்கள் மற்றும் வீரேஸ் இவைகளை உபயோகியுங்கள். உங்கள் வனப்பை எடுத்துக்காட்ட அவை உதவுகின்றன. உங்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்கும் முறையில் அவை தயாரிக்கப்பட்டவை. நாள் முழுவதும் அணிந்தபோதிலும் அவை மொடமொடப்பையும் புதுமையையும் இழக்கமாட்டா.

**அவை நேர்த்தியானவை என்பதை நீங்கள் உணர்வீர்கள்**



தி பினிக்ஸ் மில்ஸ் லிமிடெட், லோயர் பரேல், பம்பாய்—13

# அபூர்வ மனிதன்

## தே. வீரராகவன்

விண்ணுக்கும் மண்ணுக்கும் கடும்போர் மூண்டு விட்டதோ என்று எண்ணும்படி, வானம் மழையைக் கொட்டுக் கொட்டென்று பொழிந்து பூமியை வெள்ளக்காடாக்கி விட்டது. பல வருஷங்களாக, அவ்வளவு அதிகமான மழை பெய்ததில்லையென்று எங்களூரில் பெரியவர்கள் சொன்னார்கள். எங்களூருக்கும் வெள்ளைக் குப்பத்துக்கும் நடுவே ஓடும் சரபங்கா நதி கூட, அன்று நடுப்பகலிலிருந்து, கட்டுமீறிக் கரையைக் கடந்து, கண்ட விடங்களிலெல்லாம் சீறியோடித் தன் கை வரிசையைக் காட்ட ஆரம்பித்துவிட்டது. சரபங்காவின் சாந்தமான இயல்பை அறிந்திருந்த காரணத்தாலோ என்னவோ, அரசாங்கத்தார் எங்களூரையும், வெள்ளைக் குப்பத்தையும் பிரித்து வைத்திருக்கும் சரபங்காவுக்குக் கைப்பிடிச் சுவருடன் கூடிய இணைப்புப் பாலம் தேவையில்லையென்று நினைத்து மூன்று அடி உயரமுள்ள மொட்டைப் பாலத்தை மட்டும் கட்டி விட்டார்கள். ஆனால் "சாது மிரண்டால் காடு கொள்ளாது" என்ற உண்மை அந்த நாள் ஆங்கில அரசாங்கத்தாருக்கு எட்டாமற் போனது எங்களது துரதிருஷ்டம்தான்.

அன்று பாலத்தின்மீது சுமார் இரண்டு அடித் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. வெள்ளத்தில் சுழிப்பும் இழுப்பும் மிக அதிகமாகவே இருந்தன. வண்டிப் போக்குவரத்தும், மக்கள் நடமாட்டமும் துண்டிக்கப்பட்டன. நதியின் இரு கரைகளிலும், வந்த வண்டிகளும், போக வேண்டிய வண்டிகளும் அப்படியப்படியே நின்று விட்டன. தம் பலத்தையும், தைரியத்தையும் விளம்பரப்படுத்திக் கொள்ளவோ, அல்லது தம் ஆயுள் பலத்தைப் பரீட்சை செய்து கொள்ளவோ துணிந்து விட்ட இரண்டொரு இளைஞர்களல்லாமல் மற்றவர்கள் அனைவரும் சரபங்காவின் இரு கரைகளிலும் நின்று அதனைச் சபித்துக் கொண்டிருந்தனர்.

மாலை சுமார் ஐந்து மணி யிருக்கும். மணி ஐந்துதானென்றாலும், வானத்தில் குழுமியிருந்த கரு மேகங்களின் பிரதிபலிப்பால், பூமிமீது இருள் அடர்ந்திருந்தது. வாடகைக்காக எங்கோ வெளியூருக்கு அன்று காலையிலேயே சென்ற வெள்ளைக்குப்பத்து ஜட்கா வண்டி கந்தசாமி, மாலை தன் ஜட்கா வண்டியுடன் வந்து எங்களூர்ப் பக்கத்துக் கரையில் நின்றான். காலையில் வண்டியை ஓட்டிக் கொண்டு, தான் சென்றபோது, பாலத்தின் விளிம்பை முட்டிக் கொண்டிருந்த தண்ணீர், இப்போது இரண்டடி சுமாருக்கு உயர்ந்து விட்டதைக் கண்டு திகிலடைந்தான். வெள்ளைக் குப்பத்தில், தன் வீட்டில் நான்கு நாட்களாய் நிமோனியாக் காய்ச்சலால், எமனுடன் போரிட்டுக் கொண்டிருக்கும் ஐந்து வயதுள்ள தன் ஒரே மகன் முருகன் நினைவிழந்து கிடப்பதும், தன் மனைவி நான்கு நாட்களாய்க் கண் மூடாமல் மகன் அருகில் உட்கார்ந்து கண்ணீர் வெள்ளத்தில் மிதப்பதும், அன்றைக்குக் கிடைக்கும் வாடகையைக் கொண்டு டாக்டரை அழைத்துப் பையனுக்கு ஊசி போட்டு விட வேண்டுமென்று அவன் செய்திருந்த தீர்மானமும், கந்தசாமியின் மனத்தில் தோன்றி எப்படியாவது ஆற்றைக் கடக்கத் தூண்டின. வண்டியினுள் உட்கார்ந்தபடியே குதிரையின் கடிவாளத்தை இழுத்துப் பிடித்துக் கொண்டு மெள்ள, வண்டியைப் பாலத்தின்மீது ஓட்டத் தொடங்கினான். கரையின் மீது நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்கள், "கந்தசாமி! ஆற்றில் சுழிப்பும் வெள்ளமும் அதிகமாக இருக்கின்றன. இப்போது போக வேண்டாம். சரபங்கா காவு வாங்க நாக்கைத் நீட்டிக் கொண்டிருக்கிறது. பார்த்துக் கொண்டு போகலாம்" என்று எவ்வளவோ அவனுக்கு எச்சரிக்கை செய்தார்கள்.

கந்தசாமியின் குடும்ப நிலையையும் மனோவேதனையையும் யார் அறிவார்கள்? வீட்டிலிருக்கும் மகன் பாசமும் மனைவியின் கண்ணீரும் உள்ளே யிருந்து அவனை உந்தும்போது, இந்த வெள்ளத்தின் தடையையும், வாயில்லாப் பிராணியாகிய தன் குதிரையின் களைத்துப் போகும் கால்களையும் அவன் எண்ணிப் பார்க்கவில்லை. குதிரையை மெதுவாகப் பாலத்தின் மீது ஓட்டினான். நன்றியறிதலுடைய குதிரையும் வண்டியை இழுத்துக் கொண்டு வெள்ளத்தை எதிர்த்துப் பாலத்தின் நடுப் பாதி வரையில் வந்து விட்டது. தண்ணீரில் மலை மலையாக மிதந்து வந்து கொண்டிருந்த நுரைக் கூட்டங்கள் குதிரையின் கண்களுக்கு அந்த இருட்டில் எப்படித் தோன்றினவோ? குதிரை மிரண்டு பின்னும் போக ஆரம்பித்தது. விஷயம் புரியாத கந்தசாமி சவுக்கடிப் பிரயோகத்தைச் செய்தான். இருட்டும், வெள்ளத்தின் இழுப்பும், நுரைக் கூட்டங்களைக் கண்டதால் ஏற்பட்ட மருட்சியும், களைப்பும், சவுக்கடியின் நோக்காடும் குதிரையின் மனோ தைரியத்தைச் சிதைக்கவே, அது மேலும் மேலும் பின்னுக்கே சென்று பாலத்தின் விளிம்பைக் கடந்து வண்டியைப் பள்ளத்தில் செலுத்தியது. அவ்வளவே! வண்டி, குதிரையுடனும் கந்தசாமியுடனும் பள்ளத்தில் குடை சாய்ந்து தண்ணீரில் மூழ்கியது. கரையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தவர்கள் "வண்டி பள்ளத்தில் விழுந்து விட்டது" என்று வானம் அதிரக் கத்தினார்களே யல்லாமல் கந்தசாமியைக் காப்பாற்ற முன்வரவில்லை. அவரவர் உயிரும் அவரவருக்கு வெல்லமல்லவா?

நீச்சல் தெரிந்திருந்த கந்தசாமி எப்படியோ வண்டியிலிருந்து வெளிப்பட்டு, வெள்ளத்தோடு போராடி, அக்கரை ஏறினான். குதிரையும் தன்னாலான மட்டும் நீந்திப் பார்த்தது. குதிரை மட்டும் தனியாக இருந்தால் நீந்திக் கரை சேர்ந்திருக்கும். தன்னோடு பிணைக்கப்பட்டிருக்கும் பாரமான

வண்டியையும் இழுத்துக் கொண்டு நீந்த முடியாமல் அது வெள்ளத்தில் மூழ்கி இறந்தது. வெள்ளம் வந்தால் சரபங்காவுக்கு ஓர் உயிர்ப் பலி கொடுத்தே ஆக வேண்டும். அது மனித உயிராயிருந்தாலும் சரியே! விலங்கின் உயிராயிருந்தாலும் சரியே! இது சரபங்காவின் நீண்ட வரலாற்றில் ஏற்பட்டுவிட்ட அழிக்க முடியாத ஒரு கறை. உயிரை உண்ட மறு நாளோ, அதற்கடுத்தநாளோ சரபங்காவின் கோபம் தணிந்து விடும். இதுவும் அதன் வரலாற்றில் கண்ட உண்மைதான்.

கந்தசாமியின் தகப்பன் என் பண்ணையில் முப்பது வருஷங்கள் மிக ஒழுங்காக வேலை பார்த்தவன். சென்ற வருஷம் அவன் காலமான பிறகு கந்தசாமி தன் தகப்பன் ஸ்தானத்தில் அமர்ந்து சில மாதங்கள் வேலை செய்தான். கந்த சாமியின் மெலிந்த உடலமைப்புக்கும் பண்ணையின் ராக்ஷஸ உழைப்புக்கும் ஒத்து வராது போகவே, ஒரு நாள் கந்தசாமி தன் உடல் நிலை காரணமாகப் பண்ணை வேலையிலிருந்து நீங்கிக் கொள்ள விருப்பு வதாகத் தெரிவித்தான். அவனுடைய உழைப்புக்காக இல்லாவிட்டாலும், அபூர்வ குணத்துக்காக அவனைவிட எனக்கு விருப்பம் இல்லை. இருந்தாலும் அவன் உடல் நிலைமையை எண்ணி விலகிக் கொள்ளச் சம்மதித்தேன்.

கந்தசாமி அவன் தகப்பனை விட நாணயஸ்தன். கல்வியறிவு இல்லாதவனாயினும் ஒழுக்கமானவன். பேசத் தெரிந்தவன். சிறு வயதிலிருந்தே அவனை நான் நன்றாகக் கவனித்து வந்திருக்கிறேன்.

"பண்ணை வேலையை விட்டு விட்டுப் பிழைப்புக்கு வேறு என்ன செய்யப் போகிறாய், கந்தசாமி?" என்றேன்.

"நம்மூரிலிருந்து சுற்றுப் பக்கத்து கிராமங்களில்நடக்கும் சந்தைகளுக்குப் போகிறவங்களுக்குப் பஸ் வசதி இல்லே, பாருங்க. அதனாலே ஒரு ஜட்கா வாங்கி ஓட்டிப் பிழைக்கலாம்னு யோசனை!" என்றான் அவன்.



"யோசனை நல்லதுதான். பணத்துக்கு என்ன செய்யப் போகிறாய்?"

"அதுக்குத்தான் உங்ககிட்டே ஒரு முந்நூறு ரூபாய் கடன் கேட்கலாம்னு யோசனை. வாரம் பத்து ரூபாயாக முப்பது வாரத்திலே கடனைக் கட்டித் தீர்த்து விடுகிறேன்!"

சற்று யோசித்தேன். கந்தசாமிக்காக இல்லாவிட்டாலும், என்னிடம் முப்பது வருஷங்கள் வெகு நாணயமாகவும், பொறுப்புடனும் வேலை செய்து தன் ரத்தத்தினாலும் வியர்வை வெள்ளத்தினாலும் என் வளத்தைப் பத்துப் பங்காக உயர்த்திய அவன் தகப்பனுக்காகவாவது, அவர் மகனுக்கு முந்நூறு ரூபாய் கடன் கொடுப்பது கடமையும் மனிதத் தன்மையும் ஆகும் என்று என் மனம் கூறியது.

இக்கனிதமாக நான் யோசித்துக் கந்தசாமிக்கு உதவி செய்ய முடிவு செய்தேன். என் முடிவை ஜானகிக்குத் தெரிவிப்பதற்குச் சமையலறைக்குச் சென்று அவளிடம் வெளியிட்டேன்.

"உங்களுக்கும் கடனுக்கும் நான் கைராசி துளிக்கூட இல்லேயே! பல முறைகள் பரீட்சை செய்து பார்த்தாகி விட்டதே! நான் வேண்டாம் வேண்டாமென்று தலையிலடித்துக் கொண்டதைக் கூடக் கேட்காமல் குடு குடு வென்று ஓடி அந்தச் சுப்பிரமணியத்துக்கு இரு நூறு ரூபாயை வீண்

ளாமல் விரியாமல் தூக்கிக் கொடுத்தீர்கள். ஒரு சல்லி திரும்பி வந்ததா? அடுத்தபடியாக அந்தச் சக்கரவர்த்தி ஐயங்காருக்கு நூறு ரூபாய் தந்தீர்கள். உங்களிடம் கடன் வாங்கிய முகூர்த்தம் அந்த மனிதர் உத்தியோகத்திலிருந்தே ஓடி விட்டார்.''

இப்படியாக ஞானலி நான் கடன்கொடுத்துக் கோட்டை விட்ட நபர்களையும், கடன் தொகை வருஷம், மாதம், தேதி முதலிய புள்ளி விவரங்களையும் நினைவுக்குக் கொண்டு வந்தான். அத்துடன், ''உங்களிடம் கடன் வாங்குவதற்கு முன் நல்லவர்களாக இருப்பவர்கள் எல்லாரும் உங்களிடம் கடன் வாங்கிய உடனே அயோக்கியர்களாக மாறி விடுகிறார்கள் அதோடு நம் கைரொக்கமும் கரைந்து கொண்டே போகிறது. கந்தசாமி உண்மையிலே நல்லவனாக இருந்தபோதிலும் அவனுக்குக் கடன் கொடுக்கும் உங்கள் கைராசி அவனையும் மாற்றி விட்டால்...'' என்று எனக்கு எச்சரிக்கை செய்பவன் போல் என் கைராசியையும் குத்திக் காட்டினான்.

''என்ன ஞானலி! ஒருவர் கைராசி என்றைக்கும் ஒரே விதமாக இருக்குமா? கீழே போன அலை மறுபடியும் மேலே வருவதில்லை. கந்தசாமி பரம யோக்கியன். ஒரு நாளும் ஏமாற்ற மாட்டான். ஒரு குடும்பத்தை நிலைக்க உதவி செய்யும் வாய்ப்பு நமக்குக் கிடைப்பது எவ்வளவோ பெரிய புண்ணியமாயிற்றே. அத்துடன் என் கைராசியைக் கடைசி முறையாகக் கந்தசாமியிடம் பரீட்சை செய்து பார்த்து விடுகிறேன்'' என்று என் முடிவைத் தெரிவித்தேன்.

''நன்றாகப் பரீட்சை செய்து பாருங்கள்!'' என்று சொல்லி விட்டு வேகமாகப் போய் விட்டான் ஞானலி.

வாரா வாரம் தவறாமல், என்னிடம் வாக்குக் கொடுத்தபடி பத்து ரூபாய் தந்துவிட வேண்டுமென்று நான் கந்தசாமியிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டேன். பிறகு முந்நூறு ரூபாயை எடுத்து வந்து அவனிடம் கொடுத்து அனுப்பினேன்.

ஒரு வாரத்துக்குள் ஒரு நல்ல குதிரையும் வண்டியும் வாங்கினான் கந்தசாமி. தான் ஒத்துக் கொண்டபடியே வாரா வாரம் பத்து ரூபாய் என்னிடம் கொடுத்துக் கடனையும் கழித்து வந்தான். பத்து வாரங்கள் கழிந்து பதினோராவது வாரம் நடந்து கொண்டிருந்த போதுதான் ஆரம்பத்தில் குறிப்பிட்ட துரதிருஷ்டம் கந்தசாமியைத் தாக்கியது.

இந்தச் செய்தி எனக்குத் தெரிந்த அடுத்த நாள், சரபங்கா வழிவிடாததால் கந்தசாமி வீட்டுக்கு என்னால் போக முடியவில்லை. மூன்றாம் நாள்தான் போக முடிந்தது. என் கை ராசியைப் பற்றி ஞானலி ஏற்கெனவே சொல்லியிருந்த சோதிடம் அன்று என் நெஞ்சிலே நெறிஞ்சி முள்போல் குத்திக் கொண்டிருக்கக் கந்தசாமியின் குடிசையை அணுகினேன். குடிசையின் வாசலில் கந்தசாமியின் மனைவி தெய்வயானை தலைவிரி கோலத்துடன் பிரமை பிடித்து உட்கார்ந்து கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் அவள் ''கோ'' வென்று அலறிப் புடைத்துப் புலம்பத் தொடங்கி விட்டாள். அப்போது என் கண்களைத் திரையிட்ட கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நான், ''தேவானை...குதிரையும் வண்டியும் போனால் போகிறது.... அழாதே.... எங்கே கந்தசாமி?'' என்றேன்.

''ஐயோ, ஐயா! குதிரை மட்டுமா செத்தது? கூட என் மகன் முருகனும் முந்தாநாள் செத்துப் போயிட்டானே!...செத்த மகனைக்கூட வாரிப் போடறதுக்கில்லாமே மூன்று நாளா அவரும் எங்கே ஓடிப்போயிட்டாரே...அன்றைக்குக் கிடைச்ச அஞ்சு ரூபாய் வாடகையைக் கொடுத்தூட்டு டாக்டரைக் கூட்டி வரேன்னு போனவரு, திரும்பியே வரலீங்களே! இந்தப் பாவியை இப்படித் தனியாகத் தவிக்கவிட்டுட்டு மகனும் போயிட்டான்; அவரும் போயிட்டாரே! என்ன செய்வேன், ஐயா!'' என்று பல இடிகளை ஒரே சமயத்தில் தெய்வயானை என்னுடைய தலை மீது வீசினாள்.

மகாப் பிரளய வெள்ளத்தில் சிக்கிக் கொண்ட ஒரு ஜீவன் போல் நான் செயலிழந்து நிலை குலைந்து ஊமையாய் நின்றேன். கருணையற்ற இந்த உலகில் அநாதையாய் விடப்பட்ட தெய்வயானையின் பரிதாப உருவம் எதிரில் நின்று என்னைக் கொன்றது: சட்டைப் பையில் கையை விட்டு இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்துத் தெய்வயானையிடம் கொடுத்து, ''தேவானை! இதை வைத்துக் கொண்டு மேலே நடக்க வேண்டியதைக் கவனி. அழுதால் ஆகப் போவதில்லை. கந்தசாமி மானஸ்தர். கடமை தெரிந்தவன். எதிர்பாராது ஏற்பட்ட மன அதிர்ச்சியில் எங்கோ ஓடி விட்டிருக்கிறான். சீக்கிரமே வந்து விடுவான். நானும் அவனைப் பற்றி விசாரிக்கிறேன். அவன் வரும் வரையில் நீ என் பண்ணையில் வேலை செய்தாலும் செய்; அல்லது வேறு எங்கேயாவது வேலை செய்து பிழைத்தாலும் சரி. உனக்கு ஏதாவது உதவி தேவையாயிருந்தால், கொஞ்சமும் தயங்காமல்





• மூட்டைப் பூச்சி: என்னப்பா இது, இப்படி ஒரே யடியாக மெலிஞ்சு போயிட்டே?

கொசு: என்ன பண்றது! பனி காலமாச்சே. எல்லாரும் தலையோடு கால்வரை ஒரேயடியாக நல்லாப் போர்த்திக்கிட்டில்லே தூங்கறாங்க!

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

என்னை வந்து கேள்!'' என்று ஆறுதல் கூறி விட்டுத் திரும்பினேன்.

கந்தசாமி ஊரை விட்டோடி மூன்று மாதங்களாகிவிட்டன. இதற்கிடையில் நான் தெய்வயானையை இரண்டு மூன்று முறைகள் சந்தித்து அவளுடைய நிலைமையை அறிந்து வந்தேன். அவள் புல் வெட்டி விற்று வயிறு வளர்த்து வந்தாள்.

ஒருநாள், நடுப்பகல். நான் சாய்வு நாற்காலியில் அமர்ந்து, உண்ட மயக்கத்தை ஆற்றிக் கொண்டிருந்தேன். கந்தசாமி என் எதிரில் வந்து நின்றான்.

'' என்ன கந்தசாமி? எப்போது வந்தாய்?''

கந்தசாமி பதில் சொல்லாமல் விசித்து விசித்துக் குழந்தைபோல் அழுதான்.

கந்தசாமி தான் கொண்டு வந்திருந்த இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களையும் என் எதிரேயிருந்த முக்காலியின்மீது வைத்தான்.

'' ஏது கந்தசாமி இது? கடன் வாங்கி வந்தாயா? அல்லது சம்பாதித்தாயா?''

'' கடன் வாங்கலீங்க ஐயா! உங்களைப் போலத் தர்ம குணம் உடைய ஒரு புண்ணியவான் என் பரிதாப நிலைமையைக் கேட்டு மனம் இரங்கி இனாமாகக் கொடுத்தாருங்க.''

'' அப்படியா? அவர் யார்? அவரை நீ எங்கே சந்தித்தாய்?''

'' குதிரை செத்துப்போன பிறகு உங்கள் கடனை எப்படித் தீர்க்கிறது என்ற விசாரம் என்னைப் பிடிச்சிக்கலே, எனக்கு வீட்டிலே இருக்கப் பிடிக்கல்லே. அன்னைக்குக் கிடைச்ச எட்டு ரூபாய் வாடகையிலே, அஞ்சு ரூபாயைத் தேவானைகிட்டே கொடுத்துட்டு, டாக்டரை அழைச்சுக்கிட்டு வருகிறதாகச் சாக்கு சொல்லி மீதிரூபாய் மூன்றையும் எடுத்துக்கிட்டுச் சென்னைப்பட்டணம் போனேன். நாலைஞ்சு நாள் ஒரு வேலையும் கிடைக்காமல் தெருத் தெருவாகச் சுற்றி அலைஞ்சேன். கடைசியாக, திருவல்லிக்கேணியிலே, ஜட்கா வண்டிகளை வாடகைக்கு விடும் ஒரு முதலாளியிடம், ஜட்கா வண்டி ஓட்டுகிற வேலையிலே சேர்ந்தேன். அன்றாடம் கிடைச்ச பணத்தை அவரிடம் நாணயமாகக் கொடுத்துடுவேன். அவருக்கு என்மேல் ரொம்பப் பிரியம் ஏற்பட்டுடுத்துங்க. அன்று காலையிலே வழக்கமா நிற்கிற இடத்திலே ஜட்காவை நிறுத்திக்கிட்டு இருந்தேன். ஒரு வியாபாரி, அப்போ, ஏராளமான சாமான்களை எடுத்துக்கொண்டு என் கிட்ட வந்து, 'சென்ட்ரலுக்கு என்ன கூலி கேட்கிறாய்?' என்று கேட்டார்.

'நீங்க கொடுக்கிற கூலியை வாங்கிக்கறேன்' என்று நான் சொன்னேன்.

வண்டியில் உட்கார்ந்த அவர், 'நீ எந்த ஊர்?' என்று கேட்டார்.

'சேலம் பக்கம்' என்றேன் நான்.

'அடே! நீ நம்ம ஊர் ஆளா!' என்று கேட்டுக் கொண்டே, சாமான்களை வண்டியிலே ஏற்றிவிட்டு அவரும் ஏறிக்கிட்டார். வழியிலே என் கதை யெல்லாம் கேட்டார். நானும் வெள்ளத்திலே குதிரை செத்தது வரையில் என் கதை முழுதையும் அழுது கொண்டே சொன்னேன். அவர் ரொம்பவும் அநுதாபத்தோடு கேட்டார். அவரை ஸ்டேஷனிலே விட்டுவிட்டுத் திரும்பியதும் நான் வண்டியை ஓட்டிக் கொண்டு வெளியே வந்து, வண்டி உள்ளே சுருட்டிக்கிட்டுக் கிடந்த ஜமக்காளத்தைச் சரியாய்ப் போட எடுத்தபோது ஒரு பர்ஸ் தொப்புன்னு கீழே விழுந்தது. அது அவருடையதுதான்னு எனக்குத் தெரிஞ்சுடுத்து. உடனே வண்டியை ஒரு ஓரத்திலே நிறுத்தி விட்டு ஸ்டேஷனுக்கு ஓடினேன். டிக்கட்டு வாங்குகிற இடத்திலே ஒரே கூட்டம். கூட்டத்து நடுவிலே இரண்டு போலீஸ் தொப்பிகள் தெரிந்தன. கூட்டத்துக் குள்ளே நுழைஞ்சேன். அந்தச் சேலத்து வியாபாரி பேய் பிடித்தவர்மாதிரி மிரளமிரள விழித்துக்கொண்டிருந்தார். போலீஸ்காரர் பதினைஞ்சு வயசுப் பையன் ஒருவனை மிரட்டி அடித்துக் கொண்டு இருந்தாங்க. நான் அந்த வியாபாரியிடம், ''ஐயா! வண்டியிலே உங்க பர்சை போட்டுட்டு வந்து விட்டீங்களே? இந்தாருங்கள்!'' என்று கொடுத்தேன்.

போன உயிரு வந்தமாதிரி அந்த வியாபாரி சந்தோஷப்பட்டாரு. கூட்டம் கலைஞ்சு போலீஸ்காரரும் போனபிறகு, அவர் பர்சைத் திறந்து பார்த்தார். அவரு அதிலே வைத்திருந்த இரண்டாயிரம் ரூபாயும் அப்படியேயிருந்ததைப் பார்த்து, 'கந்தசாமி! போன நிம்மதியை நீதான் திருப்பிக் கொடுத்தாய். அத்துடன் அநியாயமாய் வேறு ஒருவனுக்குக் கிடைக்க இருந்த தண்டனையையும் தடுத்தாய். உன்னிடம் இருக்கிற நாணயம் பெரிய மனிதர்களிடத்திலகூடக் கிடையாது. ஊரில் இருநூறு ரூபாய் கடன் இருப்பதாகச் சொன்னாயே. அதனைத் தீர்த்து விடு!' என்று கூறி இருநூறு ரூபாயையும் கொடுத்து விட்டு அந்த ரயிலிலேயே ஏறிப் போயிட்டாங்க. நானும் என் எஜமானர்கிட்டே சொல்லிப் போட்டு அவர் கொடுத்த ஐம்பது ரூபாயையும் வாங்கிக் கொண்டு நேற்று ராத்திரியே ரயிலேறி ஊருக்கு வந்து சேர்ந்தேனுங்க. உங்களிடத்திலே இந்த இருநூறு ரூபாயையும் கொடுத்தால் தானுங்க எனக்கு நல்லாத் தூக்கம் வரும். ஐயா! உண்மையைச் சொல்றேன்....நான் நல்லாத் தூங்கி மூணுமாசமாச்சுங்க!'' என்று கந்தசாமி தன் வரலாற்றைச் சொல்லிமுடித்தான்.

நான் தழுதழுத்த குரலில் ''கந்தசாமி! நீ ஒரு அபூர்வமனிதன்!'' என்றேன்.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

# 5. மனக் குழப்பம்

சின்னத்துரை பாழ் மண்டபத்தைப் பற்றிக் குறிப்பிட்டதும், பானுவுக்குத் திக்கென்றது. ஒரு கணத்தில் பானு சமாளித்துக் கொண்டு விட்டாள். மறைந்த புன்னகை மீண்டது உதடுகளிலே.

''எதற்குச்சிரிக்கிறீர்களாம்? அந்த மண்டபத்திலே என்னவாம்?''

மாயாஜாலங்கள் செய்து மனசை மயக்கும் அந்தி வேளை. அழகான சூழ்நிலை. எதிரே நிற்பவளோ அவள். சின்னத்துரைக்குக் கடுமையும் கோபமும் ஆத்திரமும் எங்கே போயிற்றென்றே தெரியவில்லை. அதற்குப் பதிலாகத் தன்னையும் அறியாமல் அவன் குரலில் கேலியும் களிப்பும் நடனமிட்டன.

''ஒன்றுமில்லை. யாரோ பிச்சைக்காரப்பயல்கள் வந்து இறங்கி யிருக்கிறார்களாம். இருக்கட்டும், நீ இந்த நேரத்திலே தண்ணீர் எடுக்கவா வந்தாய்?'' என்று கேட்டான்.

அவள் களுக்கென்று சிரித்தாள்.

''இல்லை. குடத்திலே காற்றைப் பிடித்துப் போக வந்தேன்!''

சின்னத்துரை இதற்கு என்ன மறுமொழி பகர்வதென யோசிப்பதற்குள் அவள், ''நீங்கள் பிச்சைக்காரர்களைப் பார்க்கத்தான் இப்போது போய்க் கொண்டிருக்கிறீர்களாக்கும்!'' என்றாள் தொடர்ந்து.

சின்னு இதற்குப் புத்திசாலித்தனமாகவே டக்கென்று பதிலளித்தான்.



''பார்த்துப் போக வரவில்லை. உதைகொடுத்துத் துரத்த வந்தேன். இந்தப் பயல்களுக்கெல்லாம் இடம் கொடுக்கவே கூடாது!'' அவன் குரலில் சட்டென்று தோன்றி விட்ட காரத்தையும் விழிகள் ஜ்வலித்ததையும் பானு கவனித்தாள்.

''ஐயோ! கரண்டியைத்தான் தூக்குவீர்கள் என்று நினைத்தேன்? எதற்கு உங்களுக்கு இந்த அநாவசியச் சன்னை எல்லாம்? பாழ்மண்டபம் பொது இடம்தானே?'' என்று கேட்டாள் பானு.

'கரண்டியைத்தான் தூக்குவீர்கள்' என்று அவள் மொழிந்தது அவன் இருதயத்தில் சுரீரென்று தைத்தது. 'உன் கண்முன் நானும் உத்தியோகம் செய்யாமல் இருக்கப் போகிறேனா பார்?' என்று மனசில் உறுதி கூறிக் கொண்டவனாய், ''அதற்குக் கண்ட பயல்களும் வந்து குந்தவும் கும்பல் கூடவும் விடலாமா?'' என்று திருப்பிக் கேட்டான்.

''கூடிவிட்டுப் போகிறார்கள். பிச்சைக்காரர்கள் எங்கே போவார்கள் பின்னே? மேலும் அதுவே பாழ் மண்டபம்தானே!''

''இந்தப் பயல்களால்தான் அது பாழாய்ப் போச்சு. ஏது ஏது? பிச்சைக் காரர்களுக்கு நீ இவ்வளவு தூரம் பரிந்து வருகிறாயே?'' என்றான் சின்னத்துரை.

''நான் ஒன்றும் பரிந்துவரவில்லை. உங்களுக்கு ஏன் அநாவசிய வம்பு என்று சொன்னேன். அவர்கள் திருட்டுக் கும்பலா யிருந்தால் ஊரில் போலீஸ் இல்லையா? அதற்கேற்ற மனிதர்கள் இல்லையா?''

''போலீஸாம், இன்னொன்றும். ஊரிலே அக்கிரமம் நடக்கிறது. அயோக்கியன் யோக்கிய வேஷம் போட்டு ஊரை ஏமாற்றுகிறான், காதல் கடிதாசி எழுதுகிறான்!......''

பானு கண்ணிதழ்களைக் கொட்டியவளாய்ப் புத்திசாலித்தனமாகத் தன் விழிகளால் அவனை ஊன்றிப் பார்த்தாள். முகம் ஒரு கணத்தில் அந்தி மறைந்து இருள் படருவதைப் போல் சோபை குன்றி விட்டது.

''ஏதேனும்......கடிதாசி எனக்கு வந்ததா?... கொடுத்து விடுங்கள்.''

ராஜம் கிருஷ்ணன்

என்றான் பாலு தாழ்ந்த குரலில் தட்டுத் தடுமாறியபடியே. சின்னத்துரையின் புன்னகையில் இப்போது கர்வமும் ஏளனமும் தோன்றின.

''அப்படி வா வழிக்கு. உன்னிடம் கொடுக்க எனக்குப் பைத்தியமா?..... கொடுக்க வேண்டிய இடத்தில் கொடுப்பேன். அது போய்ச் சேர வேண்டிய இடத்தில் போய்ச் சேரும்.... ஹஹ்ஹா......'' அவன் அட்டகாசச் சிரிப்பு அவளைக் கலக்கிவிட்டது.

''தயவுசெய்து தந்து விடுங்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்'' என்று கெஞ்சினாள்.

சின்னத்துரை இன்னும் சிரிப்பை நிறுத்தவில்லை.

''தயவுசெய்து கொடுத்து விடுங்கள். எப்படிக் கடிதம் உங்கள் கைக்கு வந்தது?'' என்று பதறினாள் பாலு.

''ஓகோ? என் கைக்கு வரக் கூடாதது வந்து விட்டதோ? கொடுக்க வேண்டிய இடம் வேறம்மா!'' என்று நகைத்தான்.

''நான் பார்த்து விட்டுக் கிழித்தெறிந்து விடுகிறேன்...'' என்று அவள் கடைசியாகப் பகர்ந்தபோது அவனுக்குக்கொஞ்சம்நம்பிக்கை உண்டாயிற்று.

''நீ கிழிப்பானேன்? நானே கிழித்துச் சுக்குநூறாகக் காற்றில் பறக்க விட்டு விடுகிறேன். இல்லாவிட்டால் அடுப்பில் போட்டு விடுகிறேன். விஷயம் இத்துடன் போகட்டும். அந்த அயோக்கியன் வீட்டை விட்டு நீ வந்ததே சந்தோஷம் எனக்கு. ஆமாம், நீ போகும்போது அம்மா வீட்டில் இல்லையா? உன் வீட்டுக்கா போயிருக்கிறாய்?'' என்று அந்த நம்பிக்கையை நழுவவிடாமல் கேள்விகளைத் தொடுத்தான். ஆனால் அவன் அந்தப் பல்லவியை விடவே யில்லை.

'' அந்தக் காகிதத்தை நீங்கள் என்னிடம் கொடுக்க மாட்டீர்களா?'' என்று கெஞ்சினாள் பாலு.

'' பாலு! கொடுக்க மாட்டேன். என்னால் முடியாது. உனக்கு ஏன் அந்தனை



''எதற்கு இப்படிச் சிரிக்க வேண்டுமாம்? கடிதாசி எனக்குத்தானே வந்தது?'' என்று பாலு கொஞ்சம் கடுமை காட்டினாள். அவளுடைய பிடிவாதத்தையும் பரபரப்பையும் கண்ட சின்னத்துரை திகைத்தான்.

''ஹூம்? என்ன அக்கிரமம்? கல்லைச் சுற்றிக் காதல் கடிதம், பேச்சு, சமாசாரம்! அன்பே பாலுவாமே? நிசமாக நீ உடன்பட்டுத்தான் நடந்திருக்கிறதா, பாலு?......''

அவன் பேச்சையே அவள் சிறிதும் காதில் போட்டுக் கொண்டவளாகத் தெரியவில்லை.

''ஐயோ! கொடுத்து விடுங்கள் என்றால் உங்களுக்கேன் வம்பு? ஒருத்தருக்கு வந்த கடிதாசை இன்னொருத்தர் பார்க்கக் கூடாதாக்கும்...... தயவு செய்து கொடுத்து விடுங்கள்......''

அவள் மீண்டும் மீண்டும் பதைப் போடு கெஞ்சி மன்றாடினாள்.

பிடிவாதம்?'' என்று கேட்டான் சின்னத்துரை கடுமையுடன்.

''ஐயோ...!'' கண்ணீர் அழுகை எல்லாம் அவள் கெஞ்சலுக்கு உதவியாக ஓடி வந்தன.

''இதோ பார், பாலு! என்னைப் பாரேன். ஏன் அழுகிறாய்? என்னைப் பிடிக்கவில்லையா பாலு உனக்கு? அவன் வழுக்கைத்தலை மூஞ்சியை விட நான் மட்டமாகி விட்டேனா உனக்கு? இதோ பார், கூழானாலும் கஞ்சியானாலும் நான் உன்னை ராணியாக வைத்துக் கொள்வேன். என் அம்மா உன்னை அருமையிலும் அருமையாகப் பார்ப்பாள். அவளுக்கு வேறு பெண் கிடையாது. பாலு! அவளுக்குப் பரம சம்மதம். அந்தக் கடிதாசை அப்படியே மறுபடியும் கூழாங்கல்லில் சுற்றி அவனுடைய முகத்தைப் பார்த்து வீசிவிட்டு வருகிறேன். ஊர் சிரிக்கட்டும், கூடட்டும், பாலு!...பாலு...!'' சின்னத்துரைக்கு இவ்வளவு தைரியமும் பேச்சு வன்மை

---

# இதோ! உங்கள் குழந்தையின் ஜலதோஷத்தை சடுதியில் விரட்டுங்கள்

ஜலதோஷம் ஆபத்தாகி விடுவதற்கு முன்னால் இந்த நன்மைதரும் வீர்யமுள்ள களிம்பைத் தேயுங்கள்!



உடனே 2 வழிகளில் ஜலதோஷத்தை விரட்டி யடிக்கிறது!

விக்ஸ் வேபோரப சருமத்திற்குள் ஊடுருவிச் செல்கிறது. மார்பில் வெதவெதப்பான ஆரோக்கிய உணர்ச்சி ஏற்படுகிறது.

விக்ஸ்வேபோரப்பின் வீர்யமுள்ள மருந்து வாசனை மூக்கு, தொண்டை வலிகளை விரட்டி யடிக்கிறது.

**விக்ஸ் வேப்போரப்**




விக்ஸ் வேபோரப் ட்ரேட் மார்க்

11




**எஸ்ட்ரேலா பாட்டரீஸ் லிட்.**

பம்பாய் — கல்கத்தா — டில்லி — கான்பூர் — மதராஸ் — நாகப்பூர்

யும் அவனும் அந்தக் கடிதமும் அனித் தலைதான்.

இத்நேரம் இருள் மையாக அப்பிக் கொண்டு வந்து விட்டது. வானத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நட்சத்திரங்கள் பூத்திருந்தன. அவளுடைய கறுப்புப்புடவை, கருகமணி எல்லாம் இருட்டிலே ஏதோ நிழல் உருவாகத் தோற்றம் கொடுத்தன. அவள் சேலைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டு விம்மி அழுதாள்.

அவள் விம்மல் அவனை என்னவோ செய்தது.

''பானு...!''

''வேண்டாம், போங்கள்!''

வெடுக் கென்று அதே அழுகைக் குரலில் அவனிடம் நிராகரித்து விட்டு அவள் திரும்பினுள். குடத்துடன் அவள்ரயில் பாதையைத் தாண்டிச் செல்வதை அவன் பிரமை பிடித்தவன் போல் பார்த்தான்; பார்த்துக் கொண்டே நின்றான். 'விசுக் விசுக்' என்று அவள் மறைந்து விட்டாள். ரயில் டிக்கெட் பரிசோதகர் உத்தியோகம் கிடைத்து, மறுகணமே வேலையை விட்டு நீக்கப் பட்ட செய்தியைக் கையில் ஏந்தியிருந்தால் கூட அவனுக்கு அத்தனை ஏமாற்றமாக இருந்திருக்காது. அவனுக்குத் தோல்வி. அதுவும் யாரிடத்திலே! அந்த வழுக்கைத் தலை மார்க்கபந்து இடத்திலே! நாலு காசு, பதவி இரண்டும் பானுவை அடிமையாக்கி விட்டன.

சை! அவள் இத்தனை கேவலமானவளா? ஆற்றங்கரைக் காற்றும் இரவின் குளுமையும் அவன் நெஞ்சைச் சமாதானம் செய்ய முயன்று தோல்வியடைந்தே திரும்பியது. வெகு நேரம் அங்கு நின்று விட்டு அவன் பித்தம் பிடித்த நிலையில் வீட்டுக்கு வந்தான். தாழ்ந்து இருண்டிருந்த வீட்டு நடையில் ஏறும் போதே கமலம்மாள் புளி உப்பு மாவுக்குத் தாளிதம் செய்து கொண்டிருந்த வாசனை அவனை முகமன் கூறி வரவேற்றது.

'மினுக் மினுக்' என்று ஒரு 'பெட்ரூம்' விளக்கு ஒளிர்ந்த கூடத்துக் கயிற்றுக் கட்டிலில் மேட்டுவளையைப் பார்த்துக் கொண்டு பொத்தென்று அவன் விழுந்த போது உண்டான அரவம் கமலம்மாளைக் கரண்டியும் கையுமாகவே சமையல் அறைப் பொந்திலிருந்து வெளியே கொண்டு வந்தது.

''ஏண்டா சின்னு? சமாசாரம் கேட்டாயோ?''

''என்னம்மா?''

''அதுதான், இன்ஸ்பெக்டர் வீடுன்னு காரியத்துக்குக் கொண்டு விட்டிருந்தாளே பேத்தியை! செல்லப் பாட்டி வளர்த்து விட்ட நீசல்தாண்டா. அவர்கள் வீட்டிலே கைவரிசையைக் காட்டி விட்டதாமே! 'வேலையை விட்டு ஒரு விநாடியிலே போ' என்று சொல்லி அனுப்பி விட்டாளாமே அந்தம்மாள்?'' சின்னத்துரை அம்மாவை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான்.



''உடம்பிலேஒரு வணக்கம் வேண்டாமோ? என்ன துணிச்சல்? தன்னந் தனியே அந்த இடிந்த குடிசையைப் பெருக்கி, கடையிலிருந்து உப்பு வாங்கி, புளி வாங்கிக் குடித்தனம் பண்ண வந்திருக்குடா சின்னு! அதிசயத்தைப் பாரேன்! ஒரு பெரியவர் பெருந்தலை என்று கேட்காதா, வராதா?''

கமலம்மாள் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு இவ்வளவு பெரிய செய்தியை வெடித்து விட்டு அதிசயித்த போதும் சின்னு சிலையாக உட்கார்ந்திருந்தான். செல்லப் பாட்டியின் பேத்தியைப் பற்றிய பேச்சு வரும் போதே தன் மைந்தனின் கண்களில் ஆசைக் கனலைக் கண்டிருந்தவளாயிற்றே அவள்?

''ஏண்டா சின்னு! உடம்புக்கு என்ன? கண்ணும் முழியும் ஏன் இப்படி என்னவோ மாதிரி இருக்கின்றன? காவேரியில் போய்த் துளைந்தாயா என்ன?'' என்று அவன் நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள் அவள்.

''அதெல்லாம் ஒன்றுமில்லையம்மா, நீஒண்ணு!'' என்று அலுப்புடன் அவள் கையை அகற்றினுன் சின்னு. ஊரில் இதற்குள் செய்தி தெரிந்து விட்டதா? இன்னும் பானுவைப் பற்றி என்னென்ன சமாசாரம் பரவியிருக்குமோ?

''ஏனம்மா? அவளைப் பார்த்தாயா?''

''நான் போய்ப் பார்க்கணுமாக்கும்? மடத்திலே ருக்மிணி வந்து சொன்னுள். 'கொல்லை வாசற்படியில் நின்று நின்று சிரிக்கிறது. ஆள் வந்தாலும், ஆபீசர் வந்தாலும் இலட்சியம் செய்யாதாம்.



பிச்சைக்காரன்: சாமி! குடிக்கக் கஞ்சி கிடைக்காமல் கஷ்டப் படறேன், சாமி!
மற்றவர்: அது எப்படிக் கிடைக்கும்? அதுதான் எல்லாக் கஞ்சியும் சலவை செய்கிற சட்டையிலே போட்டுடறாங்களே!

ஆத்திரமும் வெறியும் கலந்து வந்த சிரிப்பு அது. அந்த மாதிரிப் பொருத்தமில்லாமல் அவன் சிரித்தே கமலம்மாள் பார்த்திருக்கவில்லை.

"போதும், அழகு சொட்டுகிறது. பெரிய புத்திசாலிதான்" என்று கூறிவிட்டு அடுப்பில் தீயும் தாளிதத்தைக் கவனிப்பதற்கு அவள் உள்ளே ஓடினாள்.

சின்னத் துரைக்கு எதை நினைத்தாலும் பிடிக்கவில்லை. எல்லாம் கசந்து வழிந்தது. பானு எந்தத் துணிச்சலுடன் தனிக் குடித்தனம் செய்வாள்? அவன் அளிக்கும் தைரியம் தானே? இந்த இரகசியங்கள் ஊரிலே அம்பலமாகாமல், வம்புச் சாவடிக்கு வராமல் எத்தனை நாட்கள் இருக்கும்? அப்போது பானு முகத்தை எங்கு கொண்டு வைத்துக் கொள்வாள்?

பிடிக்காமல். நிறுத்தி விட்டார்களாம்' என்றாள்.....அங்கே யாரோ ரைட்டராமே? சிவப்பாய் நரைத்த தலையும் கடுக்கனுமாகக் காவேரிக்குப் போவார். பார்த்திருக்கிறேன் நானே. அவர் வேறு ஆள் வேண்டும் என்றுகூட விசாரித்தாராம்! இப்படி ஒரு அஞ்சு ரூபாய்க்கு முழுசாக வழியில்லாமல் ஊரை வளையவருகிறதே இந்தப்பிள்ளை, ஒழுங்காய் வேலை செய்யுமா என்றுகூட நினைத்துக் கொண்டேன் .... ஏண்டா போய் அதையேனும் கேட்கிறது தானே?" என்று முடித்தாள் அம்மா.

"ஏனம்மா? கரண்டி வேலைக்கா என்னைப் போகச் சொல்லுகிறாய்?" என்று திருப்பிக் கேட்டான் சின்னு.

"! பின்னே உடனே லபக்கென்று உனக்கு இன்ஸ்பெக்டர் வேலையைத் தூக்கிக் கொடுப்பார்களா? போய் மெள்ளத் தொற்றிக் கொண்டால் நல்லதுதானே? பிக்குப் பிடுங்கவென்று சொல்லப் பெரிய சம்சாரமில்லை. ரயில் உத்தியோகஸ்தர். பத்து நாள் ஒரு மாசம் நல்ல பெயர் வாங்கினாயானால் சலுகை கிடைக்கும். தானே ரயிலில் இழுத்து விடுகிறார்! உனக்குச் சாமர்த்தியமே இல்லையடா சின்னு!" என்று அலுப்போடு கமலம்மாள் குற்றம் சாட்டியதும் சின்னுவுக்குச் சிரிப்புக்கூட வந்தது.

"அம்மா, உன் மனசுக்குள் நான் மக்கு மட சாம்பிராணி என்று எண்ணம் இல்லை?...ஹாஹ்ஹா..." என்று சின்னத்துரை கூறிச் சிரித்தான்.

மறுநாள் காலையில் வேலைக்குப் போகாமல் விட்டு விடலாமா என்று ஒரு கணம் யோசித்தான். அப்படி விடுவது புத்திசாலித்தனமாகாது. மார்க்கபந்துவைப் பற்றிய இரகசியம் அவனுக்கு இப்போது தெரியும். வேலைக்கு முழுக்குப் போட்டு விட்டால், அவர்களுடைய நடவடிக்கைகள் அவனுக்கு எப்படி எட்டும்? அவன் இப்படிப்பட்டவன் என்று ஊராருக்கு முன் அம்பலமாக்கப் படாத போனால், சின்னுவின் ஆத்திரம் தணிய வகை ஏது? மேலும் அவனை அப்படி ஒரே வார்த்தையில் 'வேண்டாம் போங்கள்' என்றல்லவா நிராகரித்தாள், கள்ளி! அவளும் அதற்காகச் சிறிதாவது வருந்தவேண்டாமா?

காலையில் இருள் நன்றாகப் பிரியுமுன்னரே சின்னத்துரை துண்டைப் போட்டுக் கொண்டு காவேரிக்குக் கிளம்பி விட்டான். இரவெல்லாம் யோசனை செய்ததில் அவனுக்கு மண்டைக்குள் எரிச்சல் கண்டு விட்டாற் போலிருந்தது. காவேரியில் போய் முங்கினால் தான் உள்ளமும் உடலும் குளிரும் என்று தோன்றியது. மனசு குழம்பி இருக்கும் சமயங்களில் மட்டும், நினைப்பதும் செயல் புரிவதும் ஒன்றாக இருப்பதில்லை யல்லவா?

(தொடரும்)



மார்கோ சோப் வேப்-
பெண்ணெயிலிருந்து
விஞ்ஞான முறையில்
தயாரிக்கப்பட்டு,
இனிய நறுமண
மூட்டப்படுகிறது.
மிருதுத் தன்மை
யுள்ள அதன் நுரை
விஷம் பரவாமல்
தடுத்து சுத்தமாக்கு
வதில் சக்தி வாய்ந்
தது மேனியை பிர
காசிக்கச் செய்யும்.
இளஞ்சருமத்திற்கும்
ஹானியற்றது.

நீங்கள் ஸ்நானம் செய்யும்போது

உங்கள்




# மார்கோ சோப்பை

மறந்து விடாதீர்கள்



தி கல்கத்தா
கெமிகல் கோ. லி.,
கல்கத்தா - 29

CMC-5 TM

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

# வேண்டாத பொருள்கள்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

உன் கடிதம் பார்த்தேன். வேண்டாத சாமான்களும் அதிகப்படி சாமான்களும் சேர்ந்துவிடுகின்றன; அதை என்ன செய்வது, எப்படித் தவிர்ப்பது என்று கேட்டிருக்கிறாய்.

பத்து வருஷங்கள் குடும்பம் நடத்தினால் வேண்டாத சாமான்கள் சேரத்தான் சேருகின்றன. அதைத் தவிர்க்கக் கண்டிப்பான முயற்சி தேவைதான். முன் காலத்தைப் போல் எட்டு கட்டுள்ள வீட்டில் நாம் வாழ முடியவில்லை. மிக மிகச் சிறிய வீடுகளில் வாழ்கின்றோம். அதனால் மிகவும் குறைவாகவும் உபயோகப் படும்படியான அளவில் சாமான்கள் இருந்தாலே போதுமானது.

'வீட்டுக்காகச் சாமான்களா? சாமான்களுக்காக வீடா?' என்ற நிலை வந்து விடுகிறது. எங்கள் வீட்டில் பெரியவர்கள் 'எதிர் காலத்துக்கு வேண்டிய சாமான்கள் சேமித்து வைத்திருக்கிறோம். சாமான்கள் அதிகம் இருக்கின்றன. பெரிய வீடாகத் தேவை' என்கிறார்கள். முன்னோர்களைப் போற்றிப் பூஜிக்க வேண்டியதுதான். அவர்களுடைய நினைவு நம் மனத்தில் முக்கியமாகத் தேவைதான். ஆனால் பெரிய ஊஞ்சல், நிலைக் கண்ணாடி, அழுக்கடைந்த நாற்காலி இன்னும் தட்டு முட்டுச் சாமான்களிலா நம் முன்னோர்களைக் காண்கிறோம்? அப்படியே இருந்தாலும் ஒன்றிரண்டு சிறுபொருள்கள் போதுமே. எங்கள் குடும்பத்தில் ஒரு சகோதரர் சாமான்களை நிர்தாட்சண்யமாகக் கழித்துக் கட்டி விடுவார். யோசித்துப் பார்த்தால் அது சிறந்த வழக்கமென்றே கருதுகிறேன்.

சிலர் கடைக்குப் போகும் போதெல்லாம் எதையாவது வாங்குவதென வழக்கம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவைகள் நாளடைவில் வீட்டில் சுமையாகச் சேர்ந்து விடுகின்றன. சில பொருள்களைப்பார்த்தால் கவர்ச்சிகரமாக இராது. ஆனால் அதன் விலையைக் கேட்டால் தலையைச் சுற்றும். அம் மாதிரி நூதன பொருள்களைச் சேகரம் செய்வதும் சிலரின் விருப்பம். அவைகளெல்லாம் அரண்மனையில் இடம் பெறலாம்.

சுஜாதா! நான் எழுதுவதெல்லாம் நம்மைப் போன்ற மத்தியதரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தெரிந்து கொள்வதற்காகவே!



ஒரு வீட்டில் ஒரு 'செட்' சாமான்கள் இருந்தால் போதுமானது. காப்பிக் கொட்டை அரைக்கும் இயந்திரத்தில் நான்கு; ஜூஸ் பெட்டியில் இரண்டு. இவைகளெல்லாம் தேவையில்லையே.

சின்ன விஷயம்: நம்முடைய பெட்டிகளில் கனம் குறைந்தாலும், சாவிக் கொத்துகளில் கனம் ஏறுகிறது. அவற்றினுடைய பூட்டுகள் எப்பொழுதோ உடைந்திருக்கும். நம்மிடம் சில பெட்டிகள் எந்தக் காலத்திலோ இருந்திருக்கும். ஆனால் அந்தச் சாவிகளை நாம் நீக்குவதில்லை.

வேண்டாத கடிதங்கள் குவிந்திருக்கும். நம்மைப் பற்றிப் புகழ் உரையாக யாராவது எழுதி இருந்தால் அதைக் கிழிக்க வேண்டாம். முக்கியமானவைகளையும் வேணுமானால் வைத்துக் கொள்வோம். மற்றவைகளைக் கிழித்து விட்டால் மேஜை சுத்தமாக இருக்குமே.

பெண்கள் தற்காலத்தில் விதம் விதமான அழகுப் பைகளை கையில் எடுத்துக் கொண்டு போவது வழக்கமாக இருக்கிறது. அதில் அன்றாடம் தேவையான காகிதங்களை வைத்துக் கொண்டால் வேலை சுலபமாக இருக்கும். ஒரு மாதத்துக்கு முன் நடந்த ஒரு கல்யாணப் பத்திரிகை, முதல் வாரம் போயிருந்த சினிமாப் பாட்டு புஸ்தகம் இரண்டு மாதங்களுக்கு முன் டாக்டர் கொடுத்த 'பிரிஸ்கிரிப்ஷன்' இவையெல்லாம் என்னத்துக்கு? இவைகளைக் கிழித்து விடலாம் அல்லவா? அவசரத்தில் முக்கியமான காகிதம் கிடைக்காது.

சிலர் வேண்டாத காலி புட்டிகள், ஓட்டைத் தகரங்கள், எரிந்துபோன 'பல்பு'கள் இவைகளைக் கூட அப்புறப்படுத்தாமல் வைத்திருப்பதைப் பார்க்கிறோம்.

எனக்கு அறிமுகமான ஒரு அம்மாள் டிசம்பர் மாதக் கடைசியில் எல்லாக் கடைகளிலும் ஏதாவது சாமான் வாங்குவார். அத்துடன் எப்படியாவது ஒரு காலண்டரும் வாங்கிவிடுவார். வீட்டுச் சுவர்களில் ஒரு அங்குல இடம் காலியாக இருக்க அந்தம்மாளுக்குச் சம்மதமில்லை. அத்தனை இடத்திலும் பலவித காலண்டர்கள் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும்.

திருநெல்வேலி ஜில்லாவிலும், செட்டி நாட்டிலும் தைப் பொங்கலுக்கு முன் வீட்டிலுள்ள பழைய படுக்கைகள், பாய்கள் இதர பழைய சாமான்களை எறிந்து விட்டுப் பண்டிகை கொண்டாடுவார்கள். அது மிகவும் சிறந்த முறைதான்.

இப்படிக்கு,
பூமாதேவி




...ஆம் அது ட்ரேயோபேனில் சுற்றப்பட்டுள்ளது

# ட்ரேயோபேன்

ட்ரேவான்கூர் ட்ரான்ஸ்பேரன்ட் தாளின் புதிய பெயர்

- ட்ரேயோபேன் உங்கள் சரக்குகளுக்கு அழகையும், கவர்ச்சியையும் அளிக்கிறது.
- ஒளி ஊடுருவிச் செல்லும் ட்ரேயோபேன் தாளின் மூலம் சரக்குகளைத் தெளிவாக பார்க்கலாம்.
- ட்ரேயோபேன் தூசி, அப்பு, எண்ணெய் படியாமல் சரக்குகளைப் பாதுகாக்கிறது
- அதன் பிரகாசமான நிறங்கள் விற்பனையைத் துரிதமாக்குகிறது.
- ட்ரேயோபேன் மிக மலிவானது. 30"×20" அளவுள்ள ஒரு தாளின் விலை 1½ அணாவுக்குக் குறைவு. அது ரோல்களிலும் தாள்களாகவும் கிடைக்கிறது.



சரக்குகளை ட்ரேயோபேனில் பாக் செய்து விற்பனையை அதிகரியுங்கள்! இலவச சாம்பிள் புத்தகத்திற்காக எங்களுக்கு எழுதுங்கள்.

**கண்ணைக் கவருகிறது — விற்பனையை துரிதமாக்குகிறது!**

## தி திருவாங்கூர் ரேயான்ஸ் லிட்.,

பாக்டரி: ரேயான்புரம் போஸ்ட், திருவாங்கூர்-கொச்சின்.
ஸேல்ஸ் ஆபீஸ்: தபால் பெட்டி நெ. 1571, மதராஸ்-1.











# கொசுவின்

"இந்த மலேரியாக் கொசு வந்தாலும் வந்தது. எல்லாரும் வலை கட்டிக்கொண்டு தூங்குகிறார்கள். எங்களுக்குப் பிழைக்கும் வழி போச்சு" என்றது ஒரு கொசு.

"நாம் மலேரியாக் கொசுவல்ல. எங்களுக்குக் கொஞ்சம் வழி விடுவாய் என்று கொசு வலையைக் கேட்டுக் கொண்டால் ஒரு வேளை திறந்து கொள்ளும்" என்றது கொசுவின் மனைவி.

அப்படியே பாடின இந்த இரண்டு கொசுக்களும்.

காற்றடித்தது. கொசு வலையை இழுத்துச் செருகவில்லை முதலியார். இரண்டு கொசுக்களும் உள்ளே பிரவேசித்தன.

'பட்' என்று அடித்தார் முதலியார் தம் தோளின்மேல். இரண்டு கொசுக்களில் ஒன்று செத்தது. ஒன்று தப்பித்துப் பறந்து போயிற்று. 'நான் தனித்துப் போனேனே!' என்று அழுதது பெண் கொசு.

அன்று அதற்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. உபவாசம் இருந்தது. அறைக்குள் ஒரு மூலையில் சும்மா சுவரின் மூலையில் மறைந்திருந்து காலம் கழித்தது. ராத்திரி பெரும் பசி எடுத்தது. புருஷனை மறந்துவிட்டது. இரை தேடிக்கொண்டு கொசு வலையைச் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டு பறந்தது. வழியில்லை. வலையை முதலியார் அன்று நன்றாக இழுத்துச் செருகி யிருந்தார். பாவம், கொசு அந்த இராத்திரி உணவின்றியே கழித்தது.

முதலியார் நன்றாகத் தூங்கினார். "முருகன் அருள். இன்று நன்றாகத் தூங்கினேன்" என்று காலையில் எழுந்து முகம் கழுவி விபூதி யிட்டுக்கொண்டார்.

"முருகன் எனக்கு அருளவில்லையே!" என்று சொல்லிக் கொண்டிருந்தது கொசு.

"உனக்கு ஒரு வழி காட்டுகிறேன்" என்றான் முருகப் பெருமான்.

"என்ன?" என்றது கொசு. கொசுக்களும் முருகனும் பேசுவார்கள். நம்மோடு தான் தேவர்கள் பேசுவதில்லை. பறவை, பிராணிகள், பூச்சிகளுடன் பேசுவார்கள்.

"அதோ பார்! கொசு வலை எடுத்து மடித்து வைக்கவில்லை. மெள்ள இப்போது உள்ளேயே புகுந்துகொள். ராத்திரி உன் வேலையை நடத்து" என்றான் முருகன்.

அவனுக்கு முதலியாரைத் தொந்தரவு செய்வதில் விளையாட்டு.

கொசுவும் அப்படியே செய்தது. இரவு வரும் வரை பொறுமையாகக் காத்திருக்



தது. முதலியாருடைய வேலைக்காரன் படுக்கை போட்டுக் கட்டியிருந்த கொசு வலையை அப்படியே இறக்கிச் செருகி விட்டான்.

கொசுவுக்கு அன்று ராத்திரி நல்ல சமாராதனை. கைக்கு அகப்படாமல் வேண்டிய யளவு அதன் சிறு வயிறு நிறைய முதலியாருடைய ரத்தம் குடித்துவிட்டு மேலே வலையில் ஒரு மூலையில் போய்த் தொங்கிக் கிடந்தது.

* * *

"என்ன முட்டாள்! வலையை ராத்திரி சரியாகச் செருகவில்லை. கொசு உபத்திரவம் தூக்கமே இல்லை!" என்றார் முதலியார்.

"இல்லை, எஜமான்! நன்றாகச் செருகியிருந்தேன். கொசு உள்ளே போக இடமேயிராது. உஷ்ணத்தினால் சொறியாக இருக்கலாம். கொசுக்கடி கிடையாது" என்றான் சேவகன்.

"ஜுரம் வந்தால் நீதான் ஜவாபுதாரி!" என்றார் தாசில்தார் முதலியார்.

"வராதுங்கோ" என்றான் சேவகன்.

அடுத்த நாளும் அதே கதை. முதலியாருக்குக் கோபம் வந்துவிட்டது. அந்த ராத்திரி தானே வலையை ஜாக்கிரதையாக இழுத்துச் செருகிக் கொண்டு படுத்தார்.

"வேனிற் காலத்துக் கோளாறுகவே இருக்க வேண்டும். நேற்று ராத்திரியும் தூக்கமே இல்லை" என்றார் முதலியார்.

"வலைக்குள்ளேயே சேர்ந்து கொண்டிருக்கும் கொசு" என்றாள் சுமித்ரை, முதலியாருடைய கடைசி மகள், கலியாணமாகாத சிறுமி.

வலையைப் பிரித்துப் பார்த்தார்கள். சிறுமி சொன்னது உண்மை. கொசுவின் காலம் முடிந்தது.

முருகன் அதை வரவேற்றான். "வா! நாம் இருவரும் விளையாடலாம்!" என்றான் முருகன். "முதலியார் ரத்தம் வேண்டாம். நான் தருகிறேன் உனக்கு ஆகாரம்!" என்றான் முருகன்.

கொசுவும் சந்தோஷமாக அமிருதம் குடித்துக் கொண்டு முருகனுக்குச் சவாரியாக இருந்து வந்தது.

# கதை

ராஜாஜி




பக்கத்தில் உள்ள முள் இல்லாத கடிகாரத்தை மூன்று பாகங்களாகப் பிரிக்க வேண்டும். அவ்வாறு பிரிக்கப்படும் ஒவ்வொரு பாகத்திலுள்ள எண்களைக் கூட்டினால் ஒரே மாதிரி கூட்டுத் தொகை வர வேண்டும். மூன்று பாகத்தின் கூட்டுத் தொகையும் சமமாக இருக்க வேண்டும். அம்மாதிரி பிரித்துப் பாருங்கள்.

(விடை 48-ம் பக்கம் பார்க்கவும்)

தண்ணீரில் கழுத்து வரை அமிழ்ந்திருக்கும் யானைக் குட்டி (தாய் யானையிடம்):- அம்மா! என்னைப் பாரேன்; அன்னம் மாதிரி இருக்கேன்!





நியூஸிலாந்து தேசத்திலுள்ள கிவி என்ற பறவை ஐந்தே பவுண்டு எடைதான் இருக்கிறது. ஆனால் அது இடும் முட்டை ஒவ்வொன்றின் எடையும் ஒரு பவுண்டு இருக்கிறது!

அநேக நகரங்கள் உண்டு. ஆனால் ஒரு வீடு கூடக் கிடையாது. ஏராளமான காடுகள் உண்டு; ஆனால், ஒரு மரம்கூடக் கிடையாது. அதிகமான மலைகள் உண்டு. ஆனால் ஒருவரும் ஏற முடியாது. இது என்ன?

(விடை 48-ம் பக்கம் பார்க்கவும்)

# 16. புதுமைச் சக்தி!

அந்தப் பெரியவர் கொடுத்த கசப்பான பச்சிலைச் சாற்றைக் குடித்ததால் விஜயன் ரொம்பவும் கஷ்டமடைந்தான். வெகு நேரம் வரையில் அடி வயிற்றினின்றும் மேல் நோக்கி வந்து வந்து அவனுக்குக் குமட்டல் எடுத்தது. அதன் பின்னர், அவர் மீண்டும் ஒரு குவளையில் பச்சிலைச் சாற்றை எடுத்துக் கொண்டு, அவனிடம் நெருங்கிக் கீழே படுத்துக் கொள்ளுமாறு கூறினார். விஜயன் அவர் சொற்படியே படுத்ததும், அவர் அதை அவன் காதுகளில் மாற்றி மாற்றி ஊற்றினார். இத்தகைய சிகிச்சைகளெல்லாம் அவர் எதற்காகச் செய்கிறார் என்பதே அவனுக்குச் சிறிதும் புரியவில்லை.

நான்கு தினங்களாக ஏற்பட்ட பழக்கங்களினால் விஜயனுக்கு அவர் மீது உயர்வான மதிப்புக்களே ஏற்பட்டன. அவர் கொண்டு வந்து கொடுக்கும் கனிகளும், கிழங்குகளும் அவனுக்கு ஒரு புது வகையான உற்சாகத்தை யளித்தன. ஆனால் காலையிலும் மாலையிலும் தவறாமல் அவர் கொடுக்கும் அந்த மூலிகைச் சாற்றை அருந்துவதுதான் அவனுக்குப் பொறுக்க முடியாததாக இருந்தது.

ஐந்தாம் நாள் விடியற்காலை விஜயன் மிக அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். திடீரென்று அவனுக்கு விழிப்பேற்பட்டது. அவன் உள்ளத்தில் அப்பொழுது வகையறியாத வியப்பு மேலிட்டது. அங்கத்தின்





ஏதோ ஒரு பாகத்தில் புதுமையான சக்தி ஏற்பட்டு விட்டது போன்று அவன் உணர்ந்தான். அது என்ன? பறவைகளின் 'கிரீச்' என்ற ஒலிகளெல்லாம் அவனது செவிகளில் கேட்டன! தூரத்தே கூவிக் கொண்டிருந்த கோட்டான் பறவையின் கூக்குரலும், புள்ளினங்கள் 'பட பட' வெனச் சிறகடிக்கும் ஒலியும் ,கேட்டன.

விஜயன் ஆச்சரியத்துடன் எழுந்து உட்கார்ந்து நாலாபுறங்களையும் பார்த்தான். குடிசைக்கு வெளிப்புறத்தில் மங்கலான வெளிச்சம் தெரிந்து கொண்டிருந்தது அப்பொழுதுதான் எங்கேயோ சென்றிருந்த அப்பெரியவரும் வந்து சேர்ந்தார். அவர் அவனை நோக்கி, ''என்ன விஜயா! உனக்குக் காது கேட்கிறதா?'' என்றார் உரத்த குரலில். அவரது கேள்வி அவன் காதில் 'கணீர்' என்று ஒலித்தது.

விஜயன் உற்சாக மிகுதியினால் துள்ளிக்குதித்தான். பின்னர் வாயைத் திறந்து திறந்து மூடினான். ஏதோ ஒரு பதிலை அளிப்பதற்காக அவன் வெகு சிரமப்பட்டான். கடைசியாக அவன் நாக்கைத் துளாவிய படியே, ''ஆ.....மாம்—'' என்றான் அழுத்தத்துடன். அதைத் தொடர்ந்தவாறு இன்னும் ஏதோ கூறுவதற்காக, அவனது நாக்குபரபரப்படைந்தது.அடுத்த கணம் அவன் சிறு குழந்தையைப் போல் பெரியவரைச் சுற்றிச் சுற்றி வந்து கூச்சலிடத் தொடங்கினான்.

பெரியவர் அவனது கையைப் பிடித்து நிறுத்தி விட்டு, ''என் முயற்சிக்குப் பலன் ஏற்பட்டு விட்டது; கடவுளுக்கும் உன் மீது இரக்கம் வந்து விட்டது. இப்பொழுது நீ மருந்து சாப்பிட வேண்டியவேளை. வா, மருந்தை வாயில் ஊற்றுகிறேன்'' என்றார். விஜயன் அவரைத் தொடர்ந்து குடிசையின் உட்புறத்துக்குச் சென்றான்.

இத்தடவை பெரியவரினால் வாய்க்குள் விடப்பட்ட அதே பச்சிலைச் சாறு அவனுக்குக் கரும்பின் சாறாக இனித்தது. அதைக் குடித்த பின்னர் இரண்டாம் முறையாக அவனுக்குத் தூக்கமும் வந்தது.

ஏறக்குறைய மூன்று ஜாமங்கள் அவன் உறங்கிய பின்னரே விழித்துக் கொண்டான். பெரியவர் இருமிய சத்தமும் அவன் காதுகளுக்குக் கேட்டது. அவர் அவன் அருகில் வந்து அவனுடைய கையில்

ஒரு சுவடிக் கட்டைக் கொடுத்து இரைந்து வாசிக்குமாறு கூறினார்.

விஜயன் வாயைத் திறந்ததுமே ஏதோ ஒரு கூச்சத்தை உணர்ந்தான். சற்று நேரம் நாக்கை முன்னும் பின்னுமாகப் புரட்டியவண்ணம் படிக்கத் தொடங்கினான். அவனுக்கு அவ்வார்த்தைகளின் பொருளை உணர முடிந்தது. ஆனால் அவைகளின் உச்சரிப்பைத்தான் சரியாக ஒலிக்க முடியாமல் சிரமப்பட்டான். பெரியவர் அவ்வார்த்தைகளை உச்சரித்துக் காட்டினார். தமது நாக்கின் அசைவுகளையும் அவனுக்கு விளக்கினார். கடினமான வார்த்தைகளையும் தொடர்ச்சியான வாக்கியங்களையும் பல முறை திருப்பித்திருப்பிப் படிக்குமாறு வற்புறுத்தினார். அவனும் மிகுந்த உற்சாகத்துடன் உச்சரிப்புப் பாடங்களை அவ்வாசிரியரிடமிருந்து பயிலுவதற்குத் தொடங்கினான்!

மீண்டும் நான்கு தினங்களுக்குள்ளாகவே அவன் சுயேச்சையாகவே படிக்கவும் பேசவும் கற்று விட்டான். அவர் பேசும் ஒலிகள் செவிகளில் 'கணீ'ரெனக் கேட்டன. அதற்கான பதில்களைக் கூறவும் அவனுக்கு ஒரு புதுமையான சக்தி ஏற்பட்டு விட்டது!

45-ம் பக்கம் வெளியான கடிகாரக் கணக்குக்கு விடை




45-ம் பக்கம் வெளியான புதிருக்கு விடை: தேசப்படம்

பெரியவர் விஜயனைச் சந்தித்த அந்த முதல் தினத்தன்று, 'நீ இங்கே ஏழு நாட்கள் இருக்க வேண்டும்' என்று எழுதிக்காட்டினாரல்லவா? அவர் கூறிய ஏழு நாட்களும் முடிந்து, பின்னும் இரண்டு தினங்களும்கூடக் கழிந்து விட்டன. அவனுக்குப் பேசும் சக்தி ஏற்பட்டு நான்கு தினங்களாக அவர் அவனிடம் அநேகம் சுவடிகளை எடுத்துக் கொடுத்து இடைவிடாமல் படிக்கும்படி கூறினார். விஜயனை ஊருக்கு அனுப்பவே அவருக்கு மனமில்லை. ராஜகுமாரனும் தனது அரண்மனையைப் பற்றியும், தந்தையாரைப் பற்றியுமுள்ள நினைவுகளையெல்லாம் மறந்து விட்டான். தன்னை ஒரு புது மனிதனாகவே மாற்றி விட்ட அவருடைய அபூர்வ சக்திகளைப் பற்றி நினைத்து அவன் புளகாங்கிதமடைந்தான். தன் ஆயுட் காலம் முழுமையும் அவருக்குப் பணிவிடை செய்வதன் மூலமே கழித்து விடலாம் போல் அவனுக்குத் தோன்றியது.

ஆனால் பத்தாம் நாள் காலையில் அந்தப் பெரியவர் கூறினார்:

"விஜயா! நீயோ ராஜகுமாரன். ஏதோ விதிவசத்தால் நீ இவ்வாறெல்லாம் காட்டுக்குள் வந்து அநேக இன்னல்களை அனுபவித்து விட்டாய். நீ எத்தகைய கஷ்டங்களையெல்லாம் பட்டாயென்று எனக்கு நன்றாகத் தெரியும்.

"நீ மூன்று வயதுக் குழந்தையாக இருக்கையில் நான் உங்கள் அரண்மனைக்கு வந்திருந்தேன். உன் தந்தையாரின் விருப்பப்படி, உனது கைரேகைகளைப் பார்த்து உனக்குள்ள வாழ்நாட்களை ஒருவாறு கணித்துக் கூறினேன். உனக்கு ஏற்பட்டிருந்த ஊமைத்தனம், கடவுளால் இயற்கையில் அமையப்பட்டதல்ல என்பதையும் அறிந்தேன். அவ்வாறு நீ பிறவியிலேயே இருந்திருப்பாயானால் இப்பொழுது உன்னைக் குணப்படுத்தினது இயலாத செயலாகி விட்டிருக்கும். ஆனால் உன்னைப்பற்றிய முழு நிலையையும் நான் அப்பொழுது உன் தந்தையிடம் கூறவில்லை. ஏனென்றால் உன்னுடைய சிற்றன்னையான மல்லிகாவுக்கு அரசர் கடுமையான தண்டனைகளை அளித்திருப்பார். அந்தப் பாவங்களுக்கு நான் ஏன் காரணமாக வேண்டும் என்ற பயத்தால் திரும்பி விட்டேன்."

பெரியவர் தம் வார்த்தைகளைச் சற்றே நிறுத்தினார். விஜயன் பெரும் வியப்புடன், "என்ன! என் சிற்றன்னைக்கு ஏன் தண்டனை விதிக்க வேண்டும்?" என்றான்.

"உனக்கு ஏற்பட்டிருந்த ஊமைத்தனத்துக்கு உன் சிற்றன்னையாகிய மல்லிகா தான் காரணம். ஆனால் இயற்கையில் மல்லிகா கொடியவளல்ல. அவள் அன்னையின் துர்ப்போதனைகளினால்தான் அவளுக்குப் பொறாமைக் குணம் ஏற்பட்டது. அவள் தாய்தான் கொடூரமான பச்சிலைகளின் மூலம் உன்னைக் கொன்று விடவும் முயற்சித்தாள். கடவுள் அவள் மனோரதத்தைப் பூர்த்தியாக்காமல், உனது நாவையும் செவியையும் மட்டும் தண்டித்தார்—

"ஆனால் இப்பொழுது இவையெல்லாம் கூறி என்ன பயன்? உனக்கும் துவேஷ உணர்ச்சிதான் ஏற்படும். மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் துவேஷ உணர்ச்சியைக் கொள்ளவே கூடாது. ஆகவே நீ நாட்டுக்குச் சென்ற பின், இச்செய்திகள் உன் செவிகளுக்கு எட்டினாலும் நீ அதைப் பாராட்டவே கூடாது" என்றார் பெரியவர். (தொடரும்)

டிசம்பர் 21-ந் தேதி முதல் தென்னாடெங்கும்

ஜெய் லட்சுமி பிக்சர்ஸார் அளிக்கும்

ஸாஹினியின்

# கன்னியின் கடமை

பாடல்கள்.
தஞ்சை ராமையா தாஸ்

வசனம்.
உதய குமார்



ஸ்டுடியோ
வாஹினி

டைரக்ஷன் K.காமேஸ்வர ராவ். சங்கீதம் .பிரஸாத் ராவ்

டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சென்னை நகரம்: கப்பு & கோ., * தென்னாற்காடு, வட ஆற்காடு, செங்கற்பட்டு: ஆனந்தா பிக்சர்ஸ், வேலூர் * மதுரை, ராமனாதபுரம், திருநெல்வேலி: மதுரை பிலிம்ஸ், மதுரை * சேலம்: மைலோன் பிக்சர்ஸ், சேலம்.

இதர விவரங்களுக்கு: M/s. ஜெய்லட்சுமி பிக்சர்ஸ், 12-A, ரெங்கனாதம் தெரு, சென்னை-17




வங்காளக் குடாக்கடல் பொங்கிக் கொண்டிருந்தது. 'ஓ'வென்று சுற்றிச் சுழன்று அடித்த காற்றினால் சமுத்திரம் மேலும் கிளர்ச்சியுற்று அலைத்தது. சிற்றலைகளும், பேரலைகளும் ஒன்றோடொன்று மோதிக் கொண்டிருந்தன. இதன் மத்தியில் சென்னைத் துறை முகத்திலிருந்து புறப்பட்ட கப்பல் ஒன்று மலேயாவை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. கப்பலில் ஏராளமான பிரயாணிகள் இருந்தனர். அவர்களெல்லாரும் உற்சாகமாகப் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தனர். சிலர் தங்கள் எதிர்காலத்தைப் பற்றி என்னென்னவோ இன்பக் கனவுகள் கண்டு கொண்டிருந்தனர். இவர்களுக்கு மத்தியில் ஐந்தாவது பாரம் படித்த சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் தன் தந்தையின் அழைப்பை ஏற்றுப் பாதியில் படிப்பை நிறுத்தி விட்டு மலேயா சென்று கொண்டிருந்தான். அவன் இளம் உள்ளம் படிப்பை நிறுத்திவிட்டுப் பிரயாணம் செய்வதை விரும்பவில்லை. ஆனாலும் தந்தையின் கட்டளையை மறுக்கவும் முடியவில்லை. கடல் அலைகளைப் போலவே அவன் மனமும் ஒரு நிலையில் நில்லாமல் தவித்துக் கொண்டிருந்தது.

மன அமைதியை நாடிக் கப்பலின் மேல்தளத்துக்குச் சென்றான். ஏதோ சிந்தனைசெய்த வண்ணம் அலைக்கும் கடலைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் இதயத்திலும் எத்தனையோ எண்ண அலைகள் வந்து மோதுவதை உணர்ந்தான். எதிர்காலத்தைப் பற்றி அவன் கண்ட கனவுகளெல்லாம் தன் தந்தையின் கட்டளையால் சிதறுண்டு போய்விட்டனவே என்று எண்ணித் தவித்தான். இளம் இதயத்தில் ஏற்பட்ட எண்ணங்களின் அதிர்ச்சியை உடல் தாங்க முடியவில்லை. திடீரென்று அவனுக்குக் கடுமையான ஜுரம் வந்து விட்டது.

சிறுவனுக்கு ஜுரம் என்பதைக் கண்ட கப்பல் தலைவர் திடுக்கிட்டார். சிறுவனுக்கு ஜுரம் வந்து விட்டதே என்று இரக்கம் காரணமாகக் கப்பல் தலைவர் கலங்கவில்லை. 'சிறுவனுக்கு அம்மை நோய் வரப் போகிறது. அதன் அறிகுறிதான் இந்த ஜுரம்' என்று தீர்மானித்து விட்டார். 'அம்மை நோய் ஒட்டுவா ரொட்டியாயிற்றே! கப்பலில் பிரயாணம் செய்யும் நூற்றுக்கணக்கான பிரயாணிகளுக்கு அம்மை நோய் தொத்திக் கொள்ளுமே' என்பதற்காகவே வெள்ளைக்காரரான அந்தக் கப்பல் தலைவர் அவ்வளவு தூரம் கவலைப்பட்டார்.

கப்பல் நாகப்பட்டினம் வந்து சேர்ந்தது. கப்பல் தலைவர் எந்த விதமான யோசனையும் செய்யவில்லை. வேண்டாத சாமானைக் கப்பலில் இருந்து இறக்கி வைப்பது போல நோய்வாய்ப்பட்டிருந்த சிறுவனை நாகப்பட்டினத்தில் இறக்கி விட்டார். கப்பலில் இருந்து கடும் காய்ச்சலுடன் இறக்கப்பட்ட பிறகு தான் சிறுவனுக்கு மனத்தில் நிம்மதி ஏற்பட்டது! தான் மலேயா செல்லவில்லை என்பதை எண்ணி மகிழ்ந்தான். தக்க சமயத்தில் வந்து உதவி செய்த ஜுரத்தை வாழ்த்தினன் தன்னுடைய படிப்பைத் தொடர்ந்து படிக்கலாம் என்று திருப்தியடைந்தான்.



# மனிதருக்குள்






அதன் காரணமாக அவனுடைய ஜுரமும் கிடுகிடென்று இறங்கி விட்டது.

1925-ம் ஆண்டு இந்தச் சம்பவம் நடைபெற்றது. அன்றையதினம் கப்பல் தலைவர் அந்தச் சிறுவனை நாகப்பட்டினத்தில் இறக்கி விடவில்லையென்றால் இன்றையதினம் உலகம் வியக்கும் அழகப்பா கல்லூரிகள் தோன்றியிருக்க முடியாது. கப்பல் தலைவர் சிறுவன் அழகப்பனை நாகப்பட்டினத்திலே இறக்கி விட்டது தமிழ் நாடும், தமிழ் மக்களும் செய்த பாக்கியம் என்று தான் சொல்ல வேண்டும். கப்பல் தலைவரின் கடினசித்தம் அடியோடு வாழ்க! அன்று அந்த வெள்ளைக்காரர் அப்படிச் செய்திரா விட்டால் சிறுவன் அழகப்பன் டாக்டர் அழகப்பராகி இருக்க மாட்டார்; கோட்டையூர் வள்ளல் என்று பெயரெடுத்திருக்க மாட்டார்; மனிதருக்குள் ஒரு வள்ளலாக அவர் வாழ்ந்திருக்க முடியாது. வெறும் வட்டிக்கடைச் செட்டியாராக, பணப்பெட்டியைக் காக்கும் மனித இயந்திரமாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

தம் புதல்வன் கடும் ஜுரம் காரணமாக நாகப்பட்டினத்தில் இறக்கப்பட்டான் என்பதை எண்ணித் தந்தை மிகவும் கஷ்டப்பட்டார். குழந்தை எப்படியாவது உடல் நலத்தோடு இருந்தால் போதும் என்று எண்ணியது அவர் தந்தை உள்ளம். அதனால் சிறுவன் அழகப்பனின் விருப்பப்படி மேல் படிப்பு படிப்பதற்கு அனுமதியும் கொடுத்தார்.

அழகப்பர் பள்ளி மாணவராக இருக்கும் போது பெரிய கொடை வள்ளலாகத் திகழப் போகிறார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. எல்லா மாணவரையும் போல அவரும் ஒரு சாதாரண மாணவராகத்தான் இருந்தார். அழகப்பரின் பெற்றோர்களும் அவ்விதம் நினைக்கவில்லை. அவர்கள் அப்படி நினைத்திருந்தால், "நீ படித்தது போதும். நம்முடைய வட்டிக்கடையைப் பார்த்துக் கொள்ள வா!" என்று பள்ளிக்கூட மாணவரான அழகப்பரை இந்தியாவிலிருந்து மலேயாவுக்கு அழைத்திருப்பார்களா? "கல்லூரியில் படிப்பதற்கு அனுமதி வேண்டும்" என்று கடிதத்துக்குமேல் கடிதம் எழுதி, தந்திமேல் தந்தி அடித்துக் தந்தையிடம் உத்தரவு பெறும் நிலைமைதான் ஏற்பட்டிருக்குமா?

# பகீரத

தந்தையின் உத்தரவு கிடைத்ததும் அழகப்பர் கல்லூரியில் சேர்ந்து படித்தார். இண்டர்மீடியட் என்னும் இடைவகுப்பில் முதலாவதாகத் தேறினார். இந்தச் சமயத்தில்தான் அந்தச் சோக சம்பவம் நிகழ்ந்தது. அழகப்பரின் அருமைத் தாயார் காலமானார். அவரைத் தொடர்ந்து அன்பே உருவான அவருடைய தந்தையும் மறைந்தார். பெற்றோர்களை இழந்த அழகப்பர் மேலே கல்லூரிப் படிப்பைத் தொடர்வதை அவர் உறவினர்கள் யாரும் விரும்பவில்லை. அவருடைய தமையனார்கூட மேலே படிக்க வேண்டாம் என்று தான் கேட்டுக் கொண்டார். ஆனால் அழகப்பரின் அறிவுப் பசி உறவினர்கள் சொல்வதையும், தமையனார் தடுப்பதையும் கேட்கவில்லை. எல்லாருடைய விருப்பத்துக்கும் விரோதமாக அறிவுச் செல்வத்தை நாடிச் சென்றார். கல்லூரியில் தொடர்ந்து படித்தார். பி. ஏ. ஆனர்ஸ் பட்டமும் பெற்றார். பிறகு இங்கிலாந்துக்குச் சென்று ஐ. ஸி. எஸ். பட்டப் படிப்பு படிக்க வேண்டும் என்று விரும்பினார்.

** ** **

இங்கிலாந்து சென்ற போதுதான் அழகப்பரின் உடல்நிலை சரியில்லை என்பதைத் தெரிந்து கொள்ள முடிந்தது. அதனால் ஐ. ஸி. எஸ். படிப்பு படிக்க முடியாமற் போய் விட்டது. உடல்நிலை ஐ. ஸி. எஸ். படிப்புக்குத்தானே தடை செய்தது. வேறு

மணிய

# ஒரு வள்ளல்



படிப்புக்குத் தடை கிடையாதல்லவா? ஆகவே உடல் நிலையைக் காரணம் காட்டித் தடுக்க முடியாத பாரிஸ்டர் பட்டம் பெறுவதற்குப் படித்தார். பாரிஸ்டர் படிப்புக்கு முழு நேரமும் தேவையில்லை என்பதை உணர்ந்தார். பாரிஸ்டர் படிப்புக்குப் படிக்கும் நேரம் போகப் பாக்கி நேரத்தை எப்படிச் செலவிடுவது என்று யோசித்தார். அழகப்பருக்குப் பொழுதை வீணாகக் கழிப்பவர்களைக் கண்டால் பிடிக்கவே பிடிக்காது. அவரும் வீண் பொழுது போக்க மாட்டார். ஆகையால் பாரிஸ்டர் படிப்புக்குப் படிக்கும் நேரம் போக மற்ற நேரத்தை உபயோகமான ஏதாவது ஒரு நல்ல தொழிலில் ஈடுபடுத்த வேண்டும் என்று அழகப்பர் விரும்பினார்.

அப்பொழுது லண்டனில் வட்டமேஜை மகாநாடு கூடியிருந்தது. இந்தியாவிலிருந்து பல தலைவர்கள் அதில் கலந்து கொள்வதற்காக லண்டனுக்கு வந்திருந்தார்கள். தமிழ்நாட்டிலிருந்து திரு சீனிவாச சாஸ்திரியார் அவர்களும் வந்திருந்தார். திரு சீனிவாச சாஸ்திரியார் வந்திருக்கிறார் என்பதை அறிந்ததும் அழகப்பர் அவரைப் போய்ப் பார்த்தார். தம்முடைய விருப்பத்தையும் தெரிவித்து அதற்கு உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். திரு சீனிவாச சாஸ்திரியாருக்கு எப்பொழுதுமே மாணவர்களிடத்தில் மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. ஆகையால் அழகப்பர் தம்முடைய ஓய்வு நேரத்தைச் செலவழிக்க ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டதும் திரு சீனிவாச சாஸ்திரியார் அவருக்கு உற்சாகமாக உதவி அளிக்க முன்வந்தார்.

திரு சாஸ்திரியார் அவர்களின் உதவியுடன் லண்டனில் உள்ள 'சார்ட்டர்டு பாங்க் ஆப் இந்தியா'வில் அழகப்பர் வேலைக்கு அமர்ந்தார். பிரிட்டிஷ் சர்க்கார் செல்வாக்குடன் இருந்த அந்தக் காலத்தில் லண்டனில் உள்ள இந்தப் பாங்கியில் முதன் முதலாக வேலையில் சேர்ந்த இந்தியர் அழகப்பர்தான்.

பாரிஸ்டர் படிப்புக்குப் பின்னும், பாங்கு வேலை பார்த்த பிறகும் கூட அழகப்பருக்கு இன்னும் ஓய்வு நேரம் கிடைத்தது. அந்த நேரத்தையும் ஏதாவது பயன் உள்ள முறையில் செலவு செய்ய வேண்டும் என்று ஆத்திரப் பட்டார். அதற்கு என்ன செய்யலாம் என்று தீவிரமாக யோசனை செய்தார். விமானம் ஓட்டும் கலையைப் பயிலத் தொடங்கினார். விமானம் ஓட்டுவதிலும் சிறந்த நிபுணரானார்.

பாரிஸ்டர் படிப்பும், பாங்கித் தொழில் அனுபவமும், விமானம் ஓட்டும் கலையையும் பயின்று முற்றிலும் புதிய மனிதராக 1933-ம் ஆண்டு இந்தியாவுக்கு வந்தார்.

இந்தியா திரும்பியதும் பங்கு வியாபாரத் தொழிலில் ஈடுபட்டார். அதில் உள்ள மகோன்னதமான நிலைமையையும் படுமோசமான நிலைமையையும் பார்த்தார். இத்தொழிலில் பல லட்சம் ரூபாய்களைக் கோட்டை விட்டார். பணம் இருக்கும் போது இருக்கும் நண்பர்களையும், நட்புக்காகவே நட்பு கொள்ளும் சிநேகிதர்களையும் அப்பொழுது அழகப்பரால் இனம் கண்டு கொள்ள முடிந்தது.

வேறு தொழில் துறையில் ஈடுபட முயன்றார். கேரள நாட்டில் ஒரு நூல் ஆலையை ஏற்படுத்த விரும்பினார். திருச்சூருக்கு எட்டு மைல்களுக்கு அப்பால் உள்ள புதுக்காடு என்னும் ஊருக்கு அருகில் ''அழகப்பா நூல் ஆலை''யை நிறுவினார். அழகப்பர் நூல் ஆலை ஆரம்பிப்பதற்கு முன் வெறும் காடும் கரம்புமாக இருந்த பூமி ஆயிரக்கணக்கான மக்கள் வளைய வரும் அழகு மிக்க நகரமாகி விட்டது. அந்த நகருக்கும் 'அழகப்பா நகர் ' என்றுதான் பெயர். இப்பொழுது அழகப்பா நூல் ஆலையில் ஐம்பதாயிரம் கதிர்கள் சுழலுகின்றன. ஆயிரக்கணக்கான தொழிலாளர்களும், குமாஸ்தாக்களும், உத்தியோ

---

*அழகப்பர் தம் கல்லூரிகளைப் பாதுகாப்பதற்காக ''அழகப்பா கல்வி அற நிலைய நிதி'' என்று ஒரு நிதி ஏற்படுத்தியிருக்கிறார். அதன் தர்மகர்த்தாக்களாகப் பல பிரமுகர்களையும் நியமித்திருக்கிறார். அவர்களில் சிலரை இந்தப் பக்கங்களில் காணலாம்:—*

*1. திரு இ. வி. டி. வி. வெங்கடாசலம் செட்டியார், அழகப்பா*

கஸ்தர்களும் ''அழகப்பா நூல் ஆலை''யில் மிகுந்த உற்சாகத்துடன் பணியாற்றி வருகின்றனர்.

டாக்டர் அழகப்பர் தமக்கு உதவி செய்தவர்களை எப்பொழுதும் மறக்க மாட்டார். எவ்வளவோ கஷ்டமான நிலையிலும் தமக்குத் தளராத உறுதியையும் திட நம்பிக்கையையும் அளித்த ஆண்டவனுக்கு முதலில் காணிக்கை செலுத்த விரும்பினார்.

தமக்கு வாழ்வளித்த ஆண்டவனின் பெருங்கருணைக்கு எப்படி நன்றி செலுத்த முடியும்? வாழ்க்கையில் நாணயமாக வாழ்ந்து வருவதற்கு முயல்வதே ஆண்டவனுக்குச் செலுத்தும் நன்றி தான். என்றாலும் அதற்கு முதல் படியாகப் பல ஆயிரம் ரூபாய்கள் செலவில் கண்ணபிரானுக்கு அழகு நிறைந்த திருக்கோயில் ஒன்று எடுத்து மகிழ்ந்தார்.

அழகப்பர் யாரும் எதிர்பாராத முறையில் தொழிலைக் 'கிடு கிடு' என்று பெருக்கினார். எத்தனையோ எதிர்ப்புக்களுக்கும், இடையூறுகளுக்கும், கஷ்டங்களுக்கும், நஷ்டங்களுக்கும் மத்தியில் ஏகாக்ர சித்தத்துடன் நின்று தொழிலை வளர்த்தார். இந்தச் சமயத்தில் அன்பே உருவமான பல தெய்வ மனிதர்களையும் பார்த்தார்; இருதயமற்ற அரக்கர்களையும் பார்த்தார். பணம் சம்பாதிப்பதற்காக மக்கள் செய்து வரும் சூதுவாதுகளை நன்கு உணர்ந்தார். பணம் படைத்தவர்கள் தங்கள் சுயநலம் ஒன்றையே கருதி நாட்டில் நல்லவர்களைக்கூட நல்லவர்களாக வாழ முடியாதபடி செய்துவரும் கோலத்தைக் கண்டார். அதன் மூலம் ஏற்பட்டு வரும் தீய விளைவுகளைக் கண்டு மனம் நொந்தார். உலகத்தின் பயங்கர உருவம் அவர் முன்னே விசுவ ரூபம் எடுத்து நின்றது. இந்தப் பயங்கரத்தை மாற்ற வேண்டுமானால் மக்கள் எல்லாரும் எழுத்தறிவு பெற்றவர்களாகவும் தொழில் ஞானம் படைத்தவர்களாகவும் திகழ வேண்டும் என்பதை உணர்ந்தார். அதற்குத் தம்மால் ஆனதையெல்லாம் செய்வதென்று தீர்மானித்தார். தாம் சம்பாதித்த லட்சக்கணக்கான ரூபாய்களையும் அந்தப் புனிதமான கைங்கரியத்துக்காகச் செலவழிக்கமுடிவு செய்தார். அதற்கு முதல் காரியமாகத் தம்முடைய புதல்வியின் திருமணத்தை முடித்து விடுவது என்று தீர்மானம் செய்தார்.

தம்முடைய புதல்வி உமையாளுக்குத் தென்னாட்டில் இது வரை யாருமே நடத்தாத முறையில் மிகச் சிறப்பாகத் திருமணம் நடத்தினார். அந்தத் திருமணத்தின் மூலம் டாக்டர் அழகப்பரின் புகழ் தமிழ் நாட்டில் மட்டுமல்லாது, அகில இந்தியாவிலும் ஓங்கிப் பரவியது.

**தா**ம் தம் புதல்விக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்த பிறகு அவருடைய உள்ளம் தீவிரமாக யோசனை செய்தது. அழகப்பருக்கு வேறு ஆண் மகவு இல்லாமல் இருந்தது. தமிழ்நாட்டுக் குழந்தைகளின் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். தமிழ் நாட்டில் உள்ள எல்லாக் குழந்தைகளையும் தம்முடைய சொந்தக் குழந்தைகளாகவே எண்ணத் தொடங்கி விட்டார். அவர்களுக்குக் கல்வி தர்மம் செய்வதுதான் தம்முடைய கடமை என்று உணர்ந்தார். உடனே தாம் ஈட்டிய பல லட்சக்கணக்கான ரூபாய்களையும் பல கல்வி ஸ்தாபனங்களுக்கு இரண்டு கைகளாலும் அள்ளி அள்ளிக் கொடுத்தார். பிறகு தாமே தம்முடைய சொந்தப் பொறுப்பில் காரைக்குடியில் கலாசாலைகள் நிறுவினார். இன்றைய தினம் அழகப்பரின் கல்வி தர்மத்தினால் ஆயிரக்கணக்கான மாணவர்கள் அறிவும் ஆற்றலும் பெற்ற நிபுணர்களாக அவருடைய கல்வி ஸ்தாபனங்களிலிருந்து வெளி வருகின்றனர்.

சென்ற நான்கு வாரங்களாகக் காரைக்குடியில் அவர் நிகழ்த்தி வரும் அற்புதங்களை அழகப்பரின் அதிசய சாதனைக் கட்டுரைகள் மூலம் நேயர்கள் பார்த்து வந்திருக்கலாம். அப்

---

கல்வி அறநிலைய நிதிக் காரியதரிசி. 2. கே. வி. எல். எம். ராமநாதன் செட்டியார். 3. திரு பி. எஸ். குமாரசாமிராஜா. 4. திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியார். 5. திருமதி உமையாள் ராமநாதன். 6. திரு ஏ. ஆர். அருணாசலம். 7. திரு வி. டி. வீரப்ப செட்டியார். 8. திரு சா. கணேசன்.





பாரதத்தின் ஜனாதிபதி பாபுராஜேந்திர பிரஸாத்அவர்கள் அழகப்பா பாலிடெக்னிக் கலாசாலையைத் திறந்து வைக்கிறார். ஜனாதிபதி மின்சார பித்தானை அமுக்கிக் கலாசாலையைத் திறப்பதை டாக்டர் அழகப்பர் பார்த்து மகிழும் காட்சியை மேலே படத்தில் காணலாம்.

படிப்பட்ட உத்தமரின் திருஉருவத்தைத்தான் இந்த வாரத்துக் 'கல்வி' அட்டை பெருமையுடன் தாங்கி வருகிறது. டாக்டர் அழகப்பர் செய்துள்ள தர்மங்களைத் தமிழகம் மறக்காது என்பதற்கு அறிகுறியாகத்தான் அவரது படத்தைக்'கல்வி'யில்மகிழ்ச்சியோடுவெளியிடுகிறோம். இதன் மூலம் பாரத நாட்டில் உள்ள வள்ளல் பரம்பரையையே கௌரவிக்கிறோம்.

டாக்டர் அழகப்பர் 1909-ம் ஆண்டு ராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள கோட்டையூரில் பிறந்தார். நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்குள் நாட்டு மக்கள் வியக்கும்படி பல அதிசய சாதனைகளைப் புரிந்திருக்கிறார். எல்லாச் செல்வங்களையும் பெற்ற டாக்டர் அழகப்பருக்கு ஆண்டவன் நோயற்ற செல்வத்தை மட்டும் கொடுக்கவில்லை. அதையும் தம்முடைய இணையற்ற மனோதிடத்தால் டாக்டர் அழகப்பர் அவர்கள் வென்று விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும்.

"டாக்டர் அழகப்பரின் கல்லூரிகள் அழகப்பா சர்வகலாசாலையாக மாற வேண்டும். அது இந்த உலகில் உள்ள இதர சர்வ கலாசாலைகள் எல்லாம் பார்த்து வியக்கும் முறையில் சிறப்புடன் விளங்க வேண்டும். அதற்கு டாக்டர் அழகப்பரின் நோய் நீங்கி, அவர் நீடூழி வாழ்ந்து இந்தத் தர்மங்களைப் போல் இன்னும் எத்தனையோ தர்மங்களை இனிது நடத்தட்டும்" என்று பிரார்த்திப்போம். இந்தப் பிரார்த்தனையுடன் டாக்டர் அழகப்பரின் இதர கல்லூரிகளை எல்லாம் பார்ப்போம். அவர் காரைக்குடியில் முதன் முதலில் ஆரம்பித்து வைத்த அழகப்பா கலைக் கல்லூரிக்குள் இப்பொழுது செல்லுவோம்.

** ** **

அழகப்பா கலைக் கல்லூரி அமைந்திருக்கும் இடமும், அதன் கம்பீரமான கட்டடங்களும் கல்வித் துறையில் ஆர்வம் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் பார்த்துப் பெருமைப் பட வேண்டிய கலைக் கூடமாகும். விசாலமான திறந்த வெளியில் அமைந்திருக்கும் கல்லூரிக் கட்டடத்துக்குள் செல்லுவதற்கு முன்னுலேயே அதன் அழகு மிக்க தோற்றம் நம்மைக் கவருகிறது. உள்ளே சென்றுலோ ஒவ்வொரு அறையிலும் தமிழ் நாட்டு மாணவர்கள் வரிசை வரிசையாக அமர்ந்து கல்வி பயிலும் முறை மனத்துக்கு உற்சாக மூட்டுகிறது. வேறு சில இடங்களில் கல்லூரிகளில் பாடம் நடப்பதை ஒரு கணம் நினைத்துப் பார்த்து விட்டு அழகப்பா கலைக் கல்லூரியையும் மனத்துக்குள் ஒப்பிட்டுப் பார்த்தால் 'ஆகா! கல்லூரி என்றுல் இது வன்றோ கல்லூரி. இந்தக் கல்லூரியின் பிரின்ஸ்பல் அல்லவா பிரின்ஸிபல்!" என்று நினைக்கத் தோன்றும்.

அடுத்த கணம் அந்தப் பிரின்ஸிபலைப் பார்க்க வேண்டும் என்று ஆவல் ஏற்படாமல் இராது. என்னுடைய ஆவலை எப்படியோ தெரிந்து கொண்ட நண்பர், என்னை அழகப்பா கலைக் கல்லூரி பிரின்ஸிபல் திரு ஏ. என். தம்பியிடம் அழைத்துச் சென்றார்.

தம்பி என்ற பெயரைக் கேட்டவுடன் யாரோ இளம் வயதுடையவராக இருப்பார் என்றுதான் எதிர்பார்த்தேன். ஆனால் நான் எதிர்பார்த்ததற்கு நேர்மாருக அறிவும் அனுபவமும் திறமையும் கொண்டவராகத் தம்பி தோற்றமளித்தது எனக்கு வியப்பை யளித்தது. திரு தம்பி வயதில்தான் பெரியவரே ஒழிய, பேச்சிலும், சொல்லிலும் உற்சாகம் நிறைந்த சின்னஞ்சிறு தம்பியாகவே இருந்தார். முகம் மலரக் கைகூப்பி என்னை வரவேற்ருர். உடனே கல்லூரியின் கட்டடத்தையும், வகுப்பு அறைகளையும் சுற்றிக் காட்ட அழைத்துச் சென்றார். அப்படிப் போகும் போதே அழகப்பா கலைக் கல்லூரியின் சரித்திரத்தையும் சுருக்கமாகக் கூறினார்.

** ** **

கலைக் கல்லூரி பிரின்ஸ்பால் திரு ஏ. என். தம்பி கூறிய டாக்டர் அழகப்பரின் கலைக் கல்லூரி ஆரம்பித்த கதையையும், கல்லூரியையும் இன்னும் சிறிது நேரத்தில் காணலாம்.

கல்லூரி என்றுல் எப்படி யிருக்க வேண்டும், வெறும் படிப்பு மட்டும் போதுமா? ராணுவப் பயிற்சியும் வேண்டுமா? என்பதை எல்லாம் திரு தம்பி விளக்கிக் கூறிய விதத்தையும் கலைக் கல்லூரி மாணவர்களுக்குப் படிப்புடன் கூட ராணுவப்பயிற்சியும் அளித்துவருவதைக் கண்டு களிக்கலாம். (தொடரும்)

# எண்ணெய் வாங்குவதில் சந்தேகத்திற்கே இடம் தராதீர்கள்




## எப்போதும் காஸ்ட்ரால்

### பெயரைச் சொல்லியே கேளுங்கள் !




**காஸ்ட்ரால்**

**எண்ணெய்களுள் மிகச் சிறந்தது**

உங்களுக்குப் பிடித்த சிகரெட்டை அதன் பெயரைச் சொல்லிக் கேட்பது போலவே உங்களுக்குப் பிடித்தமான எண்ணெயையும் பெயர் சொல்லித்தான் கேட்க வேண்டும். உங்களுக்குக் காஸ்ட்ரால் வேண்டுமெனில் அதன் பெயரைச் சொல்லிக் கேளுங்கள். சாதாரணமாக, ''எண்ணெயை ஊற்றி நிரப்பு'' என்னும்போது நீங்கள் ஒரு சங்கடமான நிலைமையை ஏற்படுத்துகிறீர்கள். மோட்டார் எண்ணெய் வியாபாரிக்கு, உங்களுக்கு விருப்பமான எண்ணெய் எது என்பதை ஊகிக்க முடியாது! எனவே, ''ஒவ்வொரு தடவையும் காஸ்ட்ராலையே கொடு'' என்று நீங்கள் எப்பொழுதும் கேட்க நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

**ஸி. ஸி. வேக்பீல்ட் & கம்பெனி, லிமிடெட்**

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

# கடல் கண்ட கனவு

## இருபத்தொன்றும் அத்தியாயம்

## பிரம்பு ஒலித்தது!

சித்தருடைய பிரம்பின் ஒலியும் குமிழ்க் கட்டையின் ஓசையும் பூபதியை எப்படித் தாக்கி விட்டன என்பதைப் பார்த்த மந்திரநாயகத்துக்கு எல்லையற்ற வியப்பு உண்டாயிற்று. இதற்கு முன்பு இம்மாதிரியான ஓசையைக் கேட்டறியாத வலம்புரித் தீவின் அமைச்சர், தமது இளவரசனுடைய பதற்றத்தின் காரணத்தை யூகிக்க முடியாமல் திணறிய போது, ''ராஜகுமாரா!'' என்று அழைத்துக் கொண்டே அந்தச் சித்திர சாலைக்குள்ளே சித்தர் வருவதைக் கண்டு, தம்மையும் மீறிய ஒரு கலவரத்தில் எழுந்து நின்றார். சித்திராங்க பூபதியோ இரண்டு கைகளையும் கூப்பிக் கொண்டு நின்றான்.

''என்னப்பா ராஜகுமாரா! மந்திர நாயகத்தோடு மந்திராலோசனை செய்து கொண்டிருக்கும்போது நான் குறுக்கே வந்து விட்டேனோ? என்ன அமைச்சர் அவர்களே! வலம்புரித்தீவின் மந்திர நாயகமே! பூஜை வேளையில் பூதம் புகுந்து விட்டதோ! இப்படித் திகைத்துப் போய் நிற்கிறீர்களே! இது வெறும் மானிடக் கட்டைதான் சுவாமி! பேயோ, பிசாசோ இல்லை!''

மந்திரநாயகத்துக்குச் சித்தரின் இந்த வார்த்தைகள் பதற்றத்தை அதிகப்படுத்தினவே தவிர, குறைக்கவில்லை! என்றாலும் தம்மைத்தாமே சமாளித்துக் கொள்ள முயற்சி செய்தார், சொன்னார்:

''சுவாமி! தங்களைப் போன்ற மகான்களின் ஆசீர்வாதம் கிடைக்கக் கூடிய புண்ணியம் எங்கள் இருவருக்கும் இருக்கிறதா என்று நினைத்துத் திகைத்தேன்! மற்றப்படி தங்களுடைய வரவு பற்றி வேறு எவ்வித விபரீத எண்ணமும் கிடையாது!''

இந்த வார்த்தைகளை மந்திரநாயகம் சொல்லி நிறுத்தியதும், 'பலீர்' என்று மறுமொழி வந்தது, சித்தரிடமிருந்து!

''ஐயா! அமைச்சரே! உமக்குப் பேசச் சொல்லித்தர வேண்டுமா என்ன? மந்திரிமார்களோடு இந்தக் கட்டையினால் பேசி ஜயிக்க முடியுமா! இன்னும் கொஞ்ச நேரம் போனால் 'தேவரீருடைய திருப்பாதங்கள் இந்தக் குடிசையிலே படும்படியான பாக்கியம் இந்த ஜன்மத்தின் புண்ணியமா அல்லது முன் ஜன்மத்தின் புண்ணியமா?' என்று சொல்வீர்கள். அதோடு நிறுத்துவீர்களா! நாங்கள் செய்த தவப்பயனா, இல்லை முன்னோர்கள் செய்த தவப்



பயனா என்று திகைக்கிறோம் என்றெல்லாம் ஆரம்பித்து விடுவீர்கள். எத்தனை பேரோடு பேசிப் பழகியவர்கள் நீங்கள்! மந்திரிமார்கள் அல்லவா!''

இவ்வாறு ஒரு போடு போட்டுக் கொண்டே சித்திராங்கனைப் பார்த்தார் சித்தர்! அவனுக்கு என்ன பேசுவது என்றே தெரியவில்லை. மந்திரநாயகம் இந்தச் சித்தரிடம் அகப்பட்டுக்கொண்டாரே என்ற பாவனையில் பரிதாபமாகப் பார்த்தான்!

'' என்ன பார்க்கிறாய், ராஜகுமாரா! வலம்புரித்தீவின் அமைச்சர் பெருமானை நான் விழுங்கிவிட மாட்டேன்! பயப்படாதே! அப்படியெல்லாம் விழுங்கிவிட முடியாது அவரை! வீர விக்கிரமனால் கூட அவரை விழுங்க முடியாது என்றால் பார்த்துக் கொள்ளேன்! ஆனால் இந்தச் செந்தமிழ் நாட்டில் இப்பொழுது என்ன நடக்கிறது என்று தெரியாது அவருக்கு! பாவம், இங்கே உன்னோடு நிம்மதியாக இருந்து பேசிக் கொண்டிருக்கிறார். கடலின் பரப்பிலே சேனைகள் வியூகம் வகுத்து நிற்பது அவருக்குத் தெரியுமா! தெரியாது! அவரிடம் போய் நீ ஏதேதோ கேள்விகள் போடுகிறாயே; இதைப் பார்க்கும் போது உன்னிடம் அநுதாபப்படுவதா அல்லது உன்னுடைய மந்திர நாயகத்திடம் அநுதாபப் படுவதா என்று இந்தக் கட்டைக்குத் தெரியவில்லை! என்ன அமைச்சர் அவர்களே! நீங்களே சொல்லுங்கள்!''

இப்படிக் கூறி விட்டுப் பூபதியைப் பார்த்துச் சித்தர் சொன்னார்.

'' ராஜகுமாரா! மாமல்லபுரத்து விடுதியிலே தங்கியிருந்த போதும், பிறகு நீ மாமல்லபுரம் கடற்கரையிலே சிற்பங்களைப் பார்த்துக் கொண்டிருந்த போதும் யாழ் என்பதாக ஒரு பொருளைப் பற்றிக் கவலைப்பட்டாயே! ஞாபகம் இருக்கிறதா? அந்த யாழ் இப்போது எங்கிருக்கிறது என்று உனக்கு ஒரு ஆருடம் சொல்லட்டுமா?''

சித்திராங்க பூபதிக்குப் பொறுமை இல்லை. ஆத்திரம் ஏற்பட்டது. ஆனாலும் சித்தரிடம் ஆத்திரப்படுவதற்கு வேண்டிய மனத் துணிவு இல்லை. முகம் சிவந்தது. மந்திரநாயகம் இதைக் கவனித்தார். உடனே சித்தருடைய கேள்விக்குப் பூபதி விடை சொல்வதற்கு முன்பு மந்திரநாயகம் விரைந்தார்.

'' சுவாமி! எங்கள் இளவரசர் அரண்மனையின் நான்கு சுவர்களுக்குள்ளும் வளர்ந்த செல்லப் பிள்ளை. உலக அநுபவம் இல்லாதவர். அதனால்...''

''அதனால் உலக அநுபவம் நிரம்பிய நீங்கள் சொல்லப் போகிறீர்களோ! பெரியாழும் பெரியாழை வாசிக்கும் நங்கையும் கடலிலே மிதக்கிற செய்தி யாருக்குத் தெரியும்? வலம்புரித் தீவை நோக்கி வீர விக்கிரமன் பெரிய படையொன்றை அனுப்பி யிருக்கிறான், சுவாமி! உங்கள் தீவு உண்மையிலேயே இப்பொழுது கடலில் மிதக்கிறது! தெரியுமா? சும்மா இங்கே சாய்மானத்திலே இருந்து கொண்டு கதை பேசிக் கொண்டிருக்காதீர்கள்! புறப்படுங்கள்! உங்கள் இளவரசைத் தீவிலே கொண்டு போய்ச் சேருங்கள்! பாவம்! அன்னை கொடுத்து அனுப்பிய தந்தப் பேடகத்தோடு இந்தப் பிள்ளை ஊர் போய்ச் சேரட்டும்! கேள்விகளும் விடைகளும் பிறகு பார்த்துக் கொள்ளலாம்!''

இப்படிச் சொல்லிவிட்டு மறுபடியும் பிரம்பு 'பளார்' 'பளார்' என்று ஓசை செய்யும் வண்ணம் அடித்துக் கொண்டே, 'டக்டக்' என்று நடந்தார் சித்தர் மிகவும் வேகமாக! அவர் மறைந்ததும் பூபதியும் மந்திரநாயகமும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டே ஒன்றும் புரியாமல் நின்றார்கள்.

''சித்திராங்கா!'' என்று மௌனத்தைக் கலைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார் மந்திரநாயகம்.

''சித்திராங்கா! இதெல்லாம் என்ன அர்த்தம் என்றே ஒன்றும் புரியவில்லை! யார் இந்தச் சித்தர்? இவர் ஏன் இப்படிக் குடுகுடு என்று ஓடோடியும் வந்து தீக் கங்கைக் கொட்டி விட்டுப் போகிறார்?'' என்று கேட்டார்.



சித்திராங்க பூபதி பேச ஆரம்பித்தான்.

''யார் என்று தெரியவில்லை. இவர் யார் என்று தெரியாமல்தான் உங்களிடம் அந்த ஐந்தாவது கேள்வியைக் கேட்டேன். அடிக்கடி என்னைப் பின் தொடர்கிற இந்தச் சித்தர் யார் என்று உங்களிடம் கேட்க ஆரம்பித்த போதுதான் இவரும் இங்கே வந்து குதித்தார்! என்ன ஆச்சரியம் பாருங்கள்! ஒவ்வொரு முறையும் இவர் இப்படித்தான் வருகிறார்! ஆனால் ஒன்று! நீக்கங்கைக் கொட்டினார் என்று சொன்னீர்களே, அது தவறு. இவர் கொட்டியது நீக்கங்கு போலத் தோன்றும் முதலில்! ஆனால் பொறுத்திருந்து பார்த்தால் அவர் கொட்டிய ஒவ்வொரு வார்த்தையும், நீக் கங்கு இல்லை, ஆனால் தீப்போல் ஒளி வீசக்கூடிய ரத்தினக் கல் என்று பின்னால் தெரியவரும்! இதுதான் என்னுடைய அநுபவம்! ஆனாலும் அவர் சில சமயங்களில் நம்மை வளைத்து மடக்கும்போது ஆத்திரந்தான் வருகிறது!''

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போதே அந்த மாடியில் எங்கிருந்தோ ஒரு பாடும் குரல் கேட்டது. நீண்ட நாளைக்கு முன்பு பூபதி மாமல்லபுரம் விடுதியிலே மேல்மாடியில் படுத்திருந்தபோது, சித்தர் ஒரு பண் பாடினார் அல்லவா? அதே பண்தான் இப்பொழுதும் கேட்டது. நல்ல சூரியோதயத்தில் பாடுகிற உதயப் பண் அது! அதே சித்தர்தான் இப்பொழுதும் பாடினார். தொலைவில் அந்த மாடியில் எங்கோ ஒரு அறையிலிருந்து வந்தது அந்தப் பாடல்! திருமூலர் என்ற மகா ஞானி, யோகிகளுள் யோகி, சித்தருக்குள்ளே சித்தர்—அந்த தெய்வக் கவிஞருடைய திருமந்திரம் அது! அந்தப் பாடலின் வார்த்தைகளைக் கூர்ந்து கேட்டான் சித்திராங்கன்:—

தீயினும் வெய்யன்; புனலினும் தண்ணியன்;
ஆயினும் ஈசன் அருள் அறிவார் இல்லை;
சேயினும் நல்லன்; அணியன்; நல் அன்பர்க்குத்
தாயினும் நல்லன்; நல் தாழ் சடை யோனே!



மந்திர நாயகம் திகைப்பு மேலிட்டவராகப் பார்த்தார். "தீயைக் காட்டிலும் வெப்பமானவன், தண்ணீரைக் காட்டிலும் குளிர்ந்தவன்" என்று அந்தப் பாடல் இறைவனுடைய தன்மையை எத்தனை அழகாக வர்ணிக்கிறது! அந்த இறைவனுடைய அடியார்களும் அப்படித்தான் இருப்பார்கள் போலும் என்று மந்திரநாயகத்தின் மனத்துக்குள்ளே ஒரு நினைவு நெளிந்தது. அந்த நினைவே பூபதியின் உள்ளத்திலும் உண்டாயிற்று. சொன்னான்:

"மந்திரநாயகம்! அந்தப் பாடலைக் கேட்டீர்களா! நம்முடைய எதிரே தோன்றிய இந்தத் தாழ்சடைச் சித்தரும், இப்படித்தான்! சில சமயங்களில் அவர் பேசுவது நெருப்பை விடச் சுடுகிறது. சில சமயங்களில் தண்ணீரை விடக் குளிராக இருக்கிறது! இந்த அதிசயத்தை நான் பல நாட்கள் எண்ணிப் பார்த்ததுண்டு! அதனால்தான் இந்தச் சித்தர் யார் என்று கேட்டேன்! ஆனால் உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. மற்ற நான்கு கேள்விகளுக்காவது நீங்கள் விடை சொல்லுவீர்களா என்றால் அதற்கும் முடியாதபடி இப்போது சித்தர் ஒரு பெரும் போடு போட்டு விட்டுப் போயிருக்கிறாரே! கடலின் பரப்பிலே பெரிய போர் நடக்கிறதாமே! பேரியாழும் யாழ் நங்கையும் கடலிலே மிதக்கிறார்களாமே! நீங்களும் நானும் உடனே இங்கிருந்து புறப்பட வேண்டுமாமே!"

பூபதி ஒவ்வொரு வாக்கியமாகச் சொல்லிக் கொண்டே குழம்பிவந்தான். அந்தத் தருணத்தில் தஞ்சை அரண்மனையைச் சுற்றி ஆரவாரம் எழுந்தது. குதிரைகள் 'பட பட' என்று ஓடி வந்தன. வில்லும், வேலும், ஈட்டியும், சூலமும் தாங்கிய வீரர்கள் அணி அணியாக வந்தார்கள். அந்த ஓசை அரண்மனையின் மேல் மாடியிலே வந்து எதிரொலித்தது! மந்திர நாயகமும் பூபதியும் முற்றத்துக்கு வந்து அந்தக் காட்சியைப் பார்க்கலாம் என்று முனைவதற்குள், 'விறு விறு' என்று மாடிக்கு நடந்து வந்தார் வல்லத்தரசர்.

"மந்திர நாயகம்! நாம் எதிர்பார்த்ததை விடச் சம்பவங்கள் மிகத் துரிதமாக நடக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. பேச்சை வளர்த்துவதற்கு இடமில்லை. நீங்களும் உங்கள் இளவரசரும் இப்பொழுதே புறப்பட வேண்டும்! உங்கள் யாத்திரைக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் உதய சந்திரன் தீர்க்கமாகச் செய்து முடித்து விட்டார்."

இவ்வாறு அறிவித்தார் வல்லத்தரசர். அவருடைய வார்த்தைகளில் அவசரம் தொனித்தது.

"சித்திராங்க பூபதி! உங்களுடைய திருமணம் சம்பந்தமாக இந்தத் தஞ்சை அரண்மனையிலே சில முக்கிய விஷயங்கள் பேசவேண்டும் என்று நாங்கள் நினைத்தோம். ஆனால் ஏதேதோ நிகழ்ந்து விட்டது. செந்தமிழ் நாட்டில் போர்மேகம் மின்னலும் இடியுமாகக் குமுறி எரிகிறது. நீங்களும் மந்திர நாயகமும் இப்பொழுதே வலம்புரித் தீவுக்குப் புறப்பட்டு விடவேண்டும். உங்களோடு ஒரு பெரிய காவற்படை வருகிறது. ஏற்கனவே ஒரு பெரும் படையும் வலம்புரித் தீவுக்குப் புறப்பட்டுச் சென்றிருக்கிறது! நீங்கள் உடனே புறப்பட வேண்டும்!"

பூபதியைப் பார்த்து இப்படிச் சொன்னார் வல்லத்தரசர்.

எத்தனை திகைப்பு எப்படி உண்டான போதிலும், வல்லத்தரசருடைய பேச்சுக்கு மறுபேச்சு இல்லை. மந்திர நாயகமும் பூபதியும் சித்திர சாலையிலிருந்து முற்றத்துக்கு வந்தார்கள். வெளியே காவற்படை செய்த ஆரவாரம் இவர்களுடைய அவசரத்தை இன்னும் அதிகமாகத் துரிதப்படுத்தியது. அந்தத் துரிதத்தில் மந்திர நாயகமும் சித்திராங்க பூபதியும் வலம்புரித் தீவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

# தோகை மயில்

பல்லவர்களுடைய ஆட்சி மகோன்னதமாக விளங்கிய காலத்தில், காஞ்சி மாநகரமே பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகரமாக விளங்கியது. தொண்டை மண்டலத்தில் அக்காலத்தில் இருபத்து நான்கு கோட்டங்கள் இருந்தன. அவற்றில் ஒன்றுக்கு எயிற் கோட்டம் என்று பெயர். அந்த எயிற் கோட்டத்திலேதான் பல்லவர்களின் தலைநகரமாகிய காஞ்சிமா நகரம் இருந்தது. எயில் என்ற சொல்லுக்குக் கோட்டை என்று பொருள். எயிற் கோட்டத்திலே விளங்கிய காஞ்சிமா நகரை எயிற்பதி என்றே பெரியார்கள் அழைத்துவந்தார்கள். அப்படிப் புகழ் பெற்ற காஞ்சியின் அமைப்பு எழிலோடு கூடியதாக இருந்தது.

அவள் அழகில் வெற்றி இருக்கிறது

அவள் அழகில் ஒரு இரகசியம் இருக்கிறது

"நான் வத்னியை உபயோகிக்கிறேன்"
என்று மதுபாலா கூறுகிறார்.

## "மூன்று நல்ல காரணங்களுக்காக:

அது கடைசி செதிள்வரை புதுமையும் நறுமணமுமுள்ளது.

அது உயர்ந்த ரகமும் ஸ்வதேசியுமானது.

அது கோத்ரெஜினால் தயாரிக்கப்பட்டது"

மதுபாலா மேலும்
கோத்ரெஜ்
டாய்லெட் பவுடர்
கூந்தல் தைலம்
சலவை சோப்புத் தூள்களை
உபயோகிக்கிறார்

"அவைகள் மிகவும் நம்பகமானது" என்று கூறுகிறார்.



100% இந்திய
நிர்வாகம்
மூலதனம்




நீங்கள் விரைவில் "ராஜ் ஹத்" என்ற படத்தில் மதுபாலாவைக் காண்பீர்கள்.

கோத்ரெஜ் வத்னி*

ரிஜிஸ்டர்டு

சாவி மார்க்

வத்னி 'பேபி' விலை 2¼ அணாதான்

★"தாய்நாடு" என்று அர்த்தங்கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

தொலைவிலிருந்து பார்ப்பவருக்குக் காஞ்சிமா நகரம் ஒரு தோகை மயிலைப் போலக் காட்சி தந்தது. காஞ்சியின் எயில் ஒரு அழகிய மயிலின் உடலைப் போல் நீண்டு வளைந்து நின்றது. அம்மயிலின் சிறகு போன்றிருந்தது காஞ்சியின் ஏரி. அந்த மயிலின் அடர்த்தியான தோகையைப் போல அடர்ந்த காடு காஞ்சிமா நகருக்கு அணி செய்து பரந்து விரிந்து விளங்கியது. இப்படிப்பட்ட அந்த மயில்போன்ற கோட்டையிலே பல்லவ பீடம் செங்கோல் செலுத்தியது. 'இஞ்சி' என்றும் 'ஆரை' என்றும் வழங்கிய மதிற்சுவரும், 'கிடங்கில்' என்று அழைக்கப்பட்ட அகழி சூழ்ந்த கோட்டையும், படைவீடு என்னும் சேனை தளங்களுமாகக் காஞ்சிமா நகரின் தோற்றமே வீரம் பொருந்திய செங்கோலுக்குக் கட்டியம் கூறியது!

போர்க்களத்திலே தீரச் செயல்கள் புரிந்து அவற்றிற்கு அறிகுறியாக ஏனாதி என்ற பட்டம் பெற்ற பல வீரர்கள் பல்லவர்களின் படை அதிபர்களாக இருந்ததால், நந்திவர்மனுடைய ஆட்சியில் எத்தனை எதிர்ப்புக்கள் வந்தாலும் வெற்றிகரமாகச் சமாளித்துவிடமுடியும் என்று உதயசந்திரன் தீர்மானமாக நம்பினார். தவிரவும் நந்திவர்மன் என்ற சிறுவனைக் காஞ்சிமா நகரத்துக்கு அழைத்து வந்து பட்டம் சூட்டிய வைபவத்தில் உதயசந்திரனுக்குப் பக்க பலமாக விளங்கிய முத்தரையர்களோ ஆற்றலிலும் செல்வாக்கிலும் நிகரற்ற சூரர்கள். எனவே வீர விக்கிரமனும் சித்திரமாயனும் எத்தனை தூரம் சூழ்ச்சிகள் செய்த போதிலும், அவற்றை வென்று விடலாம் என்று உதயசந்திரன் ஊக்கமாக இருந்தார். ஆனால் இப்பொழுது பாண்டியர்களும் கொடும்பாளூர் வேளிர்களும் சித்திரமாயனுக்குத் துணை செய்ய முன் வந்து விட்டார்கள் அல்லவா? என்றாலும், எப்படியும் இந்த எதிர்ப்புக்களை முறியடிப்பதற்கு வேண்டிய படை பலத்தைத் திரட்டி விட முடியும் என்ற நம்பிக்கை அவருக்கு உண்டாயிற்று. இதற்குக் காரணம் வலம்புரித் தீவின் உறவிலே எதிரிகளும் கவனம் செலுத்தியதுதான்!

உதயசந்திரன் ராஜதந்திரத்தில் நன்றாகத் தேர்ந்த மேதை. அவர் நினைத்தார், பாண்டியர்களின் படையும், வேளிர்களின் படையும் வலம்புரித் தீவிலே கவனம் செலுத்த ஆரம்பித்து விட்டால் நல்லது என்று! கடலிலே எதிரிகளின் படையை முறியடிப்பதற்கு வேண்டிய சேனைபலமும் ஆற்றலும் முத்தரையர்களுக்கு இருந்தது. வலம்புரித் தீவுக்காக ஒரு பெரும் போர் நடத்தி அந்தப் போரிலே எதிரிகளை வீழ்த்தி விட்டால் அது ஒரு பெரும் சௌகரியமாக முடியும் என்று உதயசந்திரன் எதிர்பார்த்தார். கடற்போரிலே எதிரிகள் தோற்று விடுவார்கள் என்பது நிச்சயம். முத்தரையர்கள் வெற்றி பெற்று விடுவார்கள் என்பது உறுதி. அப்படி நேர்ந்து விட்டால், அது பாண்டியர்களுக்கும் சித்திரமாயனுக்கும் ஒரு பெரிய படிப்பினையாக இருக்கும். தொலைவிலிருந்து அவர்கள் எழுந்து வருவதற்கு முன்பு, வலம்புரித் தீவோடு உறவு செய்து கொண்டு எப்பொழுதும் பல்லவர்களுக்கு உதவி செய்யக் கூடிய விதத்தில் ஒரு பெரிய அணிவகுப்பை இரகசியமாக வலம்புரித் தீவிலே வைத்து விடலாம் என்று உதயசந்திரன் கருதினார். இந்தக் கருத்தை மனத்தில் வைத்துக் கொண்டுதான், மற்றச் சம்பவங்களையெல்லாம் சாமர்த்தியமாக இயக்கி வந்தார் அவர்! இந்த நிலையில் அவர் காஞ்சிமா நகரத்தின் பாதுகாவலைப் பற்றி அதிகமாகக் கவலைப்பட வில்லை. அத்தனை பெரிய கோட்டையைப் பாண்டியர்களோ அல்லது சித்திரமாயனுக்காக வேளிர்களோ படையெடுத்து வந்து தாக்குவார்கள் என்று உதயசந்திரன் எதிர்பார்க்கவில்லை. அப்படி எதிர்பார்க்க வேண்டிய அவசியமும் இல்லை. இது காரணமாக அவர் கடற்போரிலேயே இப்பொழுது முழு கவனத்தையும் செலுத்த ஆரம்பித்தார்.



வலம்புரித் தீவுக்குச் சென்ற பாண்டியர்களின் தூதுப் படை அங்கேயே காவல் செய்து கொண்டிருந்ததல்லவா? முதலில் அதை முறியடிப்பதற்காக மாமல்லபுரத்திலிருந்து ஒரு பெரிய மரக்கலப் படை புறப்பட்டுச் சென்றது. இதைத் தொடர்ந்து தஞ்சைமா நகரத்து முத்தரையர்களின் படையும் வல்லத்தரசரின் போர்வீரர்களும் வலம்புரித்தீவை நோக்கிப் புறப்பட்டார்கள். இரண்டாவதாகப் புறப்பட்ட தஞ்சைப்

படை வீரர்களோடுதான் பூபதியும் மந்திர நாயகமும் சென்றார்கள்!

அதே சமயம் பாண்டியர்களின் படையும் வீரவிக்கிரமனுடைய சகாயத்தோடு கொற்கையிலிருந்து வலம்புரித் தீவை நோக்கிச் சென்றது!



செந்தமிழ் நாட்டின் அரசப் படைகள் எல்லாம் ஏகோபித்துக் கடலிலே செல்லத் தலைப்பட்டதும் உதயசந்திரன் காஞ்சிமா நகரத்துக்கு வந்து மீண்டும் ஆலோசனை செய்தார். நந்திவர்மனுடைய தந்தையான இரணிய வர்மருடன் கலந்து யோசித்தார் உதயசந்திரன். இரணிய வர்மர் சொன்னார்:

''உதயசந்திரரே! இந்தக் காஞ்சிமா நகரமும் இதன் கோட்டையும் நமது முன்னோர்களின் தீர்க்க தரிசனமான யோசனையினால் நன்கு நிர்மாணிக்கப் பட்டிருக்கின்றன. இத்தனை பெரிய நகரத்தின் மீது நம்முடைய எதிரிகளால் படையெடுத்து வந்து தாக்குவது என்பது முடியாத காரியம். இன்றுள்ள நிலையில் பாண்டியர்களிடமோ, வேளிர்களிடமோ அத்தனை பலம் இல்லை. இருக்கிற படைகளும் இப்பொழுது கடலை நோக்கிச் சென்றிருக்கின்றன. எனவே இப்பொழுது பல்லவ சாம்ராஜ்யத்தைப் பாதுகாக்கும் பணியில் அதிகமான படைகளுக்கு அவசியமில்லை. ஆனால் கடலை நோக்கிச் சென்றுள்ள படைகளைப் பார்த்தால், அந்தக் கடல் யுத்தம் மாபெரும் போராக மூளும் என்றே நினைக்கிறேன். வலம்புரித் தீவுக்காக நடைபெறும் இந்தப் போரின் வெற்றியைப் பொறுத்துத்தான் நம்முடைய எதிர்காலத் திட்டங்கள் எல்லாம் அமையவேண்டும். எனவே இப்பொழுது கடற் போரை மிகத் திறமையாக நடத்த வேண்டிய பெரும் பொறுப்பு நமக்கு இருக்கிறது. அதை மெத்தனமாக விடுவதற்கு இல்லை. ஆகையால் தங்களுடைய கவனத்துக்கு ஒரு முக்கியமான யோசனையைத் தெரிவிக்கலாம் என்று என் மனத்தில் படுகிறது. உங்களுக்கு அது சம்மதமாக இருக்குமானால் அந்த யோசனையைக் கூறுகிறேன். உங்களுக்குத் தோன்றாத யோசனையை நான் புதிதாகச் சொல்கிறேன் என்பதாக நான் எண்ணவில்லை! நீங்களும் அப்படி எண்ணிவிடக் கூடாது!''

இப்படி ஒரு பீடிகை போட்டுக் கொண்டு பேச ஆரம்பித்தார் இரணிய வர்மர். உதயசந்திரன் சொன்னார்:

''பெரியவரே! நம் இருவருடைய இலட்சியமும் ஒன்றுதான். தங்களுடைய புத்திரர் நந்திவர்மரை இந்தச் செந்தமிழ் நாடு முழுமைக்கும் சக்கரவர்த்தியாக்க வேண்டும். அந்தப் பல்லவ விஜயமே நம் இருவருடைய இலட்சியமும்! ஆகையால் சற்றும் தயக்கம் இல்லாமல் உங்களுடைய யோசனையைத் தாராளமாகச் சொல்லுங்கள்!'' என்று கேட்டார் உதயசந்திரன்.

மாலை நேரம் கழிந்து சந்திரன் உதித்து வருகிற நேரம் அது. தோகை மயில் போன்று விளங்கிய காஞ்சிமா நகரத்தின் அரண்மனையிலே தேசங்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் இரண்டு அரசப் பிரமுகர்களும் ஆழ்ந்த யோசனையோடு பேச ஆரம்பித்தார்கள். (தொடரும்)

# இனி 'முஹந்நத்' தேவையில்லை



அலெக்சாந்தர் கி.மு. 331-ல் பாரசீகத்தின் மீது படையெடுத்த பொழுது, வாட்களும் பிற படைக்கலங்களும் இந்தியாவிலிருந்து விரைவாகத் தருவிக்கப்பட்டதை பிர்தோசியின் ஷா-நாமா என்னும் இதிஹாசம் கூறுகிறது. அன்றே உலகமெங்கும் நாகரீகம் வாய்ந்த நாடுகளில் இந்தியா உயர்ந்தரக எஃகின் இருப்பிடமாகப் புகழ் பெற்றிருந்தது. புராதன அராபிய பாஷையில் "வான்" "முஹந்நத்" என்று வழங்கப்பட்டது ... அதற்கு "இந்தியாவில் தயாரிக்கப்பட்டது" என்பது பொருள்.

இன்று எஃகானது மறுபடியும் நம் நாட்டின் கவனத்தைக் கவர்ந்து வருகிறது ... உயரிய நோக்கத்துடன். நம் எஃகு உற்பத்தியானது விரைவாக விஸ்தரிக்கப்பட்டு வருகிறது ... போராட்டத்திற்கல்ல, சமாதானத்திற்கும் தொழில் முன்னேற்றத்திற்குமே.

**டாடா ஸ்டீல்**

நாட்டின் பணிக்கே

TN

# உங்கள் அழகிற்கு இந்த ஒழுங்கான பராமரிப்பு அவசியம்

**சருமத்தை மென்மையாக்கும் இந்த க்ரீம் உங்கள் சருமத்தைச் சுத்தம் செய்வதுடன் அதை அழகுறச் செய்கிறது**

உங்கள் சருமப் பாதுகாப்பை அலட்சியம் செய்யாதீர்கள்! செழுமை வாய்ந்த பாண்ட்ஸ் கோல்டு க்ரீமின் ஒழுங்கான பாதுகாப்பு உங்கள் சருமத்தை பொலிவுடனும், வெண்மையுடனும் வைக்கிறது.

ஒவ்வொரு இரவிலும், பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை உங்கள் முகத்தில் அழுத்தித் தேயுங்கள். அதன் ஆழ்ந்து ஊடுருவிச் செல்லும் தன்மை, கண்களுக்குத் தென்படாத அழுக்கை அகற்றி, சருமத்தை முற்றிலும் சுத்தம் செய்கிறது. விடியற்காலையில் உங்கள் சருமம் எவ்வளவு புதுமையுடனும், சோபையுடன் கூடிய மென்மையுடனும் விளங்குகிறது என்று பாருங்கள்.

உங்கள் அழகைப் பாதுகாக்கிறது. நீங்கள் முகத்தைக் கழுவும் ஒவ்வொரு சமயமும், சருமத்தைப் பாதுகாக்கும் மதிப்புற்ற எண்ணெய் சத்துக்களை அகற்றி விடுகிறீர்கள். ஆனால் நீங்கள் பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் மூலம் உடனேயே இந்த இயற்கை சரும பாதுகாப்புகளை சுலபமாக மீண்டும் பெறுங்கள்.

இது உங்கள் சருமத்துவாரங்கள் காற்றோட்டமடைவதையும் வறண்டு போவதையும் தடுக்கவும், சருமத்தின் தன்மையை, மென்மையாயும் சேர்த்தியாகவும் வைத்திருக்கவும் செய்கிறது.




## பாண்ட்ஸ்

### கோல்டு க்ரீம்

P. 2798 (H)

# லாமாக்கள் விஜயம்

எஸ். வி. எஸ்.

இப்பொழுதெல்லாம் பத்திரிகைகளில் 'டலாய் லாமா' 'பஞ்சன் லாமா' என்று பெயர்கள் அடிபடுவதைப் பார்த்திருப்பீர்கள். 'யார் இவர்கள்? எந்த தேசம்?' என்றெல்லாம் பலர் மனத்தில் கேள்விகள் எழும். ஆகவே அவர்களைப் பற்றி இன்னும் கொஞ்சம் நன்றாகத் தெரிந்து கொள்ளப் பார்க்கலாமா?

உலகத்தின் ஜனத்தொகையில் ஐந்தில் ஒரு பகுதியினர் புத்த மதத்தை அனுசரிக்கிறார்கள். சீனா, ஜப்பான், பர்மா, இந்தோனேசா, திபெத் இப்படிப் பல நாடுகளில் புத்த மதமே மக்கள் மதமாக இருந்து வருகிறது. ஆகவே புத்தர்பிரானின் 2500 வது ஆண்டு விழா நடக்கும் இவ் வருஷத்தில், அந்நாடுகளிலுள்ள மக்கள் எல்லாம் புத்தர் பிரான் அருள் பொங்கிய நம் நாட்டையே நோக்கி வருவதில் அதிசயம் என்ன இருக்கிறது? புத்தர் பிறந்த மண்ணைத் தொட வேண்டும். அவர் பிறந்த ஊரைத் தரிசிக்க வேண்டும். அவர் ஞான ஒளி பெற்ற புனித ஸ்தலத்தைக் கண்ணாரக் காண வேண்டும் என்ற பெரும் ஆவல் அந் நாட்டு மக்களுக்கெல்லாம் ஏற்படுவது இயல்புதானே? இந்த உணர்ச்சியின் காரணமாகவே இப்பொழுது மேற்கூறப்பட்ட பல தேசத்தின் தலைவர்கள், பிரதிநிதிகள் பாரத நாட்டில் புத்தர் ஸ்தலங்களைத் தரிசித்துப் புனித யாத்திரை செய்ய வந்திருக்கின்றனர். அப்படி வந்தவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் இப்போது வந்துள்ள திபெத்தின் டலாய் லாமாவும், பஞ்சன் லாமாவும்!

ஒரு நாட்டில் ஆட்சி முறை ஜனநாயக முறையாக இருக்கலாம். கம்யூனிஸ்ட் முறையாக இருக்கலாம். எதேச்சாதிகார ஆட்சியாக இருக்கலாம். ஒரு அரசனைக் கொண்ட முடியாட்சியாக இருக்கலாம். ஆனால் ஒரு மதகுரு மக்களின் காவலராக இருக்கிறார் என்று கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். இந்த அதிசயம் உலகத்தில் ஒரே ஒரு நாட்டில் நிகழ்ந்து வருகிறது. இன்று நேற்றல்ல, பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அந்நாடுதான் திபெத்.

பாரத நாட்டின் வடஎல்லையிலே பரந்த, நீண்ட இமயமலைத் தொடர்களைக் காண்கிறோம். அந்த வெள்ளிப் பனிமலையின் மடியிலே திகழும் நாடு திபெத். பெரும்பாலும் ஏழை எளிய மக்கள் வாழும் தேசம். இன்றைய நவநாகரிகம் எட்டாத தேசம். அந்த நாட்டின் ஆட்சித் தலைவராகவும் அந்த மக்களின் மதகுருவாகவும் விளங்குபவர்தான் டலாய் லாமா. அவருக்கு நிர்வாகத்தில் துணையாக இருப்பவர் பஞ்சன்லாமா என்பவர்.

திபெத்தின் ஆட்சி முறையில் ஒரு ஜனநாயக தத்துவமும் ஒருமாதிரி தொழிற்படுவதைக் காணலாம்.

திபெத்தில் ஒரு டலாய் லாமா இறந்தால் உடனே அந்த மடத்திலுள்ள மற்றொரு தம்பிரான் பட்டத்துக்கு வருவதில்லை.

திபெத் மக்கள் ஆத்மாவின் அழிவற்ற தன்மையில் நம்பிக்கை கொண்டவர்கள். ஒரு மனிதன் இறந்தால், அவன் தன் உடலை மட்டும்தான் துறந்திருக்கிறான். ஆனால் அந்த உயிர் மாடாகவோ, வேறொரு மனிதனாகவோ மீண்டும் ஜென்மம் எடுக்கிறது என்ற நம்பிக்கை கொண்டவர்கள்.

திபெத் மக்கள், முதன் முதலில் தங்களை ஆண்டவர் தியானி போதிஸத்வர் எனப்படும் அவலோகதீசுவரர் என்னும் புத்தர் என்றும் அவர்தான் பல பிறவிகள் எடுத்து மீண்டும் மீண்டும் தொடர்ந்து தங்களை ஆட்கொண்டு ஆண்டு வருகிறார் என்றும் நம்புகிறார்கள். ஆகவே, அவர்கள் டலாய் லாமாவை அவலோகதீசுவரரின் அவதாரம் என்றே கருதுகிறார்கள்.

ஒரு டலாய் லாமா இறந்து விட்டால் அவர்கள் மற்றொரு டலாய் லாமாவைக் கண்டு பிடிப்பதற்குள் பல சிரமங்கள் படவேண்டியிருக்கிறது. இறந்துபோன அந்த உயிர் எந்தக் குடிசையில் பிறவி எடுத்திருக்கிறதோ, எந்த மாளிகையில் பிறவி எடுத்திருக்கிறதோ என்று தேசம் முழுவதுமே தேடவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு சமயம் இந்த டலாய் லாமா தேடு படலம் இரண்டு வருஷங்களுக்கு மேல்நடைபெறுகிறது! சில அறிகுறிகள் குறிப்புகள் மூலம் 'இந்தக் குழந்தைதான் டலாய் லாமா' என்று தீர்மானிக்கிறார்கள். இந்தக் குறிகள் பூரணமாகக் கொண்ட குழந்தை கிடைக்கவில்லை என்றால் சிரமம் தானே?

இப்பொழுது டலாய் லாமாவாக இருப்பவர், இரண்டு வருடங்களுக்கு மேல் தேடிக் கண்டு பிடிக்கப்பட்டவர். இவர்தான் இறந்துபோன டலாய் லாமாவின் மறுபிறவி என்று



பஞ்சன்லாமாவும் பாரதப் பிரதமரும்



டலாய் லாமாவும் உபஜனாதிபதியும்

தீர்மானிக்கப் பலசோதனைகள் நிகழ்த்தியிருக்கிறார்கள். அத்துடன் பல நிகழ்ச்சிகள் மூலம் இவர்தான் பழையவர் என்று முடிவு கட்டியிருக்கிறார்கள். அப்படி அவர்கள் தீர்மானிக்க உதவிய ஒரு நிகழ்ச்சியைப் பாருங்கள். இவர் குழந்தையாக இருந்தபோது, முதன் முதலாகப் பழைய டலாய் லாமா உபயோகப்படுத்திய பொருள்கள் வைக்கப்பட்டிருந்த அறைக்குக் கொண்டு வரப்பட்டார். அங்கே இரண்டு கைத்தடிகள் இருந்தன. குழந்தை முதலில் ஒரு தடியை எடுத்தது. எடுத்த சில விநாடிகளில் அதைத் தூர எறிந்து விட்டு அங்கிருந்த இரண்டாவது தடியை எடுத்துக் கொண்டு விளையாடியதாம். உடனே அங்கிருந்தவர்களுக்கெல்லாம் ஒரே குதூகலம் ஏற்பட்டு விட்டது. 'உண்மையான டலாய் லாமாவைக் கண்டு பிடித்து விட்டோம்' என்று மகிழ்ந்தார்கள். ஏனெனில் இரண்டாவது தடிதான் பழைய டலாய் லாமா உபயோகித்து வந்த தடி!

இப்படி எங்கோ பிறந்த குழந்தையை வளர்த்து, பயிற்சி அளித்துத் தங்கள் இஷ்ட தெய்வமாகவும், மதகுருவாகவும், ஆட்சித் தலைவராகவும் மேற்கொள்வது என்றால் அதில் ஜனநாயக தத்துவம் தொழிற்படுகிறது என்று ஏன் சொல்லக் கூடாது?

டலாய் லாமாவின் செல்வாக்கு புத்த மதத்தினரிடையே மிக அதிகம். ஆம், அவலோகதீசுவரரின் அவதாரம் என்று புத்த மதத்தைச் சார்ந்த மக்கள் கருதும்போது அவர் செல்வாக்கு அபரிமிதமாக வளர்ந்திருப்பதற்குக் கேட்பானேன்?

இப்பொழுது டில்லிக்கு வந்துள்ள ஆயிரக்கணக்கான வெளிநாட்டுப் புத்த மதத்தினர் இவர் பாதங்களைத் தொட்டுத் தொட்டு அஞ்சலி செய்தவண்ணம் இருக்கின்றனர். இப்படிப் பாதம் தொட்டு அஞ்சலி செய்யும்போது, அந்தப் பக்தர்களை டலாய் லாமா இரு கைகளாலும் அவர்கள் தலையைத் தொட்டு ஆசீர்வதிக்கிறாராம். இரு கைகளால் தீண்டப் பெறும் பாக்கியம் மிகமிக அபூர்வமாம். இத்தகைய அபூர்வமான பாக்கியம் தங்களுக்குக் கிடைத்ததே என்று மக்கள் பெரும் குதூகலத்தில் ஆழ்ந்திருக்கின்றனர். இவர் பாதங்களைத் தொடும் பாக்கியம் பெறாதவர்கள் அவர் ஏறிவந்த கோவேறு கழுதையின் பாதங்களைத் தொட்டு மனம் பூரிப்படைகிறார்களாம்!

* * *

இப்பொழுது நம் நாட்டுக்கு விஜயம் செய்துள்ள டலாய் லாமா பதினாலாவது டலாய் லாமா. டலாய் லாமா என்பது பெயர் அல்ல. லாமா என்றால் பிக்கு என்று பொருள். இவரது முழுப் பெயர் என்ன தெரியுமா? ஜெட்ஸன் ஜாம்பல் ஙவாங் லொஸாங் யிஷி டென்ஸிங் கியாட்ஸோ! (நாக்கில் சுளுக்கு ஏற்படவில்லையே!) இவருக்கு வயது இருபத்தொன்றுதான் ஆகிறது. பொதுவாக டலாய் லாமாக்கள் தங்கள் நாட்டை விட்டு வெளியேற மாட்டார்கள். உலகிலுள்ள புத்த மதத்தினர் டலாய் லாமா இருக்கும் லஹாஸாவுக்கு யாத்திரை வருவார்களே தவிர அவர்கள் தங்கள் இடத்தை விட்டு வெளி நாடுகளுக்குச் செல்வது கிடையாது. இவருக்கு முந்தியிருந்த பதின்மூன்றாவது டலாய் லாமா அவர் ஆட்சியில் நடைபெற்ற குழப்பம் காரணமாக இந்தியாவுக்கு வந்து டார்ஜிலிங்கில் சில நாட்கள் தஞ்சமடைந்திருந்தார். அவ்வளவே தவிர மற்றப்படி வெளியே சென்றது கிடையாது.

ஆனால் சமீப காலத்தில் திபெத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. திபெத் சீன அரசாங்கத்துடன் சார்பு கொண்ட நாடானதிலிருந்து அங்கு பல முற்போக்கான திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. திபெத்துக்கும் சீனாவுக்கும் நேர் தொடர்பு கொள்ளக்கூடிய நல்ல சாலைகள் போடப்பட்டுள்ளன. திபெத்தில் பள்ளிக்கூடங்கள் திறக்கப் பட்டிருக்கின்றன. மின்சார நிலையங்கள் ஏற்படுத்தப் பட்டுள்ளன. சிறு தொழிற்சாலைகளும் நிறுவப்பட்டு வருகின்றன. ஏன் லஹாஸாவில் ஒரு சினிமா தியேட்டர்கூட ஏற்பட்டு விட்டதாம். அப்படியானால் அந்த நாடு எவ்வளவு பிற்போக்காக இருந்திருக்கும் என்று ஊகித்துக் கொள்ளலாம்!

தற்போதைய டலாய் லாமா இளைஞர். பல விஷயங்களில் ஆர்வம் கொண்டவராகவுமிருக்கிறார். மத விஷயங்களிலும் ஆழ்ந்த ஞானமுள்ளவர் என்ற பெயர் எடுத்திருக்கிறார். ஆகவே இந்த டலாய் லாமாவின் தலைமையில் திபெத் மக்களின் பண்பாட்டுக்கு எவ்விதக் கெடுதலும் நேராத வகையில் பல முன்னேற்றத் திட்டங்கள் நிறைவேற்றி வைப்பார் என்று எதிர்பார்க்கிறார்கள்.

பாரத நாட்டுக்கும் திபெத்துக்கும் மத விஷயத்தில் மட்டுமின்றிப் பல வகையிலும் நெருங்கிய தொடர்பு உண்டு. அத்தொடர்பு டலாய் லாமாவின் பாரத விஜயத்தினால் இன்னும் அதிகரிக்கும் என்று எதிர்பார்க்க இடமிருக்கிறது. தமிழ் நாட்டுக்கு இந்தச் சமயத்தில் டலாய் லாமா விஜயம் செய்திருப்பது தமிழ் மக்களுக்கு ஓர் அரிய வாய்ப்பாகும்.

# தீமையகற்றிய தெய்வம்!

தூரத்தில் கரும் புகையைக் கண்டதும் மாடசாமி அசை போட்டுக் கொண்டிருந்த மாடுகளை எழுப்பி விட்டான்! மாலைப் பொழுதில் திருநெல்வேலியிலிருந்து வரும் பாஸஞ்சர் வண்டி குருமலை ரயில் நிலயத்தை நெருங்கிக் கொண்டிருந்தது. நாட்டாண்மைக்காரரின் வருகைக்காக வண்டியோடு காத்திருந்தான் அவன்.

அவனது மனத்திலே துடிப்பு!

ஐயனுத்தேவன் கொலை வழக்கில் முப்பது வாய்தாக்களுக்குப் பிறகு இன்றுதான் தீர்ப்பு கூறியிருப்பார்கள். கிராமத்திலிருந்தே இந்த முடிவையறிய எண்பது பேர்களுக்கு மேல் போயிருக்கிறார்கள். ''என்ன முடிவாச்சோ!'' என்பதை அறிவதில் மாடசாமிக்கு மிகுந்த அக்கறை இருந்தது.

நாட்டாண்மைக்கார முத்துலிங்கம் எல்லோருக்கும் முன்னால் மெதுவாக, தன் கைத் தடியின் பலத்தில் நடந்து வந்தார். மாடசாமியின் கண்களுக்கு இந்தத் தளர்ந்த நடையில் வெற்றி இருப்பதாகப்படவில்லை. அவருக்குப் பின்னால் கொள்ளிவேலுப் பிள்ளையைக் கீழ் வீட்டுச் சோணையா கைத் தாங்கலாக அழைத்து வந்து கொண்டிருந்தான்!

வேலுப்பிள்ளைதானே சர்க்கார் தரப்புக்கு முதல் சாட்சி!

''என்ன தம்பி..என்ன ஆச்சு!'' என்று ஆவலோடு கேட்டான் மாடசாமி, வண்டியிலிருந்து இறங்கி வந்த சிங்காரவேலுவிடம்.

''ஐயனுத் தேவனை விடுதலை செய்திட்டாங்க! போதுமான சாட்சியம் இல்லையாம்!'' என்ற செய்தி மாடசாமியின் இதயத்தைக் கலக்கியது.

மெதுவாக வண்டியின் பக்கம் நடந்தான். எவ்வளவு அலைச்சல்—எத்தனை பணச் செலவு.. எல்லாமே வீண்!

வேலுப் பிள்ளையை முதலில் வண்டியில் ஏற்றி இருந்தார்கள். அவருக்குக் குளிர் காய்ச்சலாம்.

''ஐயனுத் தேவன் விடுதலை ஆகி விட்டால் இவருக்குக் குளிர் காய்ச்சல் ஏன் வராது!'' நாட்டாண்மைக்காரர் வேலுப்பிள்ளையைக் கேலி செய்து கொண்டே வண்டிக்குள் ஏறி உட்கார்ந்தார்.

மாடசாமி வண்டிக்குள் திரும்பிப் பார்த்தான். நாட்டாண்மைக்காரர் நெற்றியை விரல்களால் அழுத்தியவாறு......வண்டிக் கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தார். வெளிப்படையாக விட்டுக் கொடுக்காமல் பேசினாலும், அவர் மனத்தில் எத்தகைய கவலை மூண்டு விட்டது என்பது அவனுக்குத் தெரியும். கடந்ததையாவது மறந்து நடந்து விடலாம். இனி என்ன நடக்குமோ என்பதில் அவருக்குப் பெரும் கவலை இருக்கத்தானே செய்யும்!

கிராமத்துக்கே பொதுவான பிரச்னைதான்!

ஒரு கொடியவன் தொலைந்து விட்டால் கிராமத்தின் தொல்லைகள் தீர்ந்து விடும் என்று எதிர்பார்த்தார். இந்த முயற்சியிலே தான் தமது முழு பலத்தையும் செலவிட்டார். அவர்தான் முன்னின்று சாட்சிகளை உருவாக்கினார்.

வழக்கு முடிந்து விட்டது.

ஊரறிந்த குற்றவாளி விடுதலையாகி விட்டான். இனி கிராமத்தில் என்ன அமைதி இருக்கப் போகிறது? தனக்கு எதிராகச் சாட்சி சொன்னவர்களையெல்லாம் பயமின்றி நடமாட விடுவானா ஐயனுத்தேவன்?

''அந்தப் பொண்ணு நாகம்மா..இதைக் கேட்டால் செத்தே போகும்!'' என்றார் வேலுப்பிள்ளை மெதுவான குரலில்.

ஐயனுவின் கூடப் பிறந்த அக்காள் மகள் தான் நாகம்மா!

ஐயனுவுக்கு எட்டு வயது நடக்கும் போதே தகப்பன் நல்லாண்டித் தேவன் கண்ணை மூடி விட்டான். மூத்த பெண் சினியம்மாளை உள்ளூரிலேயே கொடுத்திருந்தான்! சாகும்போது சினியம்மாளிடம்தான் ஐயனுவை ஒப்புவித்துச் சென்றான். அவளுக்கும் தம்பியின்மீது நல்ல அன்பு இருந்தது. ஆனால் சிறு வயது முதற்கொண்டே அவனது போக்கே வேறாக அமைந்து விட்டது. வீட்டிலும் சுற்றிலுமாகத்தான் வளர்ந்து வாலிபனானான். தம்பிக்காகப் பரிந்து கொண்டு வருவாள் சினியம்மாள். அவள் கணவன் மாயத் தேவனுக்கு எப்போதுமே ஐயனுவைக் கண்டால் கட்டோடு பிடிக்காது.

இந்தச் சமயத்தில் ரங்கூனிலிருந்து புதியதாகக் கிராமத்தில் வந்து குடியேறினான் ரத்தினம். எங்கெல்லாமோ அவர்கள் இருவரும் ஒன்றாகச் சுற்றினார்கள்! இறுதியிலே கலகம்! தம்பிக்கு ஐந்து வருஷம் கடுங்காவல் தண்டனை கிடைத்ததைக் கேட்டுச் சினியம்மாள் கதறி அழுதாள். சிறையிலே சென்று அவனைப் பார்த்தாள். உள்ளுக்குள், தன் மகளைக் கொடுத்துத் தம்பியைச் சம்சாரியாக்கினால் திருந்தி விடுவான் என்ற



ஆசையும் அவனுக்கு இருந்தது. இதை யெல்லாம் சொல்லி அழுதான்.

திரும்பியவள்—பத்து மாதங்களைப் படுக்கையிலேயே கழித்துவிட்டுப் போய்ச் சேர்ந்தாள்.

அதன் பிறகு இடைவிட்ட நான்கு வருடகாலமும் நாகம்மாளைக் கண்கலங்காமல் காப்பாற்றினான் மாயத்தேவன். ஆரம்பத்தில் மனைவி வழி சொத்து ஆறு குழி புஞ்சை நிலம் மட்டும்தான் இருந்தது. இரவும் பகலுமாகப் பாடுபட்டு அந்த நிலத்திலே கிணறு வெட்டித் தோட்டமாக்கினான். வீட்டைக் கெட்டிக் கட்டடமாகக் கட்டிக் கொண்டான். நிம்மதியாகப் பொழுது கழிந்து கொண்டிருக்கும் போதுதான் தண்டனை முடிந்து ஐயனு கிராமத்துக்கு வந்து சேர்ந்தான்.

ஊருக்குள் நுழைந்ததும் முதலில் மாமன் வீட்டுக்குச் சென்று—உடன் பிறந்தவளை நினைத்துக் கொண்டு. இரண்டு சொட்டுக் கண்ணீர் கூட விட்டான்.

மாயத் தேவன் முறைப்படி அவனைச் சாப்பிடச் சொன்னான்.

தலை நிமிர்ந்தபோது ஐயனுவின் கண்கள் ஆச்சரியத்தினால் விரிந்தன.

ஐந்து வருடங்களுக்கு முன், பாவாடை உடுத்தி எலிவால் பின்னலுடன்—துள்ளிக் குதித்துப் பள்ளிக்குச் சென்று கொண்டிருந்த நாகம்மாள் இப்பொழுது எழில் நிறைந்த கன்னியாக—அவன் முன்னால் தலை கவிழ்ந்து நிற்பதைக் கண்டு சொக்கிப் போனான்.

ஒரு வாரத்துக்குப் பிறகு ஒருநாள் காலைப் பொழுதில் ஒரு பட்டுப் புடவையுடன் வீட்டுக்கு வந்தான் ஐயனு. மாயத் தேவனும் திண்ணையிலேயேதான் உட்கார்ந்திருந்தான்.

"புடவை எடுத்தாந்திருக்கேன்....நாகம்மாளைக் கட்டிக்கச் சொல்லு!" என்று கூறி ஐயனு மாமன் பக்கத்தில் வந்து அமர்ந்தான்.

கிழவன் ஒன்றும் பேசவில்லை.

"நானும் இனிமேல் நல்லபடியாக இருக்கணும்னுதான் பார்க்கிறேன்! என்னைக்கு இருந்தாலும் நாகம்மா என்னுடைய சொத்துத்தானே!" என்று சொல்லி அடுத்த படியில் ஏறினான் ஐயனு.

கடைசியில் கிழவன் ஒரே பேச்சில் முடித்துக் கொண்டான்.

"அது அவளோடு போய்விட்டது! இப்போது எதையும் யோசித்துத்தான் செய்யணும்!" என்றான்.

ஐயனுத்தேவன் கொண்டுவந்த காகிதப் பொட்டணத்தோடு வேகமாகத் திரும்பிப் போய் விட்டான்.

• பிரச்னை வலுத்தது!

முறைப்படி பெண் கேட்பதற்குக் கூடக் கிராமத்தில் ஆள் பிடித்து அனுப்பி வைத்தான் ஐயனு. கிழவன் மனத்தில் இருந்ததைச் சொல்லி விட்டான். நாகம்மாள் ஐயனுவுக்குப் பயந்து வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்தாள்! வெளியே தலை காட்டினால் என்ன ஆகுமோ என்ற திகில்! அந்தக் கண்கள் அவளைப் பயமுறுத்திக் கொண்டே இருந்தன.

இந்தச் சந்தர்ப்பத்தில் நாட்டாண்மைக்காரர் இடையில் புகுந்தார். கிழவனும் அவரும் உயிருக்கு உயிரான நண்பர்கள்.

"என் மனசறிந்து அந்தப் பாவிப் பயலுக்குப் பெண்ணைக் கொடுக்கமாட்டேன்! அந்தப் பெண்ணுக்குப் பத்து நாட்களுக்குள்ளே கல்யாணத்தை முடிச்சாகணும்!" என்று முடிவாகச் சாதனை செய்தான் கிழவன்.

நாட்டாண்மைக்காரர் யோசனை செய்தார்; நாகம்மாளையும் வீட்டுக்கு வரச்சொல்லி நேரிலேயே கேட்டார். அவளது கண்ணீர் தான் அவருக்குத் துணிவைக் கொடுத்தது.

பெண்ணுக்குச் சம்மதம் இல்லாத போது அவளை வற்புறுத்தி ஐயனுவை மணக்கும்படி கூற முடியுமா?

கிராமம் முழுதுமே முன்னால் நின்று நாகம்மாளின் திருமணத்தை அவளது மனம் போல் நடத்தி வைக்க வேண்டும் என்ற உறுதியேற்பட்டது அவருக்கு! நாகம்மாள் ரகசியமாக அவரிடம் சொல்லியிருந்தாளோ என்னவோ! அவர் மருதமுத்துவையே அவளுக்குப் பொருத்தமான மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்தார். மருதமுத்து ஆணழகன்.

கல்யாணம் நிச்சயமான தினத்தில் ஐயனு ஊரில் இல்லை. இரண்டு தினங்களுக்குப் பிறகு வந்தவன் எதிர்பார்த்தபடி வம்புகள் எதுவும் செய்யவில்லை.

'தாய்மாமன் இல்லாமல் நிச்சயம் செய்து விட்டார்களே' என்று வருத்தப்பட்டானாம். தாய்வழிச் சீதனமாக அந்தப் பட்டுப் புடவையை ஆள் மூலமாக அனுப்பி வைத்தான். அவளும் உடுத்திக் கொண்டாள்.

திருமணத்தன்று அவனும் கூடவே இருந்தான். எல்லோருடனும் சிரித்துப் பழகினான். அவன் நடிப்பிலே தேர்ந்தவன் என்பதை அன்று யாரும் அறியவில்லை.



சோம.மகாதேவன்

அதன் பிறகு ஐயனு இரண்டு மாதங்கள் கிராமத்தில் பசுப் போல் திரிந்தான். உதட்டிலே உறவு இருந்தது. நெஞ்சிலே பொங்கிக் கிடந்த பகை தெரியாது போய் விட்டதே!

கிழவன் மாயத்தேவன்—திருநெல்வேலிச் சீமைக்கு மாடு வாங்கச் சென்றவன் திரும்பவேயில்லை. குருமலை வண்டிப் பாதைக்குப் பக்கத்தில் கிழவன் வெட்டுப்பட்டுக் கிடப்பதாக வந்து சொன்னார்கள். நாகம்மாள் அனலில் விழுந்த புழுப் போல் துடித்தாள். இரண்டு தினங்களுக்குப் பிறகு ஐயனுத் தேவனைக் கோவில்பட்டியில் கைது செய்தார்கள்.

வழக்கு நடந்தது. நாட்டாண்மைக்காரரே சாட்சிகளை உருவாக்கினார். ஆனால் வழக்கின் அடிப்படையில் பலமில்லை. கொலை செய்யப்படும் போது நேரடியாகப் பார்த்த சாட்சி இல்லை. வேறு தடயங்களும் கிடையா. கடைசியில் அவன் விடுதலையாகி விட்டான்.

வண்டி ஊருக்குள் நுழைந்தது.

அதற்குள் ஊருக்குப் பாதையில் நடந்து சென்றவர்கள் செய்தி சொல்லியிருக்க வேண்டும். ஆங்காங்கே ஆண் பெண் இருவரும்கூட்டமாக நின்று ஐயனுவின் கதையைத் தான் பேசிக் கொண்டிருந்தார்கள்.



நாட்டாண்மைக்காரரின் வீட்டில் நாகம்மாள் நின்று கொண்டிருந்தாள். வண்டியிலிருந்து நாட்டாண்மைக்காரர் இறங்கி வந்ததும் அவளது விம்மல் காதுகளில் விழுந்தது. அவரது கண்களில் நீர் பொங்கி வழிந்தது. மாயத் தேவனுக்குப்பின் இவர்தான் நாகம்மாளின் தகப்பன் என்று உலகம் சொல்லுமே!

''அழாதேயம்மா! நாங்கெல்லாம் இல்லையா உனக்கு! தர்மம் எப்பொழுதும் செத்துப் போகாது. குற்றம் செய்தவனைத் தெய்வம் தண்டிக்காமல் விடாது!'' என்று ஆறுதல் சொன்னார் நாட்டாண்மைக்காரர்.

''தெய்வம் இருந்தால்தானே கேட்கப்போகுது!'' என்ற வார்த்தைகள் நாகம்மாளிடமிருந்து குமுறலுடன் வெளி வந்தன.

★

நான்கு தினங்களுக்குப் பிறகு ஐயனுத் தேவன் கிராமத்துக்கு வந்தான். உருவத்திலே புதிய மாறுதல்! இடையில் வாயில் வேஷ்டி, மேலே சட்டை, வெண்பட்டுத் துண்டு! இருபுற கூரான மீசை. நடையிலே மிடுக்கு. பார்வையிலே அலட்சிய சுபாவம்! இவைகளோடு ஊருக்குள் நுழைந்தவனுடன் யாருமே பேசவில்லை.

முன் கூட்டியே அவனது வரவு தெரிந்து நாட்டாண்மைக்காரர் வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். கீழே ஒதுக்குப்புறமாக மாடசாமியும் வேறு இரண்டு பண்ணையாட்களும் நின்று கொண்டிருந்தனர்.

''உங்க கிட்டத்தான் பேசிட்டுப் போகலாமென்று வந்தேன்!'' என்றான் ஐயனு நாட்டாண்மைக்காரரிடம் நிமிர்ந்து பார்த்து.

''இனிமேல் என்னத்தைப் பேசப்போறே!'' என்றார் நாட்டாண்மைக்காரர் அவனைத் திரும்பிப் பாராமல்.

''எங்க மாமா வீட்டுக்கு நீங்கதானே ஒத்தாசையா நிற்கிறீங்க! அதனாலே அந்தக் குடும்பத்திலே வருகிற விவகாரத்தையும் நீங்கள்தானே தீர்த்துவைக்கணும்! நான் இப்பொழுது வந்தது எங்கள் அக்கா வீட்டுப் போன நிலத்தைப்பற்றிப் பேசுவதற்காக!''

''எந்த நிலம்?'' என்றார் நாட்டாண்மைக்காரர் விளங்காமல்!

''அதுதான் மந்தைத் தோட்டம்!''

''அதைப்பற்றி நீ என்ன பேசப்போறே? அதிலே மூன்று குழி நிலம் சீனியம்மா சீதனச் சொத்து! மாயத்தேவன் இரண்டாயிரம் செலவழிக்க அதிலே கிணறு வெட்டிப் பக்கத்து நிலங்களையும் வாங்கித் தோட்டமாக்கியிருக்கிறான்! இந்த நிலத்தைப்பற்றி நீ பேசுகிறதற்கு என்ன இருக்கு!'' என்றார் நாட்டாண்மைக்காரர் விட்டுக் கொடுக்காமல்.

''அந்தச் சீதனச் சொத்து மூன்று குழி நிலத்தைத்தான் சொல்லுகிறேன். எங்க அக்கா மகள் எனக்கு இல்லையின்னு போச்சு! நான் ஒதுங்கிக்கிறேன்! ஆனால்.... அந்த நிலத்திலே யாரும் பிரவேசிக்க விட மாட்டேன்!'' என்றான் ஐயனு நிமிர்ந்த குரலில்.

''சொத்துக்கு வாரிசு அந்தப் பொண்ணு இருக்கு!'' என்றார் நாட்டாண்மைக்காரர்.

''இதெல்லாம் ஆகாத பேச்சுங்க! எங்க அக்கா வம்சமே வேண்டாமுன்னு ஆயிட்ட பிறகு—அந்த வழி சொத்தையும் எனக்கு விட்டுவிட வேணுமில்லே!''

''கிணறு வெட்டியிருக்கிற தொகைக்கான செலவையும் ஒத்துக் கொடுக்க முடியுமா?'' என்று கேட்டுப் பார்க்கிறார் நாட்டாண்மை!

''அதிலே கிணறு வெட்டும்படியாக நான் சொல்லலையே!'' என்றான்.

''அதை ஒத்துக்கலையின்னு வேறே பேச்சுக்கே இடமில்லை!'' என்றார் நாட்டாண்மைக்காரர்.

''சுருக்கமா முடிச்சிட்டீங்களே... அப்போ இனிமேல் உங்களிடம் எனக்கு வேலையில்லை!''

ஐயனுத் தேவன் எழுந்தான்.

''எதுக்கும் ஊர் நாட்டாண்மைக்காரரிடம் சொல்லிக்கிறது நல்லது பாருங்க!'' என்று சொன்னவன் படிகளில் இறங்கினான்.

நாட்டாண்மைக்காரர் சிலைபோல் மௌனமாக உட்கார்ந்திருந்தார்.

★

கேப்பை தட்டுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தான் நாகம்மாளின் கணவன் மருதமுத்து. வாய்க்காலில் நின்று அவனோடு பேசிக் கொண்டிருந்த மாடசாமி சற்று முன்னர்தான் சென்றான்.

நாட்டாண்மையிடம் பேசிவிட்டுச் சென்ற பிறகு இரண்டு தினங்களாக ஐயனுத் தேவன் கிராமத்துக்குள்ளேயே வரவில்லை. இன்று காலையில் வந்திருக்கிறானாம். எதற்கும் எச்சரிக்கையாக இருக்கும்படி நாட்

டாண்மைக்காரர் சொல்லியனுப்பி இருக்கிறார். மாடசாமி வேறு தோட்டத்துக்கு வந்து போகிறான்.

மருதமுத்துவுக்கு வேலையே ஓடவில்லை. எப்போதுமே அவன் பதற்றக்காரன். அதிலும் நெஞ்சிலே பெரும் பாரத்தை ஏற்றி வைத்தது போலிருந்தது அவனுக்கு!

இனித் தொல்லைகளே இருக்காது என்று எண்ணியிருந்தபோது — ஐயனு விடுதலையாகி வந்து விட்டானே! அடுத்த விவகாரத்தையும் ஆரம்பித்து விட்டானே!

மருதமுத்து தண்ணீரைப் பாத்திக்குள் மடக்கிவிட்டு நிமிர்ந்து பாதையை ஏறிட்டுப் பார்த்தான்.

தூரத்தில் நாகம்மாள் வந்து கொண்டிருந்தாள். மதியச் சோறு வருகிறது. மருதமுத்து கமலையை நிறுத்தச் சொல்லி விட்டு மரத்தடியில் உட்கார்ந்தான். அவளும் பாத்திரத்தை இறக்கி வைத்துவிட்டு அமர்ந்தாள்.

"அவன் வந்திருக்கானுமில்ல!" என்று கேட்டான் மருதமுத்து, பழைய சோற்றையும் ஊறுகாய்க் கிண்ணத்தையும் முன்னால் இழுத்து வைத்துக் கொண்டு.

"ஆமாம்!" என்றாள் நாகம்மாள்.



"இந்தக் கிணற்றுக்கு வலை வீசியிருக்கான் போலிருக்கு!" என்று கேட்டவன் கஞ்சியைக் குடிக்க ஆரம்பித்தான்.

நாகம்மாள் எதிர்ப் பக்கம் திரும்பிக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். அவளது உள்ளம் பொருமிக் கொண்டிருந்தது. வரும் பொழுது 'நல்ல வழி பிறக்க' அவள் வேண்டாத தெய்வமில்லை.

அவன் சாப்பிட்டு முடிந்து கைகளைக் கழுவினான். நாகம்மாள் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு புறப்பட்டாள். "நான் போகிறேன்....சீக்கிரமாக வீட்டுக்கு வந்திடுங்க!" என்றாள் நாகம்மாள்.

"ராத்திரிக்கும் இங்கேதான் இருக்கணும். சோளக் கதிருக்குக் காவல் இருக்கணும்!" என்றான் அவன் அங்கிருந்தபடியே.

நாகம்மாள் போய் விட்டாள். கமலை இறைத்த பையனும் மாடுகளை ஓட்டிக் கொண்டு போய் விட்டான். மருதமுத்து மண்வெட்டியைக் கழுவிக் கொண்டிருந்தான். அப்போது பக்கத்து ஓடையிலிருந்து ஒற்றையடிப்பாதை வழியாக யாரோ வருவது போல் தெரிந்தது.

வருவது யார்!....ஐயனுவா....?

அவனது கண்கள் அந்தப் பக்கத்திலிருந்து திரும்பவில்லை.

"என்ன தம்பி, நீ மட்டும் தான் இருக்கிறாயா?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் ஐயனு. மருதமுத்து பேசவில்லை.

"எதற்குத் தம்பி அங்கேயும் இங்கேயும் பார்க்கிறாய்! எனக்கும் உனக்கும் என்ன பகையா? பகை யிருந்தாலும் மற்றவங்க வந்து உன்னை எத்தனை நாளைக்குக் காப்பாற்றப் போகிறாங்க! உன்னிடம் தனியாகப் பேசணும் என்றுதான் வந்தேன்!" என்றான். பிறகு "இப்படி உட்காரு!" என்று சொல்லிப் பக்கத்தில் கையைக் காட்டினான் ஐயனு. வார்த்தைகளின் தோரணை மருதமுத்துவை உட்கார வைத்தன.

"என்னிடம் என்ன பேசப் போறீங்க?" என்றான் மருதமுத்து சிறிது துணிச்சலுடன்.

"நீ தானே இப்பொழுது உடைமைக்காரனாயிருக்கிறே! நாளைக்கு இந்தச் சொத்து மேலே தாவா வந்தால் நீதானே முன்னாலே நிற்கணும்!" என்றான் ஐயனு.

"வம்பு வீட்டு வாசலுக்கு வந்தால் என்ன செய்யறது!" என்று கேட்டு விட்டு வாய்க்குள்ளேயே நாக்கைக் கடித்துக் கொண்டான் மருதமுத்து.

"ஆமாம். வீட்டு வாசலுக்கு வந்தால் விடக்கூடாது. உனக்கு 'வீடு வாசல்' எங்கே யிருக்கிறது? குடி வந்த வீட்டை நம்பி இறங்கக் கூடாதில்லே!"

வார்த்தைகள் மருதமுத்துவின் நெஞ்சிலே சூடேற்றியது. "நாகம்மாளுக்குத் தாலி கட்டி யிருக்கிறேன். அவளுக்குச் சொந்தமான சொத்தில் எனக்கும் உரிமையிருக்கு!" என்றான் மருதமுத்து. ஐயனுத்தேவன் வாய் விட்டுச் சிரித்தான்.

"நீ தாலி கட்டல்லே தம்பி. நாட்டாண்மைக்காரர் கட்ட வைச்சாரு! அவர் வீட்டிலே தானே பாதிப் பொழுது கழியுதாம் அவளுக்கு! நீ சுத்தமான பிறவி!"

மருதமுத்துவின் முகம் சட்டென்று மாறியது. எழுந்து சற்றுத் தள்ளிப் போய் நின்றான். ஐயனு தொடர்ந்தான்:

"உனக்கு நல்லதுக்குத்தான் சொல்ல வந்தேன். நாளைக்கு மறுநாள் இந்த மூன்று குழி நிலத்திலே நான் ஏர் கட்டப் போகிறேன். அந்த நேரத்திலே நீ ஊரிலே இருந்தால் நீதான் எனக்கு முன்னாலே நிற்கணும். இரண்டு நாட்களுக்கு எங்கேயாவது போய் விடு. நாட்டாண்மைக்காரர் வந்து தடுக்கட்டும், நான் பார்த்துக் கொள்கிறேன். அப்புறம் நீ வந்திட்ட பிறகு நான் ஏர் கட்டல்லே!" என்று கூறி முடித்தவன் எழுந்து புறப்பட்டான்.

மருதமுத்து திரும்பாமல் நின்று கொண்டிருந்தான்.

"சொல்றதைச் சொல்லியாச்சு! நல்லா யோசிச்சு முடிவு பண்ணிக்கோ!" என்று சொல்லி விட்டு நடந்தான் ஐயனு.

வெகுநேரம் வரையிலும் அங்கேயே இருந்தான் மருதமுத்து. பொங்கும் கடல் அலை போல் மனம் அலைந்தது. மருதமுத்துவின் நெஞ்சிலே கனம் ஏறியது.

ஊர் நன்றாக அடங்கி விட்டது.

வீட்டுத் திண்ணையிலே தனியாக உட்கார்ந்திருந்தான் மருதமுத்து. அதுவரையிலும் அவனோடு உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த நாகம்மாள் அப்பொழுதுதான் எழுந்து உள்ளே சென்றாள். அதுவரையிலும் ஐயனுத்தேவன் தோட்டத்துக்கு வந்து அவளோடு பேசியதைக் குறித்து அவன் சொல்லவே யில்லை. மனம் வேறு பக்கத்தில் மண்டிக் கிடந்தது. அவனுடன் பேசிக்கொண்டிருந்த ஒவ்வொரு நிமிஷமும் 'ஐயனு தோட்டத்துக்கு வந்ததைப் பற்றி அவனாகவே சொல்லுவான்' என்று எதிர்பார்த்திருந்தாள் நாகம்மாள். ஐயனுத்தேவன் மருதமுத்துவிடம் பேசிக் கொண்டிருந்து விட்டு ஓடை வழியாக இறங்கிப் போனதைக் கண்ணாலும் கண்டதாக அப்பொழுதே மாடசாமி அவளிடம் வந்து சொல்லியிருந்தான்.

மருதமுத்து நான்கு நாட்கள் ஊருக்குப் போய் வருவதைப்பற்றித் தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தான். 'கலகம் வரத்தான் போகிறது. ஊர் கமக்கட்டுமே! முடிவு தெரிந்து அடுத்த கட்டம் வருவதற்குள் திரும்பி வந்து விடலாம்' என்ற விதத்தில் அவனது நினைவுகள் ஓடிக் கொண்டிருந்தன.

"நாளைக்குக் காலையிலே ஊருக்குப் போய் விட்டு வரணும்!" என்று ஆரம்பித்தான் மருதமுத்து.

"இப்பொழுது ஊரிலே என்ன வேலை இருக்கு? நீங்க வருகிற வரைக்கும் நான் எப்படித் தனியாக இருப்பேன்! நானும் கூட வரட்டுமா?" என்று கேட்டாள் நாகம்மாள்.

"நீ எதற்கு? நாலு நாளையிலே திரும்பி வந்து விடுவேன்! உனக்குத் துணைக்குத்தான் நாட்டாண்மைக்காரர் இருக்கிறாரே!" என்றவன் ஒருச்சாய்த்துப் படுத்தான்.

அவள் அதற்கு மேல் அங்கே நிற்கவில்லை. பொங்கி வரும் அழுகையை அடக்க முடியாமல் திரும்பினாள். உணவு செல்லவில்லை அவளுக்கு. சமையல் அறையிலேயே முந்தியை விரித்துப் படுத்தாள். அழுது கொண்டே இருந்தாள்.

ஐயனுத்தேவன் தோட்டத்துக்கு வந்ததைப் பற்றித் தன் கணவன் தன்னிடம் சொல்லாமல் மறைக்கும் காரணத்தை நினைக்க நினைக்கப் பெரிதாகத் தோன்றியது.

அவன் நன்றாகத் தூங்கி விட்டான். அவள் அழுது கொண்டே இருந்தாள். இப்போது வெள்ளம் கரைபுரண்டு விட்டது. கொண்டவனும் அந்தச் சண்டாளனோடு சேர்ந்து விட்ட பிறகு இனி என்ன இருக்கிறது?

அவளுடைய உள்ளம் குமுறியது.

வாழ வேண்டும் என்ற ஆவலைப் பற்றியிருந்த பிடியும் தளர்ந்து விட்டது அவளுக்கு. இரவு பூராவும் அழுது கொண்டிருந்தாலும் யார் அவளது கண்ணீரைத் துடைக்கப் போகிறார்கள்?

"துணைக்கு நாட்டாண்மைக்காரர் இருக்கிறாரே!" என்ற மருதமுத்துவின் வார்த்தைகள் குறுக்கிட்டன. நாட்டாண்மைக்காரர் எதற்காகத் துணையிருக்க வேண்டும்!

அவளது உடம்பு நடுங்கியது. கண்ணீர் பெருக்கெடுத்தது. பாவிலே நஞ்சைக் கொட்டி விட்டானே பாவி!

அவள் எழுந்து உட்கார்ந்தாள். இப்போதே நடந்தால் விடிவதற்குள் அங்கே போய்ச் சேர்ந்து விடலாம். வண்டிப் பாதைக்குச் சற்றுத் தள்ளிக் கிழவன் விழுந்து கிடந்த இடம்! அங்கேயே மகளும் சாக வேண்டும்! எல்லோரும் அனுதாபத்தோடு பேசுவார்கள். கதையும் முடிந்துவிடும்.

சுவரிலிருந்து பல்லி யொன்று கிரீச்சிட்டது.

நாகம்மாள் எழுந்து இரேழியிலிருந்த விளக்கைத் தாண்டி விட்டாள். சற்று உயரத்திலிருந்த அட்டாலியில் கையை விட்டுத் துழாவினாள். மாடு கட்டிக் கழித்த துவண்ட நூல் கயிறு! அவன் தகப்பன் முறுக்கியது. அதை எடுத்து அவள் மடியில் வைத்துக் கொண்டாள்.

மருதமுத்து நன்றாக அயர்ந்திருந்தான். சிறிது நேரம் வரையிலும் அவனையே பார்த்துக் கொண்டிருந்தவள் குனிந்து கண்ணீரைத் துடைத்துக் கொண்டே அங்கிருந்து வேகமாக நடந்தாள்.

காட்டுச் சாமி மடம் சமீபித்து விட்டது. சுற்றிலும் கருவேல மரங்கள். நடுவிலே வண்டிப் பாதை. மரங்களின் நிழலிலே தடம் தெரியவில்லை. பாதை யோரமாகக் கிடந்த கொத்துமுள் அவளது காலிலே பாய்ந்தது. 'அம்மா!' என்று அலறிக் கொண்டு கீழே உட்கார்ந்து விட்டாள்.

மடத்தின் கீழ்த்திண்ணையில் நின்று யாரோ நெருப்புப் பெட்டியைப் பற்ற வைத்தார்கள். அந்த ஒளியில் முகம் அவளுக்கு மங்கலாகத் தெரிந்தது. இருட்டுக்குள் பீடியின் கங்கு பொட்டுப் போலப் படிகளில் இறங்கி வந்தது.

"யாரது?" என்ற அதட்டல்.

குரல் தெரிந்தது அவளுக்கு! ஐயனுத்தேவன்....!

அவள் பதற்றத்துடன் தடுமாறிக்கொண்டு பாதை வழியே ஓட ஆரம்பித்தாள்.

"யாரது? நிற்கிறாயா, இல்லையா?" என்ற குரல் அவளைத் தொடர்ந்து பிடித்து விட்டது. மேகங்கள் விலகி ஒளி பரவியது. "நாகம்மாளா?" என்று திகைத்து நின்றான் அவன்.

"இந்த நேரத்திலே எங்கே போகிறாய்?" என்று உரிமையோடு கேட்டான் அவன்.

"சாகிறதற்கு!"

"ஏன், சாகிற அளவுக்கு வெறுத்து விட்டாயா?" என்று கேட்டான் ஐயனு.

"ஆமாம்" என்றாள் அவள்.

கையிலிருந்த அரிவாளைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு நெருப்புக் குச்சியைப் பற்ற வைத்து — அந்த ஒளியில் அவளது முகத்தை நன்றாகப் பார்த்தான் ஐயனு!

அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டு பாதையில் நகர்ந்தாள்.

அவன் வழி மறித்து, "சாகிறதற்குக் கூட வழி நடக்கணுமா?" என்று கேட்டான்.

"என்னையும் இங்கேயே வெட்டிப் போடு. உன் பழி தீர்ந்து போகும்!" என்றாள் அவள்.

"இதுவரைக்கும் பெண் பிள்ளை மேலே என் கைபட்டதில்லை!" என்று சொல்லித் தொடர்ந்து வந்தான் அவன்.

"வயசானவங்க மேலேதான்படுமாக்கும்!" என்று ஆத்திரத்தோடு கேட்டாள் அவள்.

ஐயனு அவளுக்கு முன்னால் வந்து நின்று அவளை நடக்க விடாமல் நிறுத்தினான்.



எம். சிடி. முத்தையா செட்டியார் கல்லூரி ஆசிரியர் திரு எஸ். கே. ராமச்சந்திரன் அவர்கள் புதல்வி திருமதி ஜெயலக்ஷ்மிக்கும், கோயமுத்தூர் 'விம்கோ' டிப்போ மானேஜர் திரு கே. ஆர். சுப்பிரமணிய அய்யர் அவர்களின் புதல்வர் திரு கே. எஸ் ராமகிருஷ்ணனுக்கும் நவம்பர் 9-ந் தேதி சென்னையில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க, மணமக்கள்!

---

"மாமனைக் கொன்றது நான்தான்னு நினைச்சுக் கிட்டிருக்கே! நான் கொலை செய்திருந்தால் சர்க்காரிலே விட்டிடுவாங்களா?"

"விட்டதுனாலேதான் விவகாரம் வளர்ந்துக் கிட்டிருக்கு!" என்றாள் அவள் குமுறலோடு!

"எதற்கு விவகாரம் வளரணும்? நாம் என்ன தீர்த்துக் கட்டமாட்டமா? நீ மட்டும் சரியின்னு சொல்லு. யாரும் நம்மகிட்ட வர மாட்டாங்க? நானும் மனுசனாயிடுவேன். இதை உன்னிடம் சொல்லணும்னுதான் நினைச்சிருந்தேன். தானாகவே இப்பொழுது சமயம் வந்து விட்டது!"

"உன்னுடைய எண்ணம் என்றைக்கும் நடக்காது. வழியை விடு, நான் போகணும்!" என்று சொல்லி ஓட முயன்றாள் நாகம்மாள். அவன் தடுத்தான்.

"எங்கே போகணும்?"

"எங்கேயோ போறேன்!"

"அவ்வளவு ரகசியமா?" நடுங்கிக் கொண்டிருந்த அவளது கைகளைப் பிடித்தான். அவள் உதறி விட்டு, "பாவி!" என்று கத்தினாள். அவனது பிடி இறுகியது. அவனது கக்கத்தில் இருந்த அரிவாள் நழுவிக் கீழே விழுந்தது. வெறி கொண்டவள் போல் அவனைப் பின்னுக்குத் தள்ளினாள் அவள். அவன் சிரித்தான். ஆனால் சிரிப்பொலி "ஐயோ!" என்ற அலறலோடு முடிந்தது. அவன் சட்டென்று தரையில் சாய்ந்தான். வலது காலை இறுக்கிப் பிடித்துக் கொண்டான். அவள் திடுக்கிட்டுக் குனிந்து பார்த்தாள்.

நிலவொளியில் நீண்ட கரு நாகமொன்று பாதையின் குறுக்கே நெளிந்து கோவிலை நோக்கிச் செல்வதைக் கண்டு அவளது மெய் சிலிர்த்தது.

காலைப் பிடித்துக் கொண்டு உருண்டவன் வெறியோடு தலை நிமிர்ந்தான். சரேலெனப் பக்கத்தில் விழுந்து கிடந்த அரிவாளை எடுத்துக் கொண்டு பாய்ந்தான்.

அவள் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஓடிய நாகம் திரும்புவதற்குள் வெட்டு விழுந்தது. வால் முழுவதும் துண்டாகி விட்டது. மறு வெட்டுக்கு அவனது உடலிலே பலமில்லை. பாதையிலேயே குப்புற விழுந்தான் ஐயனு. பாம்பு ஓடிவிட்டது. வெட்டுண்ட வால் அவனது தலை அருகில் துள்ளிக் கொண்டிருந்தது.

பதற்றத்துடன் அருகில் ஓடினாள் நாகம்மா! அதே நேரத்தில் பின்னால் ஆரவாரம் கேட்டது. கையில் விளக்கோடு மாடசாமி முன்னால் வர, நாட்டாண்மைக்காரர், மருதமுத்து இன்னும் பலர் பின்னால் வந்து கொண்டிருந்தார்கள். அவள் கோவிலை நோக்கிச் சிலைபோல் நின்று கொண்டிருந்தாள். வந்தவர்கள் சுற்றிலும் கூடினார்கள். உருண்டு கிடந்த ஐயனுத் தேவனைப் பார்த்த திகைப்பில் ஒருவரும் பேசவில்லை. பக்கத்திலே அறுந்துபோன பாம்பின் வால் துடித்துக் கொண்டிருந்தது. நாட்டாண்மைக்காரருக்குக் கதை விளங்கியது. கோவிலை ஏறிட்டுப் பார்த்தார்.

ஐயனு புரண்டான். வாயிலே வெள்ளை நுரை. விழிகளில் நீலம் பூத்தது. உதடுகள் தொங்கி விட்டன.

நாட்டாண்மைக்காரர் அவனுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார். அவனது கண்கள் ஒரு முறை மூடித் திறந்தன.

"கிழவனைக் கொன்ற பாவம்!" என்று ஐயனு முணுமுணுத்தது நாட்டாண்மைக்காரருக்கும் நன்றாகக் கேட்டது. அவர் திரும்பிக் குதித்துக் கொண்டிருந்த பாம்பின் வாலைப் பார்த்தார்.

அதே பாம்புதான்! இரண்டு வருடங்களுக்கு முன் பனையேறி பாகப்பனை—ஒரு கிராமத்தையே தீயிட்டுப் பொசுக்கிய தீயவனை—தீண்டிய கருநாகம்தான்! இன்று தீமையே உருவான கொடியவனைக் கொத்தி விட்டது. தன் உடலையும் குறைத்துக் கொண்டது.

புற்றிலே படிந்திருந்த இரத்தத்தை இரு கைகளாலும் தொட்டுக் கண்களிலே ஒற்றிக் கொண்டார் நாட்டாண்மைக்காரர்.

மருதமுத்து நாகம்மாளிடம், அவளை வீட்டில் காணாது நாட்டாண்மைக்காரரிடம் பதறி ஓடிய விதத்தைத் தனியாகச் சொல்லிக்கொண்டிருந்தான்! ஐயனுத்தேவன் வழிமறித்த விதத்தை அப்போது அவள் சொல்லவில்லை.

"அந்தப் பிள்ளையைக் கூட்டிக்கிட்டு நீ வீட்டுக்குப் போ, மருதமுத்து!" என்று கோவில் வாசலில் நின்ற நாட்டாண்மைக்காரரின் குரல் கேட்டது.

கூட்டத்திலிருந்து பிரிந்து இருவரும் ஊரை நோக்கி நடந்தனர். மருதமுத்துவின் நடையிலே பயமில்லாத தெளிவு இருந்தது. இனி அவனுக்குக் கவலை ஏது!

அந்த வாலறுந்த கருநாகம்—அந்த வட்டாரக் குறிப்பின்படி—கூழையன் பாம்பு—இன்னும் அதே புற்றிலே குடியிருக்கிறது. இந்தக் கண் கண்ட தெய்வத்துக்கு வெள்ளிதோறும் பாலன்னம் கொடுக்க நாகம்மாள் தவறுவதே யில்லை. அது அவளுக்கு வாழ்வளித்துத் தீமையகற்றிய தெய்வமல்லவா!

"மாமா?''

''என்னடா அது!''

''இன்றைக்குச் சம்பளம் கட்டுவதற்குக் கடைசிநாள்!''

''அதற்கு என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?''

''சம்பளப் பணம் கட்ட வேண்டுமே?''

''கட்டேன். என்னிடம் ஏன் அதைச் சொல்லுகிறாய்?''

''என்ன மாமா, இன்றைக்கு ஒரு மாதிரியாகப் பேசுகிறீர்கள். உங்களிடம் சொல்லாமல் யாரிடம் சொல்லுவது? நீங்கள் சம்பளம் கொடுத்துத்தானே நான் கட்ட வேண்டும்?''

''இனிமேல் சம்பளம் கட்டுவதற்கு வேறு எங்கேயாவது ஏற்பாடு பண்ணிக் கொள். என்னால் உனக்குச் சம்பளம் கட்ட முடியாது.''

''என்ன மாமா, திடீரென்று இப்படிச் சொல்கிறீர்களே! நான் எங்கே போவேன்? உங்க ஒத்தாசையால்தானே போன வருஷம் முழுக்கப் படிக்க இந்த வருஷமும் நான்கு மாதச் சம்பளம் கட்டினேன்?''

''இனிமேல் காலணாகூடப் பெயராது. என்னைத் தொந்தரவு செய்யாதே.''

''வருஷ நடுவிலே வந்து இப்படிச் சொன்னால் எப்படி மாமா? மாசம் நாலைந்து ரூபாய் உங்களுக்கு ஒரு பிரமாதம் இல்லை, மாமா!''

''எனக்கு மட்டும் கொட்டி வச்சிருக்கிறதா, என்ன?''

''நடுப் படிப்பிலே திடீரென்று எப்படி மாமா, நிறுத்துவது!''

''சம்பளம் கட்டாவிட்டால் பெயரை அடித்து விடுவார்கள். படிப்பு நின்று போகட்டுமே. நீ படித்து என்ன ஆக வேண்டும்? பெரிய கலெக்டராக வரப் போகிறாயோ? எங்கேயாவது ஹோட்டலில் வேலை செய் நாலுகாசு கிடைக்கும்.''

''மாமா! இந்த மாசம் மட்டும் கொடுத்து விடுங்கள். இன்று சம்பளம் கட்டக் கடைசி நாள். அடுத்த மாதம் வேறு யார் காலிலாவது விழுந்து சம்பளம் கட்டி விடுகிறேன்.''

''அதெல்லாம் முடியாது. நான் சொன்னால் சொன்னதுதான். என் கையிலே



காக கிடையாது. என் பையனைக்கூடப் படிப்பை நிறுத்திவிடச் சொல்லப் போகிறேன். சம்பளம் கட்டச் சக்தியில்லை!''

''மாமா, திடீரென்று உங்களுடைய தங்க மான மனசு மாறிப் போனது என்னுடைய போதாத காலம்தான்.''

அம்பி போய் விட்டான்.

★

கிட்டத்தட்டப் பதினைந்து மாதங்களுக்கு முன்பு எனக்கு அந்த ஊருக்கு மாற்றல் ஆகியது. வீடு பார்த்துக் குடியும் வந்து விட்டேன். என் பிள்ளை பாலுவை இரண்டாவது படிவத்தில் சேர்த்து விட்டேன்.

அன்று பாலு வந்து சொன்னான் ஒரு செய்தியை.

அடுத்த வீட்டில் அம்பி என்று ஒரு பையன் இருக்கிறான். அவன் தாயார் பரம ஏழை. எங்கெங்கேயோ வேலை செய்து வயிற்றைக் கழுவி வந்தாள். ஐந்தாவது வகுப்பு வரையில் படித்து விட்டுப் பள்ளிக்கூடச் சம்பளம் கட்ட முடியாததால் படிப்பை நிறுத்தும்படி ஆகி விட்டது.

அடுத்த நாள் அம்பியே வந்தான்.

''மாமா! நீங்கள் மட்டும் கொஞ்சம் உதவி செய்தால் அதை ஜன்மம் உள்ள வரையில் மறக்க மாட்டேன். மாதா மாதம் பள்ளிக்கூடச் சம்பளம் கட்டி விட்டால் போதும்'' என்று கெஞ்சினான்.



அம்பி முதலாவது பாரத்தில் சேர்ந்து விட்டான். அவன் சம்பளத்தை நானே கட்டி வந்தேன்.

அம்பி அடிக்கடி பாலுவைத் தேடி வரும்போதெல்லாம் வீட்டில் நான் கேட்காமலேயே சில வேலைகளைச் செய்வான். அது எனக்கும் உதவியாக இருந்து வந்தது.

அந்த வருஷப் பரீட்சை முடிந்த பிறகு பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டன.

அம்பி முதல் பாரத்தில் எல்லாப் பாடங்களிலும் நூற்றுக்கு எண்பது வாங்கி யிருந்தான். இரண்டாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்த என் பையன் பாலுவோ மிச்ச மார்க் இருபதை எல்லாப் பாடங்களிலும் வாங்கி யிருந்தான்.

அம்பி இரண்டாவது பாரத்துக்கு வந்து விட்டான். பாலுவோ இரண்டாவது பாரத்தில் தோல்வியடைந்து அதே வகுப்பில் இருந்தான்.

இவ்வளவுக்கும் பாலுவுக்குப் பத்துரூபாய் கொடுத்து ட்யூஷன் வேறு வைத்திருந்தேன்.

பாலுவும் அம்பியும் ஒரே வகுப்பில் படிக்க ஆரம்பித்தார்கள்.

இரண்டாவது பாரத்தில் கால் வருடப் பரீட்சை வந்து முடிந்தது. அம்பி வகுப்பிலேயே முதல். பாலுவோ வகுப்பிலேயே கடைசி மாணவனாக இருந்தான்.

என் பிள்ளைக்கு இவ்வளவு செலவழித்து டியூஷன் வைத்தும் வகுப்பில் கடைசி. ஆனால் என்னிடம் சம்பளம் கேட்டு வாங்கிக் கட்டிப் படிக்கும் அம்பி வகுப்பில் முதல்....!

என் மனத்தில் அம்பியைப் பற்றி ஒரு பொறாமை. அது முதலில் ஒரு சிறிய விதையாக விழுந்து பத்தே நாட்களில் ஒரு பெரிய விஷ விருட்சமாகிவிட்டது.

அவன் பாலுவைத் தேடி வந்தாலே அவனை உள்ளே போகக்கூடாது என்று கட்டுப்பாடு செய்து வந்தேன்.

ஒன்றும் அறியாத பாலகனிடம் இவ்வளவு பெரியவனாகிய நான் இப்படி நடப்பது முறையல்ல என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் மனத்தில் பொறாமை உண்டாகி விட்டால் மற்றதெல்லாம் கண்ணுக்குத் தெரிவதில்லை யல்லவா?

ஒரு வாரம் சென்றது. சம்பளம் கட்டாததால் அம்பியைப் பள்ளிக்கூடத்தை விட்டு நிறுத்தி விட்டதாகப் பாலு சொன்னபோது மனத்தில் ஒரு திருப்தி. ஆனால் அவனைப் பள்ளிக்கூடத்தை விட்டு நிறுத்தி விட்டதால் பாலுவுக்கு முதல் வகுப்பில் பாஸாகிவிடப் போகிறதா, என்ன?

அடுத்த ஒரு வாரமும் சென்றது. அன்று விடுமுறை நாள். மாலை ஆறு மணி இருக்கும். அம்பி என் வீடு தேடி வந்தான்.

''மாமா!''

''உன்னைத்தான் வரக்கூடாது என்றேனே!''

''இல்லை மாமா, ஒரு முக்கிய விஷயம்.''

''தெரியும். உன்னைப் பள்ளிக்கூடத்தை விட்டு நிறுத்தி விட்டது தானே?....என்னை என்ன செய்யச்சொல்லுகிறாய்?''

''அதில்லை. வந்து...''

''உன் பேச்சு எதுவும் என் காதிலே ஏறாது. என்னைத் தொந்தரவு செய்யாதே.''

பத்து நிமிஷம் இப்படியே பேச்சில் சென்று விட்டது.

''நான் சொல்வதைக் கேளுங்கள், மாமா!''

''நீ போகப் போகிறாயா, இல்லையா? பிடித்துத் தள்ளட்டுமா?''

''தள்ளுங்கோ. வேண்டாம் என்று சொல்லவில்லை. நான் சொல்லப் போவதை மட்டும் கேட்டு விடுங்கள். அதைச் சொல்லாமல் போக என் மனசுக்கு இஷ்டமில்லை.''

''அப்படி என்னடா விஷயம்? சொல்லித் தொலையேன்.''

''இன்றைக்கு ஐந்து மணி இருக்கும். ஈசுவரன் கோவில் வாசலிலே நின்று கொண்டிருந்தேன். அப்போது சற்றுத் தள்ளி மூன்று பேர் பேசிக் கொண்டிருந்தார்கள். அதிலே உங்கள் பெயர் அடிபட்டது. கவனித்தேன். இன்றைக்கு இரவு எட்டு மணி அடித்ததும் ஒரு ஆசாமி உங்களிடம் வந்து உங்களால் ஒரு காரியம் ஆகவேண்டும் என்று சொல்லி நோட்டுக்களாக ஐம்பது ரூபாய் கொடுத்து

# மகத்தான விலைக் குறைவு

மிக நவீனமான 1956-ம் வருஷ ஸ்பெஷல் மாடல்கள். மிக மிக நேர்த்தியான மெஷின் & டிசைன் ஒவ்வொன்றும் 3 வருஷங்கள் உத்திரவாதம்

இலவசம்: ஏதாவது மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கைக் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு அலாரம் டைம்பீஸும், ஒரு கடிகார ஆர்டருக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் இனாம்.



**நெ. 1181 வாட்டர் புரூப் 10½ சைஸ்**

15 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 36/-
17 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 40/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 54/-
21 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 56/-
21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 64/-



**நெ. 1183 வளைவு வடிவம் 7¾ சைஸ்**

15 ஜுவல்ஸ் பிளைட் க்ரோம் 32/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 38/-
17 ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) 63/-



**நெ. 1185 தட்டை வடிவம் 10½ சைஸ்**

5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 19/-
5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு C/S 21/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 28/-
17 ஜுவல்ஸ் க்ரோம் கேஸ் 37/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 42/-



**நெ. 1186 லேடீஸ் 5¼ சைஸ்**

15 ஜுவல்ஸ் பின் லீவர் R/G 45/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 48/-
17 ஜுவல்ஸ் .. (20 மைக்ரோன்) 65/-
21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 68/-



**நெ. 1182 வாட்டர் புரூப் 8¾ சைஸ்**

15 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 40/-
17 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 44/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 54/-
21 ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 58/-
21 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 68/-



**நெ. 1184 டோனோ வடிவம் 7¾ சைஸ்**

15 ஜுவல்ஸ் பிளைட் க்ரோம் 34/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 40/-
17 ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) 65/-



**பாக்கெட் கடிகாரம்**

ஜுவல் உள்ளது 18/- — 15 ஜுவல்ஸ் 27/-

**அலாரம் டைம்பீஸ்**

3" டயல் அலாரம் ... 15/-
ஸ்மித் அலாரம் 4½" டயல் ... 18/-
உயர்ரக அலாரம் 5" டயல் ... 22/-
டபுள் பெல் 5" டயல் ... 18/-

**PIONEER WATCH CO.,** POST BOX NO. 11428, CALCUTTA-6

விட்டுப் போவார். அதிலே ஒரு உத்தியோகஸ்தர் கையெழுத்து போட்டிருப்பார். அந்த நபர் நோட்டுகளைக் கொடுத்து விட்டுப் போனதும் அந்த உத்தியோகஸ்தரும் இன்னொருவரும் வந்து உங்களிடமிருந்து நோட்டைக் கைப்பற்றி உங்கள் பேரில் லஞ்ச வழக்கு போடப் போகிறார்களாம். அவர்கள் பேசிக் கொண்டார்கள். அகப்பட்டுக் கொள்ளாதீர்கள், மாமா. ஜாக்கிரதை! அதற்காகத் தான் ஓடிவந்து சொன்னேன்!''

இதைச் சொல்லி விட்டு அம்பி வேகமாக ஓடிவிட்டான். நான் கல்லாய்ச் சமைந்தேன்.

எட்டு மணி ஆனதும் ஒரு நபர் வந்து என்னிடம் நாலு வார்த்தைகள் பேசிவிட்டு ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை வெளியே எடுத்தான்.

லபக்கென்று அவன் கையைப் பிடித்து. ''லஞ்சமா கொடுக்கிறாய்? வா, போலீசுக்கு!'' என்று அவனை வாசலுக்கு இழுத்துக் கொண்டு போனேன். அவன் அதை எதிர்பார்க்கவில்லை. அவன் முகம் பேய் அறைந்தது போல் ஆகிவிட்டது.

''ஐயோ! என்னை விட்டு விடுங்கள். இனிமேல் இதுமாதிரி வழிக்கு வரமாட்டேன்'' என்று திமிறிக் கொண்டு ஓடிவிட்டான்.

அப்பாடா! எப்படிப்பட்ட ஆபத்தில் இருந்து தப்ப வைத்து விட்டான் அம்பி. அவன் மட்டும் சொல்லாதிருந்தால் நானும் கை நீட்டி அந்தப் பணத்தை வாங்கியிருப்பேன். உத்தியோகம் தொலைந்துஜெயிலுக்கும் போயிருப்பேன் அல்லவா?

'அப்படிப்பட்ட பேராபத்திலிருந்து காப்பாற்றிய அந்தப் பாலகனுக்குப் போய்த் துரோகம் செய்தோமே!' என்று மனச்சாட்சி உறுத்தியது.

உடனே அம்பியைக் கூப்பிட்டு அனுப்பினேன்.

''அம்பி! நாளைக்கு வா! சம்பளப் பணம், அபராதத் தொகை எல்லாம் கொடுக்கிறேன், கட்டி விட்டுப் படி!'' என்றேன்.

''ரொம்ப வந்தனம், மாமா! இனிமேல் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்க மாட்டேன்.



## தக்கர் பாபா ஜயந்தி



கடந்த 29-11-56 வியாழக்கிழமை யன்று மாலை சென்னை தக்கர் பாபா வித்தியாலயத்தில் தக்கர் பாபா தினம் வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. ராஜாஜி அவர்களும் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரானும் விழாவில் கலந்து கொண்டு தக்கர் பாபாவின் தன்னலமற்ற தொண்டு பற்றி விரிவுரை நிகழ்த்தினார்கள். தக்கர்பாபா ரிஷியைப்போல் பற்றற்ற வாழ்க்கை நடத்தியவாறு ஹரிஜனங்களுக்குச் சேவை செய்தார் என்றும், மகாத்மாவின் அந்தரங்க நண்பர்களில் மிகவும் முக்கியமானவர் என்றும் ராஜாஜி கூறினார். தக்கர்பாபா வித்தியாலயத்தின் காரியதரிசி ஸ்ரீ எல். என். கோபாலசாமி பேசுவதையும், விழாவுக்கு வந்திருந்தவர்களையும், அன்று நந்தனார் நாடகத்தில் நடித்த தக்கர் பாபா வித்தியாலய மாணவர்களையும் படத்தில் காணலாம்.

உங்களைப் பார்த்து விட்டுப் போனதும் தலைமை ஆசிரியர் கூப்பிட்டு அனுப்பினார். போனேன். நன்றாகப் படிக்கும் ஆறு மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கும்படி சர்க்காரிடமிருந்து உத்தரவு வந்திருப்பதாயும், அதனால் எனக்கு இந்த மாதம் கட்ட வேண்டிய சம்பளத்தை அபராதம் போட்டு அவரே கட்டி விடுவதாயும் நாளைக்குப் பள்ளிக்கூடத்துக்கு வரும்படியும் சொன்னார். என்ன இருந்தாலும் போனவருஷம் முழுவதும் நீங்கள் சம்பளம் கொடுத்துப் படிக்க வைக்காமல் இருந்திருந்தால் நான் பள்ளிக்கூடத்தில் சேர்ந்திருக்க முடியாது. அப்பொழுது சேர்ந்ததால் தான் இப்போது ஸ்காலர்ஷிப்பும் கிடைத்தது.''

பன்னிரண்டு வயதுப் பையனுக்கு உள்ள விவேகம்கூட எனக்கு இல்லாமல் போய் விட்டதே என்று வருந்தினேன்.

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 57

"உனக்கு ஏற்பட்டுள்ள காரியத்தைச் செய். அந்தக் காரியத்தில் உனக்கு உண்டாகக் கூடிய பயனைப் பற்றிய எண்ணத்தைத் துறந்து விட்டுச் செய். லாபத்தை விரும்பாமல் பணிசெய்." இதுவே கீதையின் உபதேசம்.

கீதையின் சாரத்தைச் சந்தேகமறச் சொல்லி விட்டேன். 'நான் செய்யாமை விரதம் பூண்டேன்' என்று ஒருவன் ஆரம்பித்தால் அவன் மீளமாட்டான். செயலைத் துறக்காமல் பயனைமட்டும் துறந்து வாழ்க்கை நடத்துபவன் உயர்வான்.

பயனைத் துறத்தல் என்றால் கவனம் செலுத்தாமலும் அக்கறையில்லாமலும் செய்வதல்ல. இன்னது செய்கிறேன், அதனுடைய விளைவு என்ன, என்ன சாதனங்களைக் கொண்டு செய்கிறேன், என்னுடைய சக்தி எவ்வளவு என்று இவற்றை யெல்லாம் கவனித்தே காரியங்களைச் செய்ய வேண்டும். செயலுக்கு வேண்டிய சக்தி, செய்வதற்கு வேண்டிய சரியான சாதனங்கள், செயலின் விளைவைப் பற்றிய அறிவு, இவை யெல்லாம் ஒன்று சேரக் காரியத்தைச் செய்ய வேண்டும். ஆனால் அந்தக் காரியத்தின் லாபத்தைத் தனக்கென்று வேண்டாமல் செய்ய வேண்டும். லாபத்தைக் கோராமலிருந்தாலும் செய்ய வேண்டியதைக் குறைவின்றிக் கவனமாகச் செய்ய வேண்டும். இப்படிச் செய்தால்தான் கீதையில் சொல்லியபடி பயனைத் துறந்ததாகும்.

பலனைத் துறந்துவிட வேண்டும் என்றால், செய்யும் செயலின் நல்லவிளைவைத் தள்ளிவிட வேண்டும் என்பது அல்ல. கீதையில் இப்படி எங்கும் சொல்லப்படவில்லை. விளைவின் லாபத்தை அடைய வேண்டும் என்கிற ஆசை உள்ளத்தில் வேலை செய்யலாகாது. அவ்வளவே. உண்மையில் லாபத்துக்கு ஆசைப்படாதவன்தான் பதின்மடங்கு லாபமடைகிறான். இந்தக் காரியம் எப்படி முடியுமோ என்று கவலைப்பட்டுக் கொண்டு செய்கிறவன் காரியத்தைச் சரியாகச் செய்ய மாட்டான். ஆசையும் கவலையும் சாமர்த்தியத்தைக் கெடுக்கும். கவலைப்படுகிறவன் பொறுமை இழப்பான். கோபமும் வந்து சேரும். தவறான முறைகளைக் கைக்கொள்ளச் செய்யும். நம்பிக்கையின்றி இதையும் அதையும் செய்து கொண்டு போவான். செயலின் முடிவைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டு செய்தால் இவ்வாறெல்லாம் நேரும். இது எப்படி முடியும் என்கிற கவலையானது வேலையை ஒரு மனத்தோடு செய்ய இடம் கொடுக்காது. தர்ம மார்க்கத்திலின்று பிறழவும் தோன்றும். ஒரு பயனை அடைவதற்காக எதையும் செய்யலாம். நியாயம் அநியாயம் என்று பார்க்க வேண்டியதில்லை என்கிற தவறான கொள்கையில் கொண்டு போய் விடும்.

ஒரு பயனை அடைய வேண்டும் என்கிற ஆசை உள்ளத்தைக் கவர்ந்தால் அது மனிதனைக் கெடுத்து விடும் என்கிற அநுபவத்தைக் கொண்டு கீதையில் வாழ்க்கைக்குச் சரியான மார்க்கம் காட்டப்பட்டிருக்கிறது: பயனைத் துறத்தல் என்கிற மார்க்கம். அதுவே சரியான மார்க்கம் என்பது கீதையில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. உலக வாழ்க்கைக்கும் சாஸ்திரத்தில் சொல்லப்படும் தர்மத்துக்கும் சம்பந்தமில்லை, அறத்தைப் பின்பற்றினால் லௌகிக வாழ்க்கை நடத்த முடியாது என்றெல்லாம் பலர் எண்ணுவது தவறு. வியாபாரத்துக்கும் சாஸ்திரத்துக்கும் வெகு தூரம். சாஸ்திரம் மோட்ச சாதனமாகும். உலக வாழ்க்கைக்கு ஒவ்வாது என்று பலர் பேசி வருவதைக் கேட்டிருப்பீர்கள். இந்த வாதம் தவறு என்று அதிலுள்ள பிழையைக் கீதாசாரியன் நன்றாக விளக்கிக் காட்டியிருக்கிறான். அது என்னுடைய உறுதியான அபிப்பிராயம். உலக வாழ்க்கைக்கும் மோட்ச சாதனத்துக்கும் வெவ்வேறு வழி என்று எண்ணுவது தவறு. உலக வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டிய எல்லாக் காரியங்களுமே அறத்தின் வழியில் செல்ல வேண்டும் என்பதைக் கீதை வற்புறுத்துகிறது.

சாதாரணமான தினசரி வாழ்க்கையில் செய்ய முடியாதது கீதையில் சமயாசாரமாகச் சொல்லப்படவில்லை. பற்று இல்லாமல் செய்யக்கூடிய காரியங்களைத்தான் மனிதன் செய்ய வேண்டும். அப்படிச் செய்ய முடியாத காரியங்களைச் செய்யலாகாது. விட்டுவிட வேண்டும். கொலையும், பொய்யும், விபசாரமும் பாவங்களாகும். பற்று நீக்கி வாழ்க்கை நடத்தினோமானால் இந்தப் பாப காரியங்களைச் செய்யத் தோன்றாது. எளிய வாழ்க்கையும் சாந்தமும் அடைவோம்.

இவ்விதமாகக் கீதையின் பொருளை ஏற்றுக் கொண்டு யோசித்ததில் சத்தியமும் அஹிம்சையும் கீதையில் உபதேசிக்கப்பட்ட மார்க்கத்தின் பயனைக் கண்டேன். லாபத்தை விரும்பாமல் பணியைச் செய்கிறவனுக்குப் பொய் சொல்ல வேண்டிய அவசியமே நேரிடாது. ஒரு பயனை அடைந்து லாபம் பெற வேண்டுமென்று விரும்பினால்தான் பொய்யிலும் பலாத்காரத்திலும் மனிதன் இறங்குகிறான்.

சிறந்ததை
அறிவோர்
சொல்வது:

# துணிகளில் சிறந்தவை
# பின்னியின் துணிகள்

கலை, சங்கீதம் அல்லது அன்றாட விஷயங்கள், எதுவாயினும், சிறந்ததை தவறில்லாமல் தேர்ந்து கொள்ளும் திறமை பெருகுகின்றது. கடந்த நூறு வருஷங்களாக பின்னியின் துணிகளையே கேட்டு வாங்குபவர்கள் அப்பேர்ப்பட்டவர்களே.

பின்னியின் துணிகள் தனிச் சிறப்பு வாய்ந்தவை என அவர்கள் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். பின்னியின் துணிகளின் தனிச் சிறப்பிற்குக் காரணம், அனுபவம், ஆராய்ச்சி, மற்றும் எதிலும் சிறந்த துணிகளையே தயார் செய்வதென்ற உறுதியான கொள்கை, இவைகளே.

தாராதரம் தெரிந்தவர்கள்
பின்னியின் துணிகளையே
தேர்ந்தெடுக்கிறார்கள்!





தி பக்கிங்ஹாம் அண்ட் கர்னாடிக் கம்பெனி லிட்.
தி பெங்களூர் உல்லன், காட்டன் அண்ட் ஸில்க் மில்ஸ் லிமிடெட்
நிர்வாகிகள் : பின்னி அண்ட் கம்பெனி (மதராஸ்) லிமிடெட், மதராஸ்

BY. 3461

வெள்ளித் திரை

# மறு மலர்ச்சி

## காந்தன்

"மிஸ்டர் காந்தன், உங்களை ஒரு கேள்வி கேட்க வேண்டும் என்று ரொம்ப நாட்களாக ஆசை. ஒரு நல்ல படம் தயாரிப்பதற்கு என்னென்ன அம்சங்கள் தேவை?" என்று என் நண்பர் ஒரு நாள் என்னைக் கேட்டார்.

"சின்னக் கேள்வி; ஆனால் பெரிய பதில் கூற வேண்டும். உங்களுக்கு இந்தக் கேள்வி கேட்கத் தோன்றியதனால் ஒரு பயனும் இல்லை."

"ஏன் இல்லை? என் கேள்வியினால் பயன் இல்லா விட்டால் போகட்டும். நீங்கள் அதற்குச் சொல்லும் பதிலினால் அந்தத் தொழிலுக்குப் பயன் உண்டல்லவா?"

"நீர் ஒரு விடாக்கண்டர். ஒரு படம் வெற்றியடைய வேண்டுமானால் நல்ல கதையாயிருந்தால் மட்டும் போதாது. விறுவிறுப்பான அடுக்குமொழியில் வசனம் அமைந்துவிட்டாலும் போதாது. சிறந்த நடிகர்கள், நக்ஷத்திர நடிகைகள் இருந்தாலும் போதாது. கத்திச்சண்டை, குத்துச் சண்டை முதலியவைகளினாலும் ஒரு படம் வெற்றி யடைந்து விடாது. நிறைய ஹாஸ்யம் இருந்தாலும் படம் வெற்றி பெற்றுவிடும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. புதிய கருத்துக்களைப் புகுத்துவதினாலும் பலன் ஏற்பட்டு விடும் என்று சொல்லிவிட முடியாது..."

"பின்பு என்னதான் வேண்டும்?"

"ஒரு படாதிபதியின் மூளையில், 'ஒரு நல்ல படம் தயாரிப்பதற்கு என்னென்ன அம்சங்கள் தேவை' என்னும் கேள்வி உதயமாக வேண்டும். பிறகு, டைரக்டர், புகைப்படக் கலைஞர், ஒலிப்பதிவாளர், ஒளிப்பதிவாளர் - முதலிய கலை நுணுக்கத் துறையினர்களுக்கெல்லாம் இதே கேள்வி உதிக்க வேண்டும். அப்பொழுது தான் சினிமாத்துறையில் நல்ல படங்களை எதிர்பார்க்க முடியும். பிறகு அந்தத் துறையில் மறுமலர்ச்சியே ஏற்பட்டு விடும்."

"மறுமலர்ச்சி என்றதும் நினைவு வருகிறது. ஆனந்தா பிக்சர்ஸாரின் "மறு மலர்ச்சி" படம் பார்த்தீர்களா, ஸார்? அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் சொல்லுங்கள்!"

"மறு மலர்ச்சி" படத்தில் முக்கியமாக ஏதாவது கூற வேண்டுமானால் கதை அம்சத்தைத்தான் கூற வேண்டும்.

ஆடம்பர வாழ்வின் அட்டகாசத்தை எடுத்துக் காட்டும் கதை; வறட்டுக் கௌரவம்; போலி அந்தஸ்து இவைகளினால் அவல நிலையை அடைந்து விட்ட ஒரு குடும்பத்தைச் சித்திரிக்கும் கதை; குடிசைத் தொழிலின் உயர்வை விளக்கும் கதை. நல்ல படிப்பினையைக் கொண்ட கதை.

ஒரு ஏழை ஆலைத்தொழிலாளியின் மரணத்தில் ஆரம்பமாகிறது திரைக் கதை.

ராஜம்மா: (செல்லப் பெயர் ராஜா) இறந்த தொழிலாளியின் அநாதை மகள். ஆலையில் கூலிவேலை செய்து பிழைக்க முற்பட்டும் ஆலை மானேஜரின் சபல சித்தத்தினால் வேலையைத்

துறந்தவன்; எதிர்பாராத வண்ணம் அவனுக்கு ஹோட்டலில் சேகரின் நட்பு கிடைக்கிறது.

சேகர்: ஆண் வேஷத்தில் இருந்த ராஜம்மாவிடம் அன்பு காட்டியதோடு ராஜாவுக்குக் காதல் பாதையில் வழியும் காட்டி அவள் கரம் பற்றியவன். தந்தையின் கோபத்துக்குப் பயந்து மனைவியைக் கைவிடாதவன்.

மாணிக்க முதலியார்: சேகரின் தந்தை. போலிக் கௌரவத்தில் மயங்கிய மனிதர். கடன் வாங்கியாவது ஆடம்பரமாக வாழ வேண்டும் என்று ஆசை கொண்டவர்.

ரஜினி: சேகரின் தங்கை. ஆடம்பர வாழ்வில் மோகங் கொண்டவள். அயோக்கியன் பிரஸாத்தை நம்பி வாழ்க்கைப்பாதையில் வழுக்கி விழுந்த இளம் பெண். தன் தீய செயலை மறைக்க அண்ணியின் நடத்தைக்கு மாசு கற்பித்து அவளை வீட்டை விட்டுத் துரத்தியவள். இறுதியில் உறுதியுடன் நீதிமன்றத்தில் உண்மையைக் கூறி ஒரு நிரபராதியின் உயிரைக் காப்பாற்றியவள்.

ஆபீஸ் பியூன் கந்தப்பா: சேகரிடம் அளவு கடந்த அன்பு பாராட்டியவன்; சேகர் ஜெயிலுக்குப் போகக் காரணமாயிருந்தவன்.

''வாழ்விலே ஒரு நாள்'', ''பாசவலை'' முதலிய படங்களில் வீட்டை இழந்து, நாட்டை இழந்து, பதியைப் பிரிந்து, பட்டினி கிடந்து, கண்ணீர் விட்டுப் பல துன்பங்களில் உழன்று பழக்கப்பட்டுப் போன ஜி. வரலக்ஷ்மிக்கு ராஜம்மாவாக இந்தப் படத்தில் நடிப்பதற்குப் புதியதாகக் கற்றுக் கொள்ளுவதற்கு ஏதும் இல்லை. பழைய ரிக்கார்டுகளைப் புரட்ட வேண்டியதுதானே! மேற்கூறிய பட விமர்சனங்களில் வரலக்ஷ்மியைப் பற்றி நான் எழுதின ரிக்கார்டுகளைப் புரட்டினாலே போதும். நன்றாய்த் தெரிந்துகொள்ளலாம்.

சேகராக நடித்த ஸ்ரீராம் பாதகமில்லை. பிரமாதமாக நடிப்பதற்கு இந்தப் படத்தில் அவருக்கு அதிக இடமும் இல்லை. பிரபல ஆந்திர நடிகரான சி. எஸ். ஆர். ஆஞ்சநேயலு மாணிக்க முதலியாராக நடித்து வெளுத்துக் கட்டி விட்டார். போலிக் கௌரவம் பாராட்டும் கட்டங்களில் அவர் நடிப்பு போலியாக இல்லை! கஷ்டம் தாங்காமல் ''ஹரே ஸ்ரீ ராமா!'' என்று கதறியபோது கஷ்டமாயில்லை. மிகவும் இயல்பாயிருந்தது.

ஈ. வி. சரோஜா ரஜினியாகத் தோன்றி, நன்றாக நடித்தார். சலங்கைச் சிரிப்புடன் கல்லூரி மாணவியாகவும், கள்ளப் பார்வையுடன் காதலியாகவும், துள்ளும் நடையுடன் நடன மங்கையாகவும், விரித்த கூந்தலுடன் வீராங்கனையாகவும் நடித்து இந்தப் படத்தில் நல்ல பெயரைத் தட்டிக் கொண்டு விட்டார்.

வங்காசத்தியம் கந்தப்பாவாக நடித்துப் படத்துக்கு உயிரூட்டியிருக்கிறார்.

பிரஸாதாக நடித்த எம். என். நம்பியார் படம் பார்ப்பவர்களுக்குப் புதியவரல்ல; அவரது 'வில்லன்' நடிப்பும் புதியதல்ல. எத்தனையோ படங்களில் எத்தனையோ பெண்களிடம் வம்பு பண்ணி வகையாக மாட்டிக் கொண்டிருக்கிறார். இந்தப் படத்தில் உயிரையே விட்டு விடுகிறார்!

'' விந்தை மிகுந்த உலகமடா — பெரும்
விசித்ரமான சமூகமடா ''

என்ற பாட்டுத்தான் திரைக்கதையின் குறிக்கோள். அந்தப் பாட்டைப் பலமுறை பாடி நன்கு பயன்படுத்தியிருக்கிறார்கள்.

இந்தப் படம் ''மேலுக் கொலுப்பு'' என்ற தெலுங்குப் படத்தின் தமிழாக்கம்.

படப்பிடிப்பில் விசேஷ உத்திகள் எதுவும் கையாளப்படவில்லை. ஒலிப்பதிவு நன்றாயிருக்கிறது. சாதுர்யமான டைரக்ஷன் இருப்பதாகவும் கூற முடியாது.

'' மறு மலர்ச்சி '' படத்தைப் பற்றிய நம் அபிப்பிராயம்: 'ஹரே ஸ்ரீ ராம்!'



# சிஸர்ஸ்

சிகரெட்டுகள






## 24. பகைவனுக்கருள்வாய்!

அன்று மாலை வழக்கம் போல் ஆற்றங்கரைக்குச் சென்று வருவதாக மீனாச்சியிடம் சொல்லிவிட்டு எலிக் கோட்டையிலிருந்து கிளம்பிய அஞ்சுகமும் விஜயரங்கனும் இருட்டுகிற நேரத்துக்கு மேகராஜபுரத்தை அடைந்தனர். அவர்கள் வரும்பொழுதே பக்கத்துக் கிராமமாகிய புன்னையூர் போலீஸ் தாணாவில் குறத்தி மீனாச்சியிடம் மேகராஜபுரத்தில் காணாமற் போன நகைகள் இருப்பதைச் சொல்லி, உடனடியாக அதைப் பற்றி விசாரிக்க ஏற்பாடுகள் செய்தனர்.

அஞ்சுகமும் விஜயரங்கனும் பார்வதி அம்மாள் வீட்டுக்கு அருகில் வந்து தோட்டத்து வேலிக்குச் சமீபமாக உள்ள மரத்தடியில் ஒளிந்து கொண்டனர், சொக்கன் அந்த வீட்டை விட்டு எப்பொழுது வெளியே வருவான் என்பதை எதிர்பார்த்து. அதிருஷ்டவசமாக அப்பொழுதுதான் சொக்கன் அந்த வீட்டை விட்டு வெளியே வந்து தோட்டத்துப் பக்கம் வந்தான். அஞ்சுகம் மறைவிலிருந்து வெளியே வந்து வேலி ஓரமாக நின்று கையைச் சொடுக்கினாள்.

சொக்கன் அவளைப் பார்த்து விட்டான். அவனுக்கு ஏதோ திகைப்பு ஏற்பட்டது. அவசரம் அவசரமாக வேலிக்குச் சமீபமாக வந்தான். மனத்தில் எழுந்த ஏதோ பயத்தினால் அவன் கண்கள் நான்கு புறமும் சுழன்றன. மரத்தடியிலேயே ஒளிந்து கொண்டிருந்த விஜயரங்கன் சொக்கனின் உருவத்தைப் பார்த்துத் திகைப்படைந்து விட்டான். அவன் மனத்தில் பளிச்சென்று ஏதோ தோன்றியது. தன்னைப் பிரம்மா எந்த அச்சில் வார்த்து எடுத்தானோ அதே அச்சில் வார்த்து எடுத்தது போலிருக்கும் அந்த வாலிபனைப்பற்றிச் சிறிது சந்தேகம் அவன் மனத்தில் எழுந்தது. சிறிது யோசித்தான். ஆம்! அவன் உள்ளத்தில் 'சுரீ'ரென்று சொக்கன் யாரென்று அறிந்து கொள்ளக் கூடிய அளவுக்கு விளக்கம் ஏற்பட்டது. சகோதர வாஞ்சை... ரத்தபாசம் அவன் இருதயத்தைக் குலுக்கின. விஜயரங்கனுடைய உடல் பதறியது.

பல வருஷங்களுக்கு முன்னால் விஜயரங்கனுடைய தகப்பனார் தேவிப் பட்டணத்தில் 'விசாலாட்சி' என்னும் பெண்ணிடம் காதல் கொண்டிருந்தாராம். ஆனால் அவள் ஒரு பிள்ளைக் குழந்தையைக் காதலின் பரிசாகக் கொடுத்து விட்டு இவ்வுலகை விட்டு மறைந்து விட்டாளாம். விஜயரங்கனின் தந்தை தன் காதலியின் மறைவுக்குப் பிறகு அந்தக் குழந்தையைப் பற்றி அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. இவையெல்லாம் விஜயரங்கனின் தாயார் சொல்ல அவன் கேட்டிருக்கிறான். அந்தக் குழந்தையை அநாதையாக விட்டு விட்டதை விஜயனின் தாயார் அடிக்கடி சொல்லிக் கண்ணீர் வடிப்பதைக் கண்டிருக்கிறான்.

தன் உருவத்தையொத்த சொக்கனைக் கண்டதும் விஜயரங்கனுக்குத் தன் தகப்பனாரின் சரித்திரம் நினைவுக்கு வந்ததில் குற்றமென்ன? தன்னுடைய ரத்தம்தான் சொக்கனின் உடலிலும் ஓடுகிறது என்பதை விஜயரங்கன் உணர்ந்ததும் சொக்கன் மீது அவனுக்கு அளவற்ற பாசமும் பரிவும் தான் ஏற்பட்டன.

மரத்தடியில் மறைந்த வண்ணமே சொக்கனை ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தான். சொக்கன் அஞ்சுகத்தோடு எப்படிப் பேசுகிறான், என்ன பேசுகிறான் என்பதை அறியும் துடிப்புத் தான் அப்பொழுது விஜயரங்கனுக்கு அதிகமாய் இருந்தது.



சொக்கன் சமீபமாக வந்ததும் அஞ்சுகம் வேலியைத் தாண்டித் தோட்டத்துக்குள் குதித்து அவனுக்கு எதிரே போய் நின்றாள். முன்பு ஒரு நாள் பார்த்த அவ்வளவு கலவரத்தையும், சோகத்தையும் அப்பொழுது அஞ்சுகத்தின் முகத்தில் அவன் காணவில்லை. அவள் மனத்தில் ஏதோ ஒரு துணிவும், சந்தோஷமும் நிறைந்திருப்பதை அவள் முகத்திலிருந்தே அறிந்து கொண்ட சொக்கன் சிறிது வியப்பும் கலக்கமும் அடைந்தவனாய், '' அஞ்சுகம்! என்ன இந்த வேளையில் இங்கு வந்தாய்? உனக்குத்தான் நான் எச்சரிக்கை செய்து அனுப்பியிருந்தேனே, இங்கு வராதே என்று..? உன்னைப் பிடித்த ஆபத்து விலகி விட்டது என்று நினைத்தாயா..?'' என்றான் பரபரப்போடு.

அஞ்சுகம் கேலியாக ஒரு புன்முறுவல் பூத்தாள். '' ஆமாம்! என்னைப் பிடித்த ஆபத்து நீங்கி விட்டது. ஆனால் உங்களைப் பிடித்த ஆபத்துத்தான் விடாதுபோலிருக்கிறது'' என்றாள்.

''என்னைப் பிடித்த ஆபத்தா? எனக்கு என்ன ஆபத்து? எனக்கு இப்பொழுது ஒரு ஆபத்தும் இல்லையே!...'' என்றான் சொக்கன்.

''இல்லையென்று நீங்கள் மனக் கோட்டை கட்டலாம். ஒருவருக்கு வரும் ஆபத்துதெரிந்து தான் வருகிறதா? யாருக்கும் எந்த நிமிஷத்திலும் ஏதாவது ஆபத்து நேரலாம்'' என்றாள் அஞ்சுகம், மறுபடியும் கேலியாகச் சிரித்துக் கொண்டே.

'' நீ ஏதோ புதிர் போடுவது போல் பேசுகிறாயே?'' என்றான் சொக்கன் குழப்பத்தோடு.

''நீங்கள் நடத்திக் கொண்டிருக்கும் நாடகமே ஒரு புதிர்தானே? போகட்டும். அந்த நகைகளைத் திருடியது யாரென்று கண்டு பிடித்து விட்டீர்களா?'' என்று கேட்டாள் அஞ்சுகம்.

''அஞ்சுகம்! நீ பேசுவது எனக்கொன்றும் புரியவில்லை. நான் அந்த நகைகள் திருட்டுப் போனது சம்பந்தமாக இன்னும் உளவு கண்டு பிடித்துக் கொண்டுதானிருக்கிறேன். இன்னும் சரியான உளவு ஒன்றும் அகப்படவில்லை.''

'' எப்படி அகப்படும், திருடியவர்கள் கைக்குள்ளேயே நீங்கள் சிக்கிக் கொண்டிருக்கும் போது? அந்தத் திருட்டைக் கண்டு பிடிக்க நிர்மலாவும் உங்களுக்கு உதவி செய்கிறாளல்லவா?''

'' அஞ்சுகம்! நீ அவளிடம் ஏதோ சந்தேகப் படுகிறாய். உண்மையாகவே அவள் மிகவும் நல்லவள்.''



''நல்லவன்தான்; நீங்கள் அவனை நம்புகிற வரையில். போகட்டும், நீங்கள் இப்பொழுதும் விஜயரங்க துரையாகத்தானே இருக்கிறீர்கள்?''

சொக்கன் சிரித்தான். ''அதில் என்ன சந்தேகம்? நான்தான் விஜயரங்கன். என் பெயர் சொக்கன் என்பதுகூட இப்போது எனக்கே மறந்து விட்டது. உண்மையான விஜயரங்கனாகவே நான் ஆகிவிட்டேன். இனிமேல் இந்தக் குடும்பத்துச் சொத்துக்கெல்லாம் வாரிசு நான் தான். இனிமேல் உயில் எழுத வேண்டியது தான் பாக்கி'' என்றான்.

''ரொம்ப சந்தோஷம். இனிமேல் நீங்கள் படம்கூட எடுக்க ஆரம்பித்து விடுவீர்கள். கதை, வசனமெல்லாம்தான் உங்கள் கையில் இருக்கின்றனவே?''

''இனிமேல் நீ கொஞ்சம் கூடப் பயப்பட வேண்டாம். நமக்கு யோக காலம் வந்து விட்டது. என்னுடைய முதல் படத்தில் நீதான் கதாநாயகி. சினிமா உலகத்துக்கே உன்னைப் புதிய நக்ஷத்திரமாக அறிமுகம் செய்து அமர்க்களப் படுத்தி விடப் போகிறேன் பார். அலங்கம் என்ற பெயர் இருந்தால்தானே ஆபத்து? சினிமா உலகத்துக்குத் தகுந்தாற் போல் சந்திரா தேவி, இந்திர



குமாரி என்று ஏதாவது மாற்றி வைத்துக் கொண்டால் போகிறது!''

''தாராளமாக....பெயரை மாற்றி வைத்துக் கொண்டால் ஒருவருடைய ஏராளமான சொத்தையே தான் சுலபமாக அடைந்து விடலாம் என்கிற பொழுது சினிமாவில் நடிப்பதுதானா முடியாத காரியம்? போகட்டும். இவ்வளவு தூரம் நீங்கள் பேசுகிறீர்களே, உண்மையான விஜயரங்க துரை திரும்பி வந்துவிட்டால்..''

''உண்மையான விஜயரங்க துரையா? அப்படி ஒருவன் இன்னும் உயிருடன் இருக்கிறானா? அசட்டுத்தனமாகப் பேசாதே. செத்தவன் பிழைத்து வந்தான் என்று ஜென்மத்திலும் கேள்விப்பட்டிருக்கிறாயா?''

''பிழைத்து வந்தால் அது அபூர்வம் தான். அப்படியென்றால் அவர் இறந்துபோய் விட்டாரா?'' என்று கேட்டாள்.

''ஆசாமி கயா. ஆட்டம் ஓய்ஞ்சு போச்சு. அத்தியாயம் முடிஞ்சு போச்சு. அவனைப் பற்றிய கவலையே இனிமேல் நமக்கு இல்லை.''

''அது உங்கள் அதிருஷ்டம்தான். அதிருக்கட்டும். அவர் இறந்து விட்டார் என்று உங்களுக்கு நிச்சயம் தெரியுமா?''

''நிச்சயம் தெரியும்!''

''எப்படி?''

''ஆதாரம் இருக்கிறது.''

''ஆதாரமிருக்கிறதா? என்ன ஆதாரம்?'' என்று கேட்டாள் அஞ்சுகம்.

சொக்கன் அஞ்சுகத்தின் முகத்தை உற்று நோக்கினான். அவன் ஏதோ சம்சயம் கொண்டவன் போல், ''அஞ்சுகம்! நீ சொல்வது எனக்கொன்றும் விளங்கவில்லை. என்ன ஆதாரமென்று உன்னிடம் நான் சொல்லத் தயாராயில்லை'' என்றான்.

''ஒருவரிடமும் சொல்ல வேண்டாமென்று நிர்மலா சொல்லி வைத்திருக்கிறாளோ?'' என்று கேட்டாள் அஞ்சுகம்.

''அவள் பெயரை ஏன் இழுக்கிறாய்?''

''அவள் பெயரை இழுக்கக் கூடாதோ? அப்படின்னா எல்லாப் பழியையும் நீங்களே சுமக்கத் தயாராய் இருக்கீங்க போலிருக்கு! அன்பு அவ்வளவு முத்திப் போயிருக்குது!''

''பழிகளா?''

''ஆமாம். நகைகளைக் கொள்ளையடித்த பழி. கொலை செய்த பழி... எல்லாவற்றையும்...''

''அஞ்சுகம்! இதென்ன விபரீதமாகப் பேசுகிறாய்?''

''விபரீதமாகத்தானே எல்லாம் நடந்திருக்கின்றன. நான் விளையாட்டாய் பேச வரவில்லை!''

''என்ன விபரீதமாக நடந்திருக்கிறது?'' என்றான் அவன் நடுங்கியபடியே.

''நீங்கள் சொக்கனாக இருந்தவர் விஜயரங்கனாக மாறியது விபரீதம் இல்லையா? குறவர்கள் மூலமாக உண்மையான விஜயரங்கனைக் கொலை செய்யச் சொன்னது விபரீதமில்லையா?''

''குறவர்கள் மூலமாகக் கொலை செய்யச் சொன்னது உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டான்.

''நான் அந்தக் குறவர்களிடையே தானே இருக்கிறேன். எனக்குத் தெரியாமல் போகுமா?''

இதைக் கேட்டதும் சொக்கனின் இருதயத் துடிப்பே நின்றுவிடும் போல் இருந்தது. பயமும் குழப்பமும் அவனை வந்து சூழ்ந்து கொண்டு விட்டன. அவன் உடல் நடுங்கியது. குரல் தழுதழுத்தது. ''அஞ்சுகம்! உனக்கு இதெல்லாம் எப்படித் தெரியும்?'' என்றான்.

''எப்படியோ? அவரைக் கொலை செய்யும்படி நீங்கள்தானே ஏற்பாடு செய்தீர்கள்?''

''அஞ்சுகம்! இதற்கெல்லாம் காரணம் நானல்ல. நிர்மலாதான்!''

''நிர்மலாவா? அவள்தான் நல்லவளாயிற்றே?'' என்றான் நகைத்தபடியே.



"யாருடா, கோபுவா நீ? உன்னைச் சின்ன வயதிலே பார்த்தது; இப்பொழுது ஆளே தலை கீழா மாறிவிட்டாயே!"

"அவள் நல்லவளென்றுதான் நம்பினேன். அவள் அழகிலும் பேச்சிலும் மயங்கிப் போய் விட்டேன். ஆனால் அவள் ரொம்பப் பொல்லாதவள். எதற்கும் துணிந்தவள்."

"சரிதான். அப்படின்னா அவள்தான் அவரைக் கொலை செய்வதற்கு ஏற்பாடு செய்தாளா?"

"ஆமாம். யாரோ ஒரு குறக் கிழவி மூலம். அந்தக் குறத்திதான் அவனைக் கொன்று விட்டதற்கு ஆதாரமெல்லாம் கொண்டு வந்து கொடுத்தாளாம்..."

"அதற்காக அந்தக் குறத்திக்குத் தான் திருடி வைத்திருந்த நகைகளில் கொஞ்சம் வெகுமானம் கொடுத்தாள் போலிருக்கிறது."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ சொல்வதைப் பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கிறதே! நான் அவளை நம்பினேனே! கொலை செய்வது தகாது என்று எவ்வளவோ சொன்னேன். நான் இந்தக் குற்றங்களில் ஈடுபடாமல் இங்கிருந்து தப்பி ஓட எவ்வளவோ முயற்சி செய்தேன். என்னைப் பயமுறுத்தி நிறுத்திவிட்டாள். இப்பொழுது எல்லா ரகசியமும் வெளியாகி விட்டதா?"

"என்றோ ஒருநாள் வெளியாகாமலா இருக்கும்?"

"அப்படி யென்றால் ஆபத்து காத்திருக்கிறது என்று சொல்லு. படுபாவி. எல்லாவற்றையும் கெடுத்து விட்டாளே. நான் இரண்டொரு நல்ல படமாவது தமிழில் எடுக்கலாமென்று நினைத்துக் கொண்டிருந்தேனே. அவள் அழகிலும் பேச்சிலும் அநியாயமாக மயங்கி விட்டேனே. பாவி. பழிகாரி. துரோகி. சண்டாளி..."

"நீங்கள் ஆண்பிள்ளை. அவளுடைய அழகிலும் பேச்சிலும் மயங்கித் தகாத காரியங்களுக்கெல்லாம் உடன்பாடாக இருந்துவிட்டு வரிசை வைத்து இப்பொழுது வைகிறீர்களே! அதனால் ஒரு புண்ணியமும் இல்லை. இனிமேல் நீங்கள் எப்படித் தப்பிப் பிழைக்கலாம் என்பதற்கு வழி பாருங்கள். ஆபத்து பிடரியில் வந்து நிற்கிறது."

"ஆபத்து பிடரியில் நிற்கிறதா? ஐயோ, அஞ்சுகம்! என்ன செய்வேன்? எல்லாம் போலீசுக்குத் தெரிந்து போய் விட்டதா?" என்றான் திகிலோடு.

"இத்தனை நேரம் தெரிந்திருக்கும். அவர்கள் வந்து கொண்டே இருப்பார்கள். உண்மையாகவே விஜயரங்கன் இறக்கவில்லை என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று சொக்கனிடம் கேட்டாள் அஞ்சுகம்.

"அப்படின்னா அவர் இன்னும் உயிரோடு இருக்காரா?"

"உயிரோடுதான் இருக்கிறார். அவர் என்னோடு இங்குதான் இருக்கிறார். அவரை வேண்டுமானால் உங்களுக்குக் காட்டட்டுமா?" என்று சொல்லி மெதுவாகக் கையைச் சொடுக்கினாள்.

மரத்துக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு அவர்களுடைய சம்பாஷணைகளைக் கேட்டுக் கொண்டிருந்த விஜயரங்கன் மெதுவாக வெளியே வந்தான். சொக்கன் அவனைப் பார்த்ததும் பேய் அறைந்தது போல் திகைப்படைந்து நின்று விட்டான்.

"அஞ்சுகம்! நான் என்ன செய்வேன்? நான் அவள் பேச்சைக் கேட்டு மதிமோசம் போய் விட்டேன், அஞ்சுகம்! என்னைப் போலீஸ்காரர்களிடம் காட்டிக் கொடுக்கச் சொல்லாதே. என்னை மன்னித்து விடு. நான் ஒரு பாவமும் அறியேன். எனக்குப் புத்தி வந்தது. நான் எங்கேயாவது ஓடிப் போய்த் தலைமறைவாக இருந்து ஏதேனும் நல்ல தொழில் செய்து பிழைக்கிறேன்" என்றான் சொக்கன் துயரமும் துடிப்பும் நிறைந்தவனாக.

"உனக்கு நல்ல புத்தி வந்தால் சரிதான். அதிருக்கட்டும் உன்னுடைய தகப்பனார் யார்?" என்று கேட்டான் விஜயரங்கன். (அடுத்த இதழில் முடியும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam


LUX
TOILET SOAP
LUX
TOILET SOAP
LUX

